# ஸ்ரீ மயூரப் பெருமான் திருக்கோயில்

## பிரப்பன் வலசை




# குடமுழுக்கு விழா மலர்

உ

ஓம் குகப்ரஹ்மணே நம:

ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

பிரப்பன் வலசை

ஸ்ரீ மயூரப் பெருமான்—

பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்

# திருக்கோயில் குடமுழுக்கு விழா



சாதாரண ஆண்டு தைத்திங்கள் 18ம் நாளில்

[31—1—1971] வெளியிட்ட

# விழா மலர்

---

வெளியிடுவோர் :

செயலாளர்

ஸ்ரீ மயூரப்பெருமான் திருக்கோயில் கமிட்டி

பிரப்பன் வலசை

இருமேனி அஞ்சல் ∵ இராமநாதபுரம் மாவட்டம்

ஓம் குகப்ரஹ்மணே நமஃ



[தானன தனான தந்தன தானன தந்தன தந்தானு]

தோவடி யேன்மன வெந்துய ரோடறு வன்றுய ரன்பாலே
காவடி யார்பதி யென்றுவ பூரண கந்தம கிழ்ந்தாடே
மாவடி வேறிய பங்கயன் மாலுழ வந்துதொழும் படியார்
பூவடி மேவுச தங்கைவி டாதுபு லம்புசிலம் போடே.

ஐயாவோ பரமவரு ளப்பாவோ
வண்ணாவோ வயில்வே ருங்குங்
கையாவோ கமழ்கடப்பந் தாராவோ
வளப்பரு மோங்காரக் காமர்
மெய்யாவோ கடவுளர்கண் முதல்வாவோ
விமலாவோ விரதர் போற்றுந்
துய்யாவோ சுடருநுதற் கண்ணாவோ
மயிலேறுஞ் சுதந்தி ராவோ.




பாம்பன்
ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகள்

# ஸ்ரீ மயூரப் பெருமான் திருக்கோயில்

## திருப்பணிக் கமிட்டி உறுப்பினர்கள்

புரவலர் :
மாட்சிமை தங்கிய இராமநாத புரம் ராஜா
உயர்திரு. S. இராமநாத சேதுபதி அவர்கள்

தலைவர் :
அருள் திரு. சாது தங்கவேல் சுவாமிகள்
பாம்பன் சுவாமிகள் மடம், தெய்வச்சிலை நல்லூர்

துணைத்தலைவர் :
திருமதி. V. அரங்கநாயகி அம்மையார்
W/o திரு. N. ஜெயராமன் சென்னை

செயலாளர் :
திரு. T. கணேசம் பிள்ளை
பிரப்பன் வலசை

## அங்கத்தினர்கள்

திரு. S. அழகு BA. BL.
அட்வோகேட் மானா மதுரை

திரு. A. கிருஷ்ணசுவாமி முதலியார்
கோவை

திரு. M. V. R. வெங்கட்டராமன் செட்டியார்
முகவை

திரு. V. திருவரங்கராஜன் BA.
மானா மதுரை

திரு. A. M. இராமமூர்த்தி
வண்ணாங்குண்டு

திரு. N. சந்தான கிருஷ்ணன்
முகவை

திரு. N. பாலசுப்பிரமணியன்
மண்டபம்



<u>புரவலர்</u>

மாட்சிமை தங்கிய இராமநாதபுரம் அரசர்

## திரு. இராமநாத சேதுபதி அவர்கள்

திருப்பணிக்காக ரூ. 12,500

நன்கொடை வழங்கி நல்லமுறையில் ஊக்குவித்தப் பெருந்தகை.



**தலைவர்**

அருள் திரு சாது தங்கவேல் சுவாமிகள்

திருப்பணியில் ஒன்றி திருக்கோயில்
சமைத்த அருளாளர்.

**செயலாளர்**

திரு. T. கணேசம் பிள்ளை அவர்கள்

திருப்பணிக்கு அயராது உழைத்து
அழகான திருக்கோயில் அமைப்பதில்
அரும்பாடுபட்டவர்.





23-11-1969. அன்று மதிப்பிற்குரிய சேது பதி யவர்கள்
திருக்கோயிலுக்கு கால் கோள் நடத்தி
வெளி வரும் காட்சி



திருக்கோயில் அமைப்புக்குழு.




## இரத பந்தம்

இருள்பொருதா வம்பலச்சித் தென்னுமுரு காநீ
டிருவிண்ணோர் தேடுமருந் தேமாண் - பொருவாச்சீர்
தேசுதருஞ் செந்திநருந் தீர்த்தவிற லோங்குசிதா
வாசிறந்த மாவின் பருள்,

# பொருளடக்கம்



உ

ஓம்: குமார குருப்யோ நம:

# சமர்ப்பணம்

✠

வேதவேதாந்த சித்தாந்த சாஸ்திரங்களையும் ஏனைய ஞான நூல்களையும், மற்ற மத நூல்களையும் நன்குணர்ந்து. வேதாந்த - சித்தாந்த சமரசம் இனிது விளக்கிக் காட்டி, கொள்ளத்தக்கது இஃது தள்ளத்தக்கது இஃது எனச் சுருதி யுத்தி, அனுபவ வாயிலாகச் சாத்திர தோத்திர நூல்கள் மூலம் ஐயம்திரிபற விளக்கிய பெருந்தகை சுத்தாத்வைத வைதிக சைவசித்தாந்த ஞானபானு பாம்பன் ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகளே யாவர்.

சைவ நூல்களில் இவர்களுடைய அருளிச் செயல் கட்கு மேம்பட்டதாக எதனையும் சொல்ல இயலாது.

உலகத்து மக்கள் எப்படி ஒழுக வேணடும் எனத் தெளிவிக்க, பரம்பொருளினால் இப்பூவுலகுக்கு அனுப்பப் பட்ட மிகவுயர்ந்த ஞானகுருவாவர் நமது ஸ்ரீமத் சுவாமி கள். இவர்கள் சகல சக்திகளும் கைவரப் பெற்றவர்கள். கந்தவேளைக் கனவிலும் நனவிலும் தரிசிக்கப் பெற்றவர்கள். இவர்கள்வாழ்வில் முருகப்பிரான் பலதிருவிளையாடல்கள் புரிந்துள்ளான். ஆயினும் இறைவன் அளித்த கடன்மை யை உணர்ந்து மனிதன் எப்படி தெய்வநெறியில் ஒழுகல் வேண்டும் குருவின் நெறி. கடன்மை முதலியன யாவை, சீடனின் கடன்மை என்ன என்று நனி விளக்கிக் காட்டி அவ்வாறே ஒழுகியும் வந்துள்ளார்கள்.

ஸ்ரீமத் சுவாமிகள் பூதவுடலில் இருந்த காலத்தில் யாரும் அவரை வணங்குதல் கூடாது. வணக்கத்துக் குரியவன் பரம்பொருளே; குருவேறு, இறைவேறு; இறையா கிய பரம்பொருள் ஒன்றினையே தொழுதல் வேண்டும் என நனிவிளக்கியுள்ளார்கள். பூதவுடல் எடுத்தவரெவரும் பரம் பொருளே எனமதித்து வணங்குதற்குரியவரல்லர் என்பது ஸ்ரீமத் சுவாமிளின் முடிந்த முடிபு.

இம்மகான் ஸ்ரீ முருகப் பரமனையே ஞான குருவாக அடைதல் விழைந்து 1894ஆம் ஆண்டில் புண்ணியத் தல மாம் இப்பிரப்பன் வலசையில் 6 அடிக்கு 6 அடி சதுரக் குழி யமைத்து, இறைவனே நேரில் வந்து உபதேசம் அருளினால் மட்டுமே தாம் மீண்டும் எழுந்து வருவதாக உறுதி பூண்டு தவமியற்றினார்கள். ஏழாம் நாளிரவு ஸ்ரீ குமாரபரமேஸ்வரன்,

ஸ்ரீமத் அகத்திய முனிவரும், ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளுடைய ஞான பிதாவாகப் போற்றப் பெற்ற ஸ்ரீமத் அருணகிரிநாதப் பெருந்தகையும் உடன்வர எழுந்தருளி நமது சுவாமிகளுக்கு ஒரு மொழிஅருளிச் சென்றனர்.

[இக்காரணம் பற்றியே இத் திருக்கோயிலில் ஸ்ரீமத் அகத்திய முனிவருக்கும். ஸ்ரீமத் அருணகிரிநாத முனிவருக்கும் சிலா மூர்த்தங்கள் அமைத்துள்ளார்கள்]

இத்துணைப் பெருமை பெற்ற இப்புண்ணிய பூமியில் ஸ்ரீமத் சுவாமிகளுக்குத் திருக்கோயில் எழுப்பஎண்ணினேம். ஸ்ரீமத் சுவாமிகள் தவம் இயற்றிய இடம் சரியாகத் தெரியாமையால் தவறுதலாக வேறு ஒரு இடத்தில் கால்கோள் செய்ய உத்தேசிக்குங்காலை, 85 வயது மதிக்கத்தக்க இராக்கன்சேர்வை என்ற இவ்வூர்ப் பெரியவர் கனவில் சுவாமிகள் சடைமுடியுடன் தோன்றி அவர்கள் தவமிருந்த சரியான இடத்தைக் காட்டி அவ்விடத்தை வெட்டிப் பார்த்தால் 6 அடிக்கு 6 அடி களிமண் பூசப் பட்டிருக்குமென அடையாளமும் கூறி யருளினர்கள்.

மறுநாள், கடல் மணலால் சூழப்பட்ட அவ்விடத்தை வெட்டிப் பார்த்ததில் அவ்வாறே 6 அடிக்கு 6அடி களிமண் சுவர்போல் பூசப்பட்டிருந்தது. குருவருள் திறத்தை எண்ணி இறும்பூது எய்தி, திருக்கோயில் எடுக்கும்போது 5 அடிக்குக் கீழ், ஸ்ரீமத் சுவாமிகள் தவமியற்றிய காலை உபயோகப் படுத்தி வந்த மண் விளக்கு ஒன்று கிடைத்தது.

திருக்கோயில்பணி இனிது முடிவுற்றுக் குடமுழுக்கு விழா நடக்கும் இக்காலை எங்கள் எண்ணம் முற்றுற ஈடேற்றிய எங்கள் பரமாசாரியப் பெருந்தகை

**பாம்பன்**

## ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகள்

அவர்களின் இணையடித் தாமரைகளில் இந்த மலரும் ஒன்றுபடுக என்று வேண்டிச் சமர்ப்பிக்கின்றேம்.

ஸ்ரீமத் சுவாமிகளின் அடிமைகள்



**23—11—1969ல்**

**கால்கோள் விழா அன்று மாலையில் முகவையில்**
**நடந்த சொற்பொழிவின் போது அளிக்கப்பட்ட**

# வரவேற்புரை

✠

**ந. ஜெயராமன்**

பெருமதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, கனம் சேதுபதியவர்களே, அருளே உருவான திரு தங்கவேல் சுவாமிகளே, சமஸ்தான திவான் அவர்களே, திரு சே. த. ரா அவர்களே, மெய்யன்பர்களே.

இன்று ஒரு பொன்னுன நாள். 1894-ஆம் ஆண்டில் பாம்பன் ஸ்ரீமத் குமரகுரு தாச சுவாமிகள் 35 நாட்கள் கடுந்தவம் இயற்றி ஸ்ரீ முருகப் பெருமானிடம் உபதேசம் பெற்ற திவ்விய தலமாகிய பிரப்பன் வலசைப் பதியில் திருக்கோயில் எழுப்பும்பணியின் முன்னணியாக இன்று காலை நமது அரசர் பெருமான் அவர்கள் அடிக்கல் நாட்டியுள்ளார்கள்.

அரசர் இறைவனின் பிரதிநிதியென்பது தமிழ் மரபு நம் நாட்டிலுள்ள பெரிய கோயில்களெல்லாம் அரசர்களாலேயே கட்டப்பட்டன என்பது நம் எல்லோருக்கும் தெரியும். சேதுபதியவர்களின் முன்னேர்கள் ஆற்றிய அரும் பெரும் சைவத் தொண்டுகளும் திருப்பணிகளும் நான் உங்கள் முன் சொல்லப் புகுவது, கொல்லன் தெருவில் ஊசி விற்பது போலாகும். இவர்கள் ஆற்றிய பெரும் பணிகளில் பிரசித்தி பெற்ற சிவாலயம் திரு. இராமேஸ்வரம் என்பது உலகம் அறியும். திருப்பணிகளுக்கு வாரி வழங்கிய மரபு அவர்கள் மரபு. மிகுந்த தெய்வ பக்தியும் திருத்தொண்டில் மிக்க நாட்டமும் கொண்ட நமது அரசர் பெருமான் இத்திருக்கோயிலுக்கு அடிக்கல் நாட்டி திருப்பணிக் குழுவுக்குப் புரவலராகவும் இருந்து நடத்த முன்வந்தது இக்கோயில் இன்னும் கொஞ்ச காலத்தில் இப்போதுள்ள பெருங் கோயில்களுக்குள்ள பல சிறப்புக்களையும் பொருந்தியமையும் என்பதற்குக் கண் கூடாய் அமையும்.

கோயில் திருப்பணி அரசர் முயற்சியில் நடந்தாலும் திருப்பணியை உடன் இருந்து கவனித்து வந்தவர்கள் துறவிகளே.

உதாரணமாக தஞ்சைப் பெரிய கோயில் இராஜ ராஜ சோழன் கட்டினர். அதனை உடன் இருந்து கவனித்து வந்தவர் கருவூரர் என்னும் துறவியே. அருளே உருவாக இங்கு அமர்ந்திருக்கும் திரு தங்கவேல் சுவாமிகள், ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள்பால் மட்டிலா அன்பு பூண்டவர்கள். ஸ்ரீமத் சுவாமிகள் போலவே உப்பில்லா உணவு உண்ணும் நியதி மேற்கொண்டுள்ளார்கள். சுவாமிகள் காட்டிய நல்வழியில் ஒழுகித் துறவிக்கேற்ற சகல இலக்கணங்களும் ஒருங்கே கைவரப் பெற்றவர்கள். இவர்கள் இப்புனிதத் திருப்பணியை ஏற்றுக் கொண்டு செயலாற்ற முன் வந்தது பழம் பாணியை மேற் கொண்ட இத் திருப்பணியின் சிறப்பையே குறிக்கிறது.

திருப்பணிக்குப் பொருள் அவசியம் பொருளை ஈட்டுவதை விட அதனைக் காத்து உரிய பணியில் சேர்ப்பது கடினம். அதற்கு இறைவன்பால் பயத்துடன் கூடிய பக்தி கொண்ட ஒரு பொருள் காப்பாளர் தேவை. வெறும் பக்தி மட்டும் இருந்தால் போதாது. அது பயத்துடன் கூடிய பக்தியாக இருக்க வேண்டும். அப்போதுதான் இறைவன் திருப்பணிக்காக ஒதுக்கிய பொருளில் நாம் கை வைத்தால் அதற்குரிய தண்டனை உண்டு என்ற மனப்பாங்கு உண்டாகும். அப்பக்குவம் நமது செயலாளர் திரு கணேசப் பிள்ளையிடம் பூரணமாக நான் காண்கிறேன். இது உண்மையே.

சாதாரணமாக மக்களின் எண்ணம் கோவில் பணத்தை எடுத்துச் செலவு செய்து விடுவது மிகச் சுலபம் என்பதாக உள்ளது. அதனுல் அவர்கள் துயர் அடைவதாகக் கருதுவதில்லை. நான் கண் கூடாகக் கண்டது நல்லவர்கள் தவறு செய்யும் போது உடனே தண்டிக்கப் படுகிருர்கள். மற்றவர்கள் உடனே தண் டிக்கப் படுவதில்லை. அதனுல் அவர் கள் எப்போதும் தண்டிக்கப் படமாட் டோம் என இறுமாந்திருப்பது சரியாகாது. பாம்பன் சுவாமிகள் மிகக் கடுமையான நேர்மையான துறவி. அவர்கள் செவ் வேட் பரமனின் அருளைக் குறிப்பிடும் போது "இகலுநருக்கு எமனுந்தனி மந் திர- இனியவருக்கு இனிதாம் குண பஞ் சர" எனக் குறிப்பிடுகிருர்கள். நம் குரு நாதரும் அப்படிப்பட்டவர்களே. அவர் களை உண்மை அன்புடன் நேசிக்கிறவர் களுக்கு எக்காலத்தும் எத்துன்பமும் நேராது. உண்மை அன்பு என்பதன் பொருளை உணர்ந்து நேசிக்க வேண்டும்.

ஒருநாள் நான் என் பிராமண நண்பர் ஒருவருடன் காஞ்சிபுரம் சென்றேன். அங்குக் கடைவீதியில் 10 முழம் புஷ்பம் வாங்கிக்கொண்டு குமரகோட்டம் சென் ருேம். அங்கு வடக்குப் பிரகாரத்தில் ஸ்ரீமத் சுவாமிகளின் படம் ஒன்றும் அதன் பக்கத்தில் ஸ்ரீமத் அருணகிரி நாதர் படம் ஒன்றும் அதன் பக்கத் தில் ஸ்ரீ முருகப்பெருமான் படம் ஒன்றும் வைக்கப் பட்டிருக்கின்றன. கொண்டு போன புஷ்பத்தில் 6 முழம் எடுத்து பாம்பன் சுவாமிகள் படத்துக்கும் 2 முழம் ஸ்ரீமத் அருணகிரிநாதர் படத்துக்கும் ஒரு முழம் முருகப் பெருமான் படத்துக் கும் அவரைக்கொண்டே போடச் செய் தேன். ஒரு முழம் புஷ்பம் எடுத்து மூலவருக்குச் சாத்தி அர்ச்சனை செய்து கொண்டு வெளியில் வந்தோம். நேராக ஓட்டலுக்குச் சென்ருேம். பசி வேளை தான். ஆனுல் உடன் வந்த அன்பர் திடீரென்று வயிறு சரியில்லை யென்று ஒன்றும் சாப்பிடவில்லை. சினிமாவுக்குச் சென்று சுமார் இரண்டுமணி நேரம் உட் கார்ந்தேன். அன்பர் உள்ளே உட்கார வேயில்லை. நான்வெளியே சென்று பார்த் தபொழுது வாந்தி வருகிறது வயிற்றுப் போக்கும் இருக்கிறது என்ருர். உடனே அவர் டாக்டர் வீட்டுக்குச் சென்று மருந் தும் சாப்பிட்டுவிட்டு வந்தார். இந்த இரண்டு மணிநேரத்தில் சுமார் 6, 7, முறை வயிற்றுப் போக்கும் வாந்தியும் ஆகிவிட்டது. அவரால் ஒன்றும் முடிய வில்லை. உடனே ஒரு போர்வை வாங்கிப் போர்த்தி இரவு 10 மணிக்கு அவரை வீட்டில் சேர்த்து விட்டு நான் என்வீட் டுக்குப் போய்விட்டேன். மறுநாள் காலை 10 மணிக்கு அவர் அலுவலகத்துக்கு எப்போதும் போல் வந்து சேர்ந்தார் அவரிடம் இரவு ஏன் அப்படியாயிற்று எனக் கேட்டேன். அவருடைய பதிலா வது "உங்கள் சுவாமிமிகவும் கோபக்காரர் சார். நேற்று 10 முழம் புஷ்பம் வாங்கும் போது அது மூலவருக்குத்தான் என எண்ணினேன். பெரும் பங்கு ஒரு சாதாரண படத்திற்கு போட்டுவிட்டீர் களே. என ஒருமாதிரி அழுக்காறு ஏற்பட் டது. 10 முழத்தில் ஒரு முழந் தானு முருகப் பெருமானுக்கு என உள்ளம் குமுறிற்று. நான் வீட்டுக்குப் போனவுடன் இன்று என்னதான் தவறு செய்தோம் என நினைத்துப் பார்க்கும்போது சாப்பாட்டில் கூடத் தவறு ஒன்றும் இல்லை. மேற் கண்டவாறு எண்ணியதுதான் தவறு என உணர்ந்து வருந்திய உடனேயே எனக்கு உடல்நிலை சுகமாவதை உணர்ந் தேன். இப்போது ஒன்றும் இல்லை. குண மாகி விட்டது. உங்கள் சுவாமியிடம் மிகவும் பத்திரமாக நடந்து கொள்ள வேண்டு" மென்ருர். அதற்கு நான் அளித் த பதிலாவது :

"ஐயா இந்த ஒரு நிகழ்ச்சி நீர் நல் லவர் என்பதைத்தான் குறிக்கின்றது. ஒருதவறு செய்து அதற்கு உடனே தண்டனை கிடைத்து நாம் திருந்தி விடு வோமானுல் அது நம்முடைய நன்மனப் பாங்கையே குறிக்கும். அடியவர் பூசனை யில் ஆண்டவன் மகிழ்ச்சி கொள்வான். குழந்தையைக் கொஞ்சினுல் பெற்ருேர் மகிழ்வு கொள்வதுபோல" என்பதே.

பிரப்பன் வலசை என்னும் குக்கிராமத் தில் இந்தத் திருக்கோயிலை எழுப்புவா னேன் எனும் ஒரு சங்கை ஏற்படலாமல் லவா? சாதாரணமாகப் பெரிய நகரங்

களில் கோயில் கட்டினுல் மக்கள் அதிகம் போய் வருவார்கள். சிறிய கிராமங்களில் உள்ள கோயில்களுக்கு மக்கள் வரவு குறைவாகத்தான் இருக்கும். அப்படியிருக்க இங்கு ஏன் கோயில் கட்டப்பட வேண்டும்?

ஸ்ரீமத் அருணகிரிநாதப் பெருந்தகை திருவண்ணுமலையில் இறைவன் தரிசனம் விழைந்து இறைஞ்சிய பொழுது, " வயலூருக்கு வா " என ஆஞ்ஞையாயிற்று. அங்கு சென்றபோது அவருக்குத் தரிசனமும் கிடைத்தது. அதுவே அவருடைய அனுபூதித் தலமாகும். அவ்வாறே மதுரையைச் சார்ந்த ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் விழைந்த பொழுது திருப்போரூர் வர ஆஞ்ஞையாயிற்று. இவ்வண்ணம் பாம்பனில் வசித்து வந்த ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகளுக்கு இறைவனையே ஞானசிரியனுகப் பெற விழைவு ஏற்பட்ட பொழுது அவருக்குப் பிரப்பன் வலசை வரும்படி குறிப்பு ஏற்பட்டமையினுல் தான் இவ்வூருக்குச் சென்று தவம் இயற்றியுள்ளார். இது ஸ்ரீமத் பாம்பன் பெருந்தகைக்கு அனுபூதித் தலமாகும்.

ஸ்ரீமத் சுவாமிகள் சரித்திரத்தைப் படித்தவர்கள் இதனை நன்கு உணர்வார்கள். ஒவ்வொரு செயலிலும் இறைவனுடைய திருஆணைக் குறிப்புக் கொண்டே இவர்கள் இயங்கி வந்திருக்கிருர்கள். அவ்வண்ணம் நிமல நிட்டை சாதிக்க இறைவன் ஆணைகொண்டு தேர்ந்தெடுத்த ஊர் தான் பிரப்பன் வலசை. நிமல நிட்டை கூடும் தலத்தின் பெருமை பற்றி ஸ்ரீமத் சுவாமிகள் குறிப்பிடும் போது உடம்பிலே உள்ள பல உறுப்புகளும் தேவை தான் என்ருலும் இருதயம் போன்ற சில தானங்களே விசேடமாதல் போல உலகில் நிமல நிட்டை சாதிக்கக்கூடிய தலம் ஒரு சிலவே. அவை தேவர் வாழ் ஊர் என்கிருர். இத்தலத்தைக் குறிப்பிடும் போது,

'எத்தனை யோதலஞ் சுற்றிவந்
தேன்மன மெட்டுணையு
மத்தன் குமாரன் முருகனை நாட
வடங்க வில்லை
பத்தர்கள் வாழ்பிரப் பன்வல
சைச்செம் பதிதனிலே
சத்திய மாகக்கை கூடின தாலினித்
தாழ்விலையே' என்றும்,

"பிரப்பன் வலசை
சென்ற வரும்
இருந்த வரும் அன்புடைய
ராவர்" என்றும்

"இதனை நண்ணுபவரன்
புடையராவர்" என்றும்

"நடுநிற்கு நிலையைச் சொலி
மறைந்த விடம்" என்றும்

"சோணகிரி (ஸ்ரீமத் அருணகிரி நாதர்) கண்ட விரு பத்ம வடியைக் கூட வென நாமினிது கொண்டநடைகட்கு உதவி செய்த ஊர்" என்றும் பலவாறு புகழ்ந்துள்ளார்கள். இதுவரை இவ்வூரில் ஒரு சிவாலயம் இல்லா விடினும், நிமலநிட்டை கூடினதால் இது தேவர்வாழ் ஊராகும். இதுவே இதயத் தானத்துக் கொப்புதலான புண்ணிய தலமாகும்.

ஸ்ரீமத் அருணகிரிநாதப் பெருமானுக்கு இவ்வருள் வயலூரில் கிட்டியது என்று நாம் பார்த்தோம். இது நடந்து சுமார் 700 ஆண்டுகட்கு மேல் ஆயிற்று. அப்பெருமான் அந்த ஊர் சென்றபோது அங்கு ஒரு தலம் இருந்ததோ என்னவோ நமக்குத் தெரியாது. ஆனுல் இன்று அங்குள்ள முருகன் தலம் வசீகரிக்கத் தக்க முறையில் உள்ளது. திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள் தலைமையில் பல இலட்சக் கணக்கான செலவில் கோவில் புனருத்தாரணம் சமீபத்தில் முடிந்தது. சென்ற வைகாசியில் கும்பாபிஷேகமும் நடந்தது. அத்தலத்துக்குச் சமமான தாகும். இப்பிரப்பன் வலசை என்பதில் யாதும் ஐயமின்று.

இக்காரணங்களால் தான் இத்தலத்தில் ஸ்ரீ முருகப் பெருமானுக்கு ஆலயம் எழுப்புப் திருப்பணி ஆரம்பிக்கப் பட்டுள்ளது. ஸ்ரீமுருகப் பெருமானுக்குத் திருக்கோவில் எழுப்பும் திருப்பணி பதி புண்ணியம் நல்கத்தக்க திருத் தொண்டாகும். இத்தலத்தில் தவமியற்றிய ஸ்ரீமத் சுவாமிகள் யாவராலும் குருவாகக் கொள்ளத்தக்கவர் ஆவார்.

ஸ்ரீமத் சுவாமிகள் சமயாசாரியர்களில் திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், அருணகிரிநாதர், தாயுமானுர் ஆகியவர்களின் வரிசையில் வருபவர் என்று இவர்கள் ஆக்கிய பாக்களை

யும், சாத்திரங்களையும் ஆழ்ந்து படித்தவர்கள் நன்குணர்வார்கள். சுவாமிகள் "ஒரு தெய்வ" வழிபாட்டின் பெருமையை நன்குணர்த்திச் சிவ பெருமானும் ஐம்முகச் சிவ மூர்த்தமும், முருகப் பெருமானும் அறுமுகச் சிவ மூர்த்தமும் வேறு அல்ல, ஒன்றே என்று தெளிவித்து, வேதாந்த சித்தாந்த சமரசங்களை நன்கு விளக்கிக் காட்டிக் கொள்ளத் தக்கது சைவமே, வழி படற்குரியது செவ்வேட் பரம மூர்த்தமே என அங்கையில் நெல்லி யங்கனியெனக்காட்டியுள்ளார்கள். பெரும் சமயாசாரியர்கள் அருளிச் செய்தவை யாவும் செய்யுள் வடிவிலேயே உள்ளன.

பிற்கால உரையாசிரியர்கள் சாத்திர அறிவு வாயாமையால் தம் உரைகளில் பல தவறுகளைச் செய்துள்ளார்கள். உதாரணமாக சடக்கரம் "நம: குமாராய" என திருமுருகாற்றுப் படை உரையாசிரியராம் நச்சினார்க்கினியர் செய்துவைத்துள்ளார். ஆனால் ஸ்ரீமத் சுவாமிகள் இது நாம மந்திரமே என்றும் சடக்கரம் என்பது சகாராதி ஆறக்கரங்களே என்றும் நனி விளக்கியுள்ளார்கள். சிவ பரத்துவத்தை நிலை நாட்டிப் பரிபூரணானந்த போதம், தகராலய ரகசியம், திருப்பா போன்ற சாத்திரங்களும் பல வினா விடைகள் கொண்ட சிவ ஞான தேசிகம் என்னும் தலைப்பில் வியாசங்கள் பலவும் அருளியுள்ளார்கள். அநுட்டான முறையை விளக்கிச் சிவஞான தீபம் போன்ற சாத்திரங்களையும் செய்துள்ளார்கள். தேவாரம், திருவாசகம் திருப்புகழ் முதலிய அருட்பாக்களில் ஆண்டுள்ள அத்துணைப் பலவகைப் பாக்களையும் அதற்கு மேலும் சித்திரவிசித்திரக் கவிகளையும் செய்து காட்டியுள்ளார்கள். இவற்றையெல்லாம் நன்கு படித்தவர்களுக்குச் சமயக் கல்வியில் ஏற்பட்டுள்ள ஐய மெல்லாம் நீங்கி விடும். இலக்கண இலக்கிய ஆற்றலில் தன்னிகர் இல்லாப் பெருந்தகை ஸ்ரீமத் சுவாமிகளின் நூல்களை இன்னும் சரியாக உலகினர் படிக்கத் தொடங்கவில்லை.

ஸ்ரீமத் சுவாமிகள் மாசில்லாத பெருந் துறவி. உலக நடை புகழ் விழைதல் கலக நடைத்து என ஒதுங்கி யிருந்தவர்கள். செவ் வேட்பரமன் இவருடன் எப்பொழுதும் குழந்தை வடிவில் விளையாடிக் கொண்டிருந்தார் என இவருடன் பழகியவர்கள் நன்கு அறிவர். ஸ்ரீமத் சுவாமிகளிடம் நெருங்கிப் பழகிய விசுவநாத சாஸ்திரியார் என்ற பெரியார் பலமுறை சுவாமிகள் தங்கியிருந்த தனி அறைக்குள் நுழைந்த பொழுது ஒரு செவ்விய குழந்தை சுவாமிகளின் தோளின் மேல் விளையாடிக் கொண்டிருக்கக் கண்டுளர். உள்ளே நுழைந்ததும் மூவி குமறைந்து விடும். இது பற்றி சாஸ்திரியார் சுவாமிகளைக் கேட்டால் "பார்த்தீர்களா" எனக் கேட்டுப் புன்னகை புரிந்து பேச்சை மாற்றி விடுவார். செவ்வேட்பரமனுடைய அருளில் மூழ்கித் திளைத்தவர்களில் இவர்களுக்கு இணையாக யாரையும் சொல்ல இயலாது. அவர்களுடைய திருவாக்குகள் அனைத்தும் சத்திய வாசகமே யாம்.

"கோத்தயிர்வெண் ணெய்த்திருடன்
கோலமரு காநறிய
பூத்திருடன் தன்மதலாய்
பொங்குகுறசு—கோத்திரத்தோர்
பெண்திருடிச் சென்ற
பெருந்திருடா என்போதம்
உண்டுதிரு டத்தெரியா யோ"

என்ற பாட்டைச் சுவாமிகள் ஒரு ஓலை நறுக்கில் எழுதித் தலையணை யடியில் வைத்து ஒரு தனிஅறையில் படுத்திருந்த போது அவரை யாரோ முதுகல் தட்டியது போலிருந்தது. விழித்துப் பார்த்த போது யாரும் இல்லை "இப்பாட்டு திருஉளத்திற்குச் சம்மதம் இன்றேல் மீண்டும் அறிவுறுத்தினால் நீக்கி விடுவேன்" எனக் கூறி மறுபடியும் படுத்த போது அவ்வித அறிகுறி ஒன்றும் இல்லாததால் இறைவன் திருவுள்ளம் இதனை விரும்பி ஏற்றதாகக் கருதி அகமகிழ்ந்தார். ஸ்ரீமத் சுவாமிகளைப் பெருமானே இன்ன இன்ன வகையில் பாடுக எனப் பணித் துள்ளமையை "திருப்பா" என்னும் நூலில் "கந்த சாமி" எனும் பதிகத்தால் அறியலாம்.

ஸ்ரீமத் சுவாமிகள் அருளிய மந்திர மறை நூல் சண்முககவசமாகும். இதனைஓதிப் பயனடைந்தவர் தொகை எண்ணிலடங்கா. சைவரன்றி ஏனைய சமயத்தின

ரும் இதனைப் பக்தி பிறங்க ஓதிப் பய னடைவது உலகறிந்த உண்மை.

சுவாமிகளுடைய பஞ்சாமிர்த வண் ணம் என்னும் அரியநூல் சிந்தைக் கினியதும், செவிக்கினியது மென செந் தில்பதியிலே முத்தம்மைஎனும் மூதாட்டி யிடம் இறைவன் நேர் நின்று மொழிந் தருளினர் என்பது,

“ பரிவாளர்க ளங்கோதொரு
பஞ்சாமிர்த வண்ணம்
இரியாவென துளநச்சினிதா
மெனவுரோர் கிழமை
பெரியாண்முனம் வந்தோதிய
செந்திற் பெருமானே
வரிமாமறை இறைவனையெனை
மறவே லெனை மறவேல் ”

எனும் பாடலால் விளங்குகிறது.

ஸ்ரீமத் சுவாமிகளைக் குருவாக ஏற்ற குமரானந்த அம்மையார் பூஜை செய் யும் போது பலமுறை ஸ்ரீ மயூரப் பெரு மானைத் தரிசித்து அதனைச் சுவாமிகளிட மும் சொல்லியிருக்கிருர்கள்.
சுவாமிகள்,

“ஆளு நின்னடி சூழு நர்க்கரு
ளயில மற்று மெனக்கிடு
கேளு யர்ந்தெனை நம்பு மன்பு
கிளர்ந்த வர்க்கு மியைந்தசீர்
நாளுநல்குதி நாயெனைத் தளி
ஞலு மென்றனை நம்பியுன்
தாளுகந்தவ ரைப்பராபர
தள்ளிடாதடி நல்கியாள் ”

என்று இறைவனை இறைஞ்சித் தம்மையே தள்ளி விட்டாலும் தம் வழி நின்று இறை வனை நம்பியுள்ளவர்களை எக்காலத்தும் தள்ளிடாது அருளும்படி வேண்டியுள் ளார்கள். தமது சீடர்களை விளித்து அளித்த செவியறிவுறூஉவில் யான் யாது பெறுவேனே அது நினக்கும் பிராப்த மாம். ஒருவனையே நம்பியுள்ள என்னை நம்புவோர்க்கு அவ்வொருவனருள் செய் வதைச் செய்யவுளது அதற்கது கடன் மையாம். அவன் யாவுங் கண்டு கொண் டிருக்கிருன்” என்று நிச்சயித்திருக்கிருர் கள். இறைவன் பரம ரகசிய சக்தி. அது இரகசியத்தையே விரும்பும். ஆதலின் சுவாமிகள் தமக் குற்ற இரகசியப் பேரனு பவங்களை அதிகமாக வெளியில் சாத்திர மூலமாகச் சொல்லாமல், தோத்திரங்களில் இலைமறை காய் போல் இயம்பி யுள் ளார்கள்.

மேற் போந்த சிறப்புக்களினுல் ஸ்ரீமத் சுவாமிகளைக் குருவாக அடைந்து அவர் கள் காட்டிய செந்நெறியில் நாம் நிற்போ மானுல் இறைவனுடைய திருவருள் பூரணமாகப் பெற்று இகபரசௌபாக்கியங் களையும் இனிது பெறலாம்.

இப்போது பேசப்போகும் திருப்புகழ்ச் சதுரர் திரு சே. தா. இராமலிங்கம் பிள்ளை யவர்கள் ஸ்ரீமத் சுவாமிகளை நேரில் தரிசித் துச் சில சமயங்களில் சுவாமிகள் செய்த உபந்நியாசங்களையும் கேட்டவர்கள். ஸ்ரீமத் சுவாமிகளுடைய சீடர்களில் ஒருவராய அத்தியாச்சிரம சீடர் ஸ்ரீமத் பாலசுந்தர சுவாமிகள் பால் உபதேசம் பெற்றவர் ஆவர். ஆதலின் இவர் ஸ்ரீமத் சுவாமிகளின் வழித் தோன்றல் என்று சொல்லலாம். மேலும், சுவாமிகளு டைய நூல்களை நன்கு படித்து உணர்ந்த வர். சுவாமிகளின் பெருமைகளை நன்கு விளக்கிச் சொல்ல இவருக்குச் சமம் இல்லை யென்றே சொல்லலாம்.

இந்தச் சொற்பொழிவுக்குத் தலைமை தாங்கும் மன்னர் இளவல் மதிப்பிற்குரிய காசிநாத துரையவர்களைப் பற்றி அறியா தார் இலர். இவர்கள் சைவ நலங் கனிந்த பேரன்புடையார். இவர்கள் பல சைவசித் தாந்த மாநாடுகளைச் சிறப்புற நடாத்திய வர்கள். பல திருப்பணிகளில் பெரும் பங்கு கொண்டு தொண்டு ஆற்றி வருபவர்கள். ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள்பால் மிக்க அன்பு பூண்டவர்கள்.

இப்பெரியார் இவ்விழாவைத் தலைமை தாங்கி நடத்துவது சாலப் பொருத்தமே. தலைவர் அவர்களையும் மன்னர் பெருந் தகை அவர்களையும், அருள் திரு சுவாமி களையும் மற்றும் குழுமியுள்ள மெய்யன் பர்கள் அனைவரையும் வருக வருக என வரவேற்றுத் தலைவர் அவர்களை நிகழ்ச்சி களை இனிது நடத்தித்தருமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

வணக்கம்.

குமரகுருதாச குருப்யோ நம:

# பிரப்பன் வலசைத் திருக்கோயில்

அருள்திரு. தங்கவேல் சுவாமிகள்



உள்ளம் ஒன்றி நிற்க உருவம் வேண்டும். மனம் ஒன்றைப் பற்றி நின்றே உயரும் மனோ தத்துவத்தை நன்றாக உணர்ந்த இந்தியப் பெருமக்கள் அறிவு உருவத்தை யுடைய இறைவன் நம்முடைய பரிபாக நிலைகட்கு ஏற்ப உருவங் கொண்டு தானே எழுந்தருளினால் அன்றி உள்ளம் ஒன்றி ஒருமைப் படாது என்று உணர்ந்தவர்கள். இறைவன் அவரவர்களுடைய பரிபாக நிலை கட்கு ஏற்ப உருவத் திருமேனி தாங்கி எழுந்தருளுகின்றான். உருவத் திருமேனி யைக் குரு உபதேச வழியினின்று சிந்தித்து உயர்ந்த மகரிஷிகள், முனி புங்கவர்கள் தத்தம் சிந்தனையை அனைவரும் அடைந்து ஈடேறத் தியான சுலோகங்களாகத் திரட்டித் தந்தார்கள். அவர்கள் அவ்வண்ணம்திரட்டித் தரச் சிவாகமங்கள் வழிகாட்டின. சிவாக மங்கள் சிவபெருமானுடைய திருவாக்கு களே என்பது முடிந்தமுடிபு. இந்தச் சிவா கமங்களையும் தியான சுலோகங்களையும் கொண்டு கடவுளைக் காட்டும் கலைத் திறனாகிய சிற்பம் செழித்தது. சிந்தனையில் எழுந்த தியானத் திருவுரு செய்திறனாகச் செம்பிலும், கல்லிலும், மரத்திலும் சிற்பியின் சிந்தனைச் சிறப்பினாலும், கற்பனை வளத்தா லும், கலைத்துடிப்பாலும் கடவுள் திருஉருவத் திருக்கோலமாக உருவாயிற்று. உருவங்கள் சிந்தனையாளனுடைய சித்தத்தின் ஈடுபாட் டைத் தெரிவிக்கும் அழகுக் கருவூலங்கள் ஆயின.

அழகிலே கண் பதிந்து, ஐந்து பேர றிவும்கண்களே கொண்டன. அழகுத் தெய்வம் அருள் சுரந்தது. ஆகவே கலையின் வழியாகக் கடவுளைக் கண்டு கருணையைப் பெற்றனர் மக்கள்.

இத்தகைய கடவுள் உருவங்களை வைத்து வழிபடற் கேதுவாக, யாவும் இறைவன் பெ ருமை விளங்கும் அழகார் கோவில்களாய், நாடும் இறைவன் நடனம் புரியும் கலமா ராலயமாய், கர்ப்பக் கிரகம் மாமண்டபமாய் கடவுள் அறிகுறியாய், பொற் கோபுரமுடன் கற்கால் வடிவாய்ப் புனிதத் திருக் குளமும் சிற்பக் கலையுடன் பொற்போவியமாய்த் திகழும் மதில் அரணாயச் சூழ ஆலங்களை அமைத்து வழிகாட்டினர் ஆன்றோர். மறைக ளின் முடிவால் வாக்கால் மனத்தினால் அளக் கொணாமல் நிறைவுடன் யாண்டுமாகி நின்றி டுவன் நிமலமூர்த்தி. தன் வயத்தவனாய், தூய உடம்பினனாய் இயற்கை உணர்வினனாய் முற்றும் உணர் இயல்பினனாய், பாசம் நீங்கி யவனாய் பேரருளுடையவனாய் ஈறிலா ஆற்ற லுடையவனாய், வரம்பிலா இன்ப முடைய வனாய்த் திகழும் இறைவன் அழகு நடமாட கருணை வழிந்தோட வான் பழித்திம் மண் புகுந்து மனிதரை ஆட் கொள்ளும் வள்ளல் ஆவான். அவன் உருவத் திருமேனியும் அருவத் திருமேனியும், தாங்கி இரப்பவருக்கு ஈயவைத்து ஈபவருக்கு அருளும் வைத்து பாடுவார் பசிதீர்த்து பரவுவார் பிணி களைந்து அவரவர் வினைகள் நாடி அதற்படு பொருளை நல்கி அருளாட்சி நடத்தும் புனித இடமே ஆலயங்களாகும்.

கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண் டாம், என்ற முது மொழிப் படியும் 'திருக் கோயில் இல்லாத திருவில் ஊரும்' என்ற அப்பர் தமிழ் மறைப் படியும் தமிழ கத்தில் ஆலயங்கள் இல்லாத ஊரே இல்லை எனலாம். இன்று பாரத நாட்டின் அழியாத செல்வங்களாகப் புகழின் கருவூலங்களாக, சமயச் சின்னங்களாக நமது ஆலயங்கள் திகழ்கின்றன. இவ்வாறு பாரதமெங்கும் அமைந்த கணக்கற்ற ஆலயங்களில் தில்லை முதல் ஈங்கோய் மலைவரை சோழநாட்டுக் காவிரியின் வடகரை சிவஸ்தலங்கள் 63ம் திருவாட் போக்கி முதல் திருக்கோடிக்கா வரை சோழ நாட்டுக் காவிரியின் தென் கரை தலம் 128ம், திருக்கோண மலையும்

திருக் கேதீச்சுரமும் ஆகிய ஈழநாட்டுத் திருத் தலம்2ம், மதுரை முதல் திருநெல்வேலி வரை பாண்டி நாட்டுத் திருத்தலம்14ம், சேர நாட்டுத் திருவஞ்சை களம் 1ம், அவிநாசி முதல் கருவூர் வரை கொங்கு நாட்டுத் தலம் 7ம், திருவரத்துறை முதல் திருவண்ணுமலை வரை நடு நாட்டுத் தலம்22ம், காஞ்சிபுரம் முதல் இரும்பை மாகாளம் வரை தொண்டை நாட்டுத் தலம்32ம், துளுவ நாட்டுக் கோகர்ணம்1ம், பருப்பதம் முதல் கைலை மலை வரை வடநாட்டுத் திருத்தலம்5ம் ஆகத் தேவாரத் திருமுறை பெற்ற தலங்கள் 275ம் சிவாலயங்களில் தனிச் சிறப்புடையதாகப் போற்றப்படுகின்றன.

ஸ்ரீ அருணகிரிநாதர் அருளிய தெய்வத் திருப்புகழ்ப் பாடல் பெற்ற முருகஸ்தலங்கள் திருவண்ணுமலையிலிருந்து தெற்கே திருத் துருத்தி என்கின்ற குற்ருலம் வரை 177 திருத்தலங்களும், திருவண்ணுமலையிலிருந்து வடக்கே அமராவதி என்கின்ற கற்பகவூர் வரை 59 திருத்தலங்களும் ஆக 236ம் (முருகஸ்தலங்களும்) விசேட சிறப்புடையன வாகக்கருதித் திருப்புகழ்த் தலயாத்திரைசெய் கின்றனர் முருகனடியார்கள். இவை போன்று முனிவர்கள் சமாதி கொண்டுள்ள கோவில் களும் சிறப்புடன் விளங்குவனவாகும்.

திருத்தில்லை என்னும் சிதம்பரத்தில் 63 நாயன் மார்களில் ஒருவராகிய திரு மூலரும், அழகர் மலை என்கின்ற பழமுதிர் சோலையில் நாமதேவரும், திருவனந்தபுரத்தில் அகத்திய முனிவரும், திருவண்ணுமலையில் இடைக் காடரும், வைதீஸ்வரன் கோவிலில் தன்வந் திரி முனிவரும் கருவூரில் கருவூர்சசித்தரும், மாயவரத்தில் குதம்பைச் சிததரும், எட்டிக் குடியில் வான்மீகரும், திருவாரூரில் கமல முனிவரும், திருவேங்கட மலையில் கொங்கண முனிவரும், இராமேஸ்வரத்தில் பதஞ்சலி முனிவரும், காசியில் நந்தி முனிவரும், பழநி யில் போகரும், விருத்தாசலத்தில் பாம்பாட்டிச் சித்தரும் திருப்பரஙகுன்றத்தில் மச்சமுனியும், சீரங்கத்தில் சட்ட முனியும், மதுரையில் சுந்த ரானந்த முனிவரும், கோவை—பேரூரில் கோரகக முனிவரும், நித்திய சமாதி கொண் டுள்ளமையால் அருள் பொழியும் திருத்தலங் களாய்த்திகழ்கின்றன. 'இறைவரோ தொண் டருள்ளத் தொடுக்கம்' —'தொண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிதே' என்னும் அவ்வையார் வாக்குப்படி தொண்டர்களாகிய திருப்புகழ் ஓதும் தவத்தினர் உறையும் திருத் தலங்கள் தரிசிகக வேண்டிய தலங்களாகும்.

கல்லே யில்லாத சோழ நாட்டின் தஞ்சை யிலே இராஜ ராஜ சோழன் உலக அதிசயங் களில் ஒன்ருகத் திகழும் பிரகதீஸ்வரர் கோவில் என்ற நிழல் விழாத பெரிய கோவிலை 25 வருடங்களில் கட்டி முடித்துச் சிறப்புற்ருன்.

சோழ நாட்டு மாமன்னன் 'கோச் செங்கட் சோழன்' மாடக் கோவில் என்று கூறும் 70 சிவாலயங்களையும், 2 விஷ்ணு ஆலயங் களையும் கட்டிப் பெரிய புராணத்தில் அடியார் வரிசையில் இடம் பெற்ருன்.

மதுரையிலே பாண்டிய மன்னர்சள் மீனுட் சியம்மன் கோவிலையும், வானமளாவிய கோபுரங்களையும் எழுப்பிப் பக்தி நெறியில் நின்று இறைவழிபாட்டிற்கு வழி காட்டி ஞர்கள்.

சேரநாட்டு வேந்தன் சேரமான் பெருமான் என்ற கழறிற்றறிவார் நாயனுர் பழநி மலைமீது ஸ்ரீ தண்டபாணி சுவாமி கோவிலை முதன் முதலில் கட்டிய தோடன்றி, திருவாவினன் குடிக் கோவிலையும் கட்டி அருணகிரிநாதரின் தெய்வத் திருப்புகழிலே

'ஆதியந்த உலா ஆசு பாடிய
சேரர் சொங்குவை காவூர் நன்னுடதில்
ஆவினன் குடி வாழ்வான தேவர்கள்—
பெருமாளே

என்று போற்றிப் புகழப்பட்டார்.

வடநாட்டிலே பத்ராசலம் என்ற பகுதியில் பக்த இராமதாசர் அழகிய இராமர் கோவிலைக் கட்டி, பக்தர்கள் உள்ளத்தில் இடம் பெற்ருர்.

தென்னுட்டில் அமைந்துள்ள ஒரே ஒரு ஜோதிர்லிங்கத் தலமாகிய இராமேச்சுரத்தி லே வியக்கத் தக்க பெரிய சிவாலயத்தையும அற்புதமான பிரகாரங்களையும் கட்டிச் சேது பதி மன்னர்கள் பக்தி நெறியைப் பரப்பி, பாரதத்திலுள்ள பக்தர்கள் அனைவராலும் போற்றப்படுகிருர்கள்.

நெல்லை மாவட்டம் தென்காசியில் உள்ள சிவாலயத்தைக் கட்டிய பராக்ரமபாண்டியன்

சேலேறிய வயல் தென்காசி ஆலயம்
தெய்வச் செயு

லாலே சமைந்தது இங்கென்
செயலல்ல அதனையின்னும்
மேலே விரிவுசெய்தே புரப்பார்
அடிவீழ்ந் தவர்தம்
பாலேவல் செய்து பணிவேன்
பாரக்ரம பாண்டியனே.

என்று கோவில் மதிற் சுவரில் பொறித்து வைத்தமை அவரின் பக்திப் பெருக்கையும், தொண்டின் பெருமையையும் காட்டுகின்றது அன்றோ!

வடஇந்தியாவில் உள்ள பிரசித்தி பெற்ற சோம நாதர் ஆலயம் முஸ்லீம் மன்னர்கள் படை யெடுப்பால் சிதைவுற்றிருந்ததை சர்தார் வல்லபாய் பட்டேல், 50 லட்ச ரூபாய் செலவில் புதுக்கி, அரசியல் துறையைப் போல ஆன்மீகத் துறையிலும் அழியாத இடத்தைப் பெற்றார்.

திருவானைக்கா கோவிலின் நான்காம் பிரகாரத்தின் தெற்கு மதிலைச் சுந்தரமாறபாண்டியன் கட்டியதனால் திருப்புகழில்

துங்ககஜா ரணியத்தில் உத்தம
சம்புதடாகம் அடுத்த தட்சிண
சுந்தர மாறன் மதிற்புரத்துறை பெருமாளே.

என்று அருணகிரி நாதரால் புகழப்பட்டார்

அப்பர் சுவாமிகளைப் பல இன்னல்களுக்காளாக்கிய சமணப்பேரரசன் மகேந்திரவர்ம பல்லவன் அப்பரடிகளின் பக்தித் திறத்தில் ஒளிவீசிய சைவசமயப் பேருண்மையை உணர்ந்து, தென் ஆற்காடு மாவட்டம் திருவதிகையில் சமணப் பாழிகளை(சமணர் கோவில்) இடித்து, குணவதீச் சரம,என்னும் சிவாலயத்தைக் கட்டிச் சைவனுய்த் திகழ்ந்தான்.

காஞ்சிபுரத்தில் பல்லவ மன்னவன் இராஜ சிம்மேஸ்வரன் அழகிய கைலாச நாதர் கோவிலைக் கட்டினன். அதில் அமைந்துள்ள வித்தகசித்திர அற்புதப் புதுமைகளை மேனாட்டவரும் கண்டு களித்துப் படம் எடுத்துச் செல்கின்றனர்.

சிவகங்கை அரசர்களான சின்ன மருது பெரிய மருது இருவரும் காளையார்கோவிலில் வானமுட்டும் அழகிய அற்புத இராஜ கோபுரத்தைக் கட்டினார்கள். இன்றும்மருது வீரர்களின்வீரத்தையும், புகழையும் பறைசாற்றிக் கொண்டு நிற்கிறது காளையார் கோவில் கோபுரம்.

சிவபெருமானின் பராக்ரமம் நடந்த இடம் எட்டு இடமாகும். இதற்கு அட்டவீரட்டத் தலம் என்று பெயர். இவைகள் 'கோள்நிலை திரிந்து கோடைநீடினும் தன்நிலை திரியாத் தண் தமிழ்ப் பாவை' யாம் காவிரிப் பெருக்கால் நீர்வளம் மலிந்து நெல்வளம் கொழிக்கும் சோழநாட்டில் உள்ளன திருக்கண்டியூர் சிவபெருமான் பிரமதேவனின் சிரசைக் கொய்த இடமாகும். அதன் ஞாபகார்த்தமாக அமைந்தது திருக்கண்டியூர் சிவாலயம். சோழ நாட்டில் தக்கன் வேள்வியை அழித்து அவன் ஆணவத்தை அடக்கிய இடமாகிய திருப்பறியலூரிலும், நல்லோர் பலருக்கு இடுக்கண் புரிந்த சலந்தராசுரனைக் கொன்ற இடமாகிய விற்குடியிலும், திரிபுராதியர் ஏவிய யானையை உரித்துப் போர்வையாக்கிக் கொண்டஇடமாகிய வழுவூரிலும், மன்மதனை எரித்த தலமாகிய திருக்குறுக்கையிலும், மார்க்கண்டனுக்காக எமனை உதைத்ததலமாகிய திருக்கடவூரிலும், தென்னாற்காடு மாவட்டத்தில் அந்தகாசுரனைக் கொன்ற இடமாகிய திருக்கோவலூரிலும், முப்புராதியர்களை எரித்த இடமாகிய திருவதிகையிலும் அவ்வவ்வரிய செயல் நிகழ்ந்த ஞாபகார்த்தமாக மாபெரும் கோபுரங்களையுடைய சிவாலயங்களைச் சோழப்பேரரசர்களும் மக்களும் எழுப்பினார்கள்.

அத்திரி முனிவருக்கும் அனுசூயாவுக்கும் மூவரும் காட்சியளித்த இடமாகிய சுசீந்திரதில்மூவருக்கும் ஆலயம் அமைக்கப்பட்டுள்ளது. சிவன், மால், அயன் என்றமூவரும் அங்கு 'தாணுமாலயன்' என்ற பேருடன் விளங்குகின்றனர்.

வசிஷ்ட முனிவர் தவம் செய்த இடமாகிய தென் ஆற்காடு மாவட்டம் 'திட்டைக்குடியில் சிவாலயமும், வசிஷ்டருக்கு ஆலயமும் அமைக்கப்பட்டுள்ளது.

வியாக்கிரபாதர் தவஞ் செய்த இடம் சிதம்பரத்திற்குத் தென்பால் உள்ள 'திருப்புலீச்சுரம்' என்ற இடத்தில் வியாக்கிரபாதர் ஞாபகர்த்தமாகச் சிவாலயம் எழுப்பப்பட்டுள்ளது.

திரு நீலகண்டநாயனர் அவர் மனைவி இவர்களின் மாவிரதத்திற்கு மகிழ்ந்து நடராஜப் பெருமான் அவர்கட்குக் காட்சியளித்து இளமைப்பருவமும், குன்றாத செல்வமும் கொடுத்த இடத்தில் சிதம்பரம் கோவிலுக்கு

மேல்பாகத்தில் 'இளமையாக்கினர் கோவில்' என்று விளங்கும் சிவன் கோவிலைச் சோழ மன்னர் கட்டினர்.

திருவாரூரில் வதிந்த பரவை நாச்சியாரிடம் சுந்தரமூர்த்தி சுவாமிகள் இறைவனைத்தூது அனுப்பிய செய்திகேட்ட ஏயர்கோன் கலிக காம நாயனர் கொண்ட பிணக்கைத் தீர்க்கும் பொருட்டு கலிக்காமருக்குக் கொடிய வயிற்றுவலியை ஏற்படுத்திச்சுந்தரரிடம் 'நீ சென்று விபூதிஅளித்து நோயை நீக்கு வாய்' என்று கூற, இறைவன் கட்டளைப்படி சென்ற சுந்தரரைப்'பார்க்கமாட்டேன்' என்று கூறி கத்தியால்தன்வயிற்றில் குத்திக்கொண் டிறந்த கலிக்காமரைப்பார்த்த சுந்தரர் தாமும் இறக்கக்கருதி அதேகத்தியால் குத்திக்கொள் ளும்போது இறைவன் காட்சியளித்து கலிக்கா மநாயனரை உயிர் பெறச்செய்த இடமாகிய திருப்புன்கூருக்கு வடக்கே ஒருமைல்தூரத் தில் உள்ள திருப்பெருமங்கலம் என்னும்திரு வூரில் கலிக்காமர் இல்லம் இருந்த இடத்தில் கலிக்காமரின் பக்தியின் திறமும், சுந்தரரின் நேரியநடைமுறையும், சீரிய கொள்கையும், மாசற்ற பக்தியும் உலகுக்குத் தோன்றும் வண் ணம் சானரோர்களால் சிவாலயம் எழுப்பப்பட் டுள்ளது.

இராமநாதபுரத்தின் சமீபம் உள்ள சதுர் வேதமங்கலம் எனும் கிராமத்தில் வாழ்ந்தவர் அருட்புலவர் பகழிக்கூத்தர். அவர் வயிற்று வலியால் பலநாள் வருந்திக்கொண்டிருக்கும் போது ஒருநாள் இரவில் செந்திலாண்டவன் அவர் கனவில் தோன்றி இலை விபூதியும்

''பூமாதுபோற்றும் புகழ்பகழிக் கூத்தரின்
பாமாலைகேட்க யாம்பற்றேமா—ஏமம்
கொடுக்கஅறியேமா கூற்றுவன்வாராமல்
தடுக்க அறியேமா யாம்.''

என்ற சீட்டுக்கவியும் எழுதிவைத்து 'எம் மைப்பாடுக' என்று சொல்லிமறைந்த இடத் தில் இன்று 'பகழிக்கூத்தர்' மன்றத்தினரால் செந்திலாண்டவன் திருக்கோயில் திருப் பணி நடந்துகொண்டிருக்கிறது. அகத்தியர் இருந்து தவஞ் செய்து தமிழ் வளர்த்த இடமா கிய பொதிய மலையில் முருகனுக்கும் அகஸ் தியருக்கும் கோவில் கட்டப்பட்டுள்ளது.

அகஸ்தியர் ஒருநாள் தங்கியிருந்து நிட் டை செய்த இடமாகிய அம்பாசமுத்திரத தில் அகஸ்தியருக்கும் அவர் பத்தினி லோகா முத்திரைக்கும் பெரிய ஆலயம் சமைக்கப் பட்டுள்ளது.

ஸ்ரீமத் அருணகிரிநாதருக்கு முருகப் பெரு மான் முதன் முதலில் திருவண்ணமலையில் கோபுரத்தினின்றும் காட்சியளித்து உபதே சித்த அதே இடத்தில் கோபுரத்திளையனர் என்ற பெயருடன் திகழும் முருகன் ஆலயம் எழுப்பப்பட்டுள்ளது. அருணகிரிநாதர் தாம் உபதேசம் பெற்றதைத் தாம் பாடிய திருப் புகழ்ப் பாடலில்,

அருணை நகர் மிசை கருணை யோடயருளிய
பரப ஒருவசனமும் இருசரணமும்-மறவேனே

என்று கூறியுள்ளார்.

திருவண்ணமலையை ஆண்ட பிரபுடதேவ மாராசன் சபையில் இருந்த சம்பந்தாண்டா னுக்கும் ஸ்ரீஅருணகிரியாருக்கும் ஏற்பட்ட வாததில் திருவண்ணமலைக் கோயில் முன் உள்ள 16கால் மண்டபத்தில் அருணகிரியார் அதலசேடனராட,என்றதிருப்புகழ்ஓதமண்ட பத்தின் ஈசானமூலையில் உள்ள கல் தூணில் வேலுமயிலுடன காட்சி தந்த முருகனுக்கு அந்தத் தூணை மையமாக வைத்து மன்னன் பிரபுட தேவமாராசன் கட்டிய திருக்கோயில் இன்றும் கம்பத்திளையனர் கோவில் என்ற பெயருடன் திகழ்கிறது. இந்த அரிய அற்பு தம் நிகழ்த்தியதை அருணகிரியார் தாம் பாடிய திருச்சிராப்பள்ளித் திருப்புகழ்ப் பாடலில்,

சயிலம் எறிந்தகை வேற்கொடு
மயிலினில் வந்தெனை ஆட்கொள
சகமறியும்படி காட்டிய குருநாதா,

என்றும், விருத்தாசலம் திருப்புகழ்ப் பாடலில்,

உலகினில் அனைவர்கள் புகழ்வுற அருணையில்
ஒரு நொடிதனில் வரு—மயில வீரா.

என்றும், திருச்செங்கோட்டுத் திருப்புகழ்ப் பாடலில்

அருணையில் ஒருவிசை பரவ வருமதில்

எனவும் குறிப்பிட்டார்.

திருநாவுக்கரசு சுவாமிகளின் தமக்கை திலகவதி அம்மையார தொண்டு செய்து இறைவனுல் தம்மனக்குறையகற்றிய திருவூ ராகிய திருவாமூரில் திலகவதி, நாவுக்கரசர்

ஞாபகார்த்தமாக சிவாலயம் எழுப்பப்பட்டுள்ளது. பிற்காலத்தில் திருவாரூர் முருகனேவழிபடச் சென்ற அருணகிரிநாதர் தாம் பாடிய திருவாமூர்த திருப்புகழ்ப் பாடலில்

மாது புகழை வளர்க்கும் திருவாமூர்,

என்று திலகவதியாரின் தொண்டைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

சூரசம்மாரத்தின் பொருட்டுப் பூவுலகிற்கு எழுந்தருளிய முருகப்பிரான் தங்கியிருந்துவீர மகேந்திரபுரி சென்றதும், சூராதியர்களை வென்று மீண்டும்வந்து தங்கியிருந்து தேவர்கட்கும் பூவுலகத்தவர்கட்கும் அருள்பாலித்த இடமுமேதிருச்செந்தூராகும்கந்தவேள்தங்கியிருந்த ஞாபகார்த்தமாகக் கடற்கரையில் மாபெரும் ஆலயம் எழுந்தது. வளரும் வாழையும் மஞ்சளும் இஞ்சியும் இடை விடாது நெருங்கிய மங்கள மகிமை மாநகர்செந்தில், எனவும் கயிலை மலையனைய செந்தில் எனவும். விருப்புடன் இனிய திருப்புகழ் அருளிய ஸ்ரீ அருணகிரி நாதராலும், வண்டு பாட, ஓதிமம் நடிக்க வலம்புரி முத்தம் உமிழ, குருகு காண கடையர் நுழைச்சியர் களிகூரும் அலைவாய், எனப் பகழிக்கூத்தராலும், வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில், எனப் புறநானூறும் திருமணி விளக்கின் அலைவாய், என அகநானூறும், சீர்கெழுசெந்தில் எனச் சிலப்பதிகாரமும், உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர் அலைவாய், எனத் திருமுருகாற்றுப் படையும் இஞ்சிவளை மந்தரமலி செந்தில், எனப் பாம்பன் அடிகளும் போற்றிப் புகழ்ந்த திருச்செந்தூர்க் கோவிலைப் பிற்காலத்தில் விசாலமாய் அழகுறக் கட்டி முடித்தவர்கள் 1. மௌன சுவாமிகள், 2. ஸ்ரீ காசி சுவாமிகள். 3. ஸ்ரீ தேசிக சுவாமிகள் 4. ஸ்ரீ ஆறுமுக சுவாமிகள் 5. ஸ்ரீ வள்ளி நாயக சுவாமிகள் என்கின்ற ஐந்து சைவத் துறவிகள் ஆவர்.

சோழாந்தகன் எனும் பாண்டிய மன்னன் மீதுஉள்ள அன்பால் சிவபெருமான் ஆப்பில் தோன்றிக் காட்சியளித்தார். பாண்டிநாட்டுத் திருத் தலங்களில் 2வது தலமாகும் திருவாப்பனூர் தலம். ஆப்பில் தோன்றிய இடத்தில் சோழாந்தக பாண்டியன் சிவபெருமானுக்குக் கோயிலை எழுப்பி திருவாப்புடையார் எனத் திருநாமம் இட்டனன்

பாண்டி நாட்டின் முதல் அமைச்சராகத் திகழ்ந்த ஸ்ரீ மாணிக்க வாசகர் திருப்பெருந்துறையில் குருந்த மரத்தின் கீழ் சிவபெருமானுல் உபதேசிக்கப்பெற்று ஆட்கொள்ளப்பட்ட புனித இடத்தில் சிவ பெருமானுக்கு மாணிக்கவாசகா தம் காலத்திலேயே ஆலயம் எழுப்பி வழிபட்டுப் பேறுபெற்று யாந்த வரலாறும் உலகம் அறிந்ததே.

மாணிக்கவாசகர் உபதேசம் பெற்ற திருப்பெருந்துறைத் தலம் போல் ஸ்ரீபாம்பனடிகள் உபதேசம் பெற்ற திருப்பிரப்பனவலசை சிறப்புடையதாகும். சுவாமிகள் மயான பூமியில் சதுரக்குழியில் அமர்ந்து ஆறு தினங்களில் மனமடங்கி 35 நாட்கள் ஆறெழுத்தை யன்றி வேறெழுத்தை மறந்து, ஐம்புலனடக்கிக்கடுந்தவம் இயற்றுங்கால் இரு முனிவருடன் குழந்தை முருகன் நடந்துவந்து ஸ்ரீ பாம்பனடிகட்குக் காட்சி தந்து உபதேசித்தது சுமார் 76 ஆண்டுகளுக்கு முன்னுகும். இறைவன் திருவருட்கருணை பிரகாசித்த இடங்களிலெல்லாம் ஆலயங்கள் ஆன்றோர்களால் எழுப்பப்பட்டிருப்பது போல் கந்தப் பெருமானின்

'அரிய மோன வழி
திறக்கும் நளினபாதம்'

'முத்தமிழ் வாண ரோது
சித்திர ஞான பாதம்'

'பல கலை படித் தோது பாவாணர்
நாவி லுறை இரு சரணம்'

'உதயசெங் கதிரனைய
சரண பங்கயம்'

தாமரை புரையும்
காமர் சேவடி'

மறையின் முதல் நடு முடிவின்
மண நாறு சீரடி'

'எனது ஆவி
கவர் சீர் பாதம்'

நிலந்தோய நடந்துவந்து பாம்பனடிகட்குக் காட்சி யளித்து உபதேசித்த இடத்தில் திருக்கோயில் எழுப்புவது அவசியமும், நியாயமும், பக்தர்களின் கடமையுமாகும் ஆனுல் இதுகாறும் அவ்விடத்தில் திருக் கோயில் எழுப்பி முருக வேளை வழிபட்டுய்யவும், பாம்பனடிகளின் தவப்பெருமையை உலகறிந் தொழுகவும் முன் வருவார் யாரும் இலர். 76 ஆண்டுகட்குப் பின்பு ஸ்ரீ மயூரப் பெருமான் திருக்

கோயில் என்ற பெயருடன் முருகப் பிரானுக்கும், ஸ்ரீ அகஸ்தியருக்கும், ஸ்ரீ அருணகிரி நாதருக்கும் ஸ்ரீ பாம்பனடிகட்கும் திருக் கோயில் எழுப்பும் முயற் சியை மேற் கொண் டவர்கள் கந்த வேள் கருணையைக் கனவி லும் மறவாது பாம்பனடிகளின் பக்தி பிறங் கும் சிவ புண்ணிய சீலர்களாகிய சென்னை உயர் திரு N. ஜெயராமன் அவர்களும், திருமதி V. அரங்கநாயகி அம்மையாருமா கிய இருவருமாவர். அவர்கட்குப் பாம்பனடி களின் சீடர்களும் பக்தர்களும் சைவ உலக மும் என்றும் மறவாது நன்றி செலுத்துவது கடமை யாகும்.

பிரபபன் வலசை ஸ்ரீ மயூரப் பெருமான் திருக் கோயில் எழுப்பும் முயற்சியை மேற் கொண்டு எல்லாவகையிலும் திருப்பணிக் கமிட்டியுடன் ஒத்துழைத் துதவிய சென்னைப் பேரன்பர் உயர்திரு N. ஜெயராமன் அவர் கட்கும், அன்னார் மனைவியார் திருமதி அரங் கநாயகி அம்மையாருக்கும், அவர்கள் வழித் தோன்றல்கட்கும் மூவர் தேவாதிகள் தம்பிரா னாகிய ஸ்ரீ மயூரப்பெருமானும், சற்குரு பாம்ப னடிகளும் சகல செல்வ யோக மிக்க பெரு வாழ்வருளி அவர்கட்கு மகிழ்ச்சியினையும், வெற்றியினையும், வலிமையினையும், மங்களத் தினையும் அருளுமாறு அனைவரும் பிரார்த் திப்போமாக,

ஆறெழுத்தும் நீறும் ஆருயிர்க்குத் துணை
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரன் எனத் தொழுமே.

சிவஞான போதம்.



உ

சிவமயம்

ஸ்ரீமத் பாம்பன் அடிகளாரது

# ஆற்றலுள் ஒன்று

✻

(தொண்டை மண்டலாதீனம் சீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்)

அத்தியாச்சிரம சுத்தாத்துவைத வைதிக சைவ சித்தாந்த ஞானபானு ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் (பாம்பன் சுவாமிகள்) அளவில்லா ஆற்றல் வாய்ந்த அருட்பெருஞ் செல்வர்கள் என்னும் உண்மையை அறியாதார் முப்பது யாண்டிற்கு முன் ஒருவரும் இலர். இக்காலத்திலும் அவர்கள் அருளிய நூல்களை ஓதியுணரும் சிவபுண்ணியச்செல்வர்கள் அறிவார்கள். பாம்பன், திருவிராமேச்சுரம் என்னும் தேவையைச் சார்ந்த ஊர். அங்குத் தோன்றிய சுவாமிகளை அவ்வூர்ப் பெயரோடு சார்த்து வழங்கும் கௌரவ புத்திமான்கள் இன்றும் உள்ளார்கள். பெரியோர்கள் பெயரை அநாவசியமாகச் சொல்லுந் தீவினையை அஞ்சுவோர் பெரியோர்.

இருக்கை யெழலும் எதிர்செலவும் ஏனை
விடுப்ப வொழிதலோ டின்ன குடிப்பிறந்தார்
குன்றா வொழுக்கமாக் கொண்டார் கயவரோ
டொன்றா வுணரற்பாற் றன்று'' என்னும்

நாலடியை ஓரடியா நினைப் பூட்டும் மாக்கட்கு வள்ளுவன், கம்பன் என்னத் தெரியுமே யன்றி அம்மரியாதை தெரிதல் அரிதேயாகும். ஆயினும் அஃது அவரது குற்றமன்று. அது தெரிதற்குரிய வழி. முதலியவற்றைத் தக்க பள்ளிக்கூடம் வைத்து மக்களை நல்வழிப் படுத்தும் கடன்மை அரசுக்கே உரியதாதலை அறிந்து அதனைச் செய்யாமையே காரணம். ஆதலின், அவர்பாற் குற்றம் இன்று.

ஸ்ரீபாம்பன் சுவாமிகள் அருளிய நூல்கள் அனைத்தும் வடமொழி தென்மொழியிரண்டனுள்ளும் பயிற்சி யுடையார்க்குப் பெரும்பயன் அளிப்பன. தமிழ்மட்டும் கற்றோர்க்கு அவர்களது தமிழும் கற்பரிதாகும். நூற் பொருளும் உணர்வரிதாகும்.

ஒவ்வொரு நூலையுங் குறித்துப் பற்பல பக்கம் எழுதலாகும் பெருமைகளுடையன அவர்கள் அருளிச் செய்தன எல்லாம், சிவனும் முருகனும் வேறல்ல எனும் உண்மையை உணர்ந்து உணர்த்தும் அருளாளர் அவரொருவரே நம் காலத்தில் விளங்கி வீற்றிருந்தருளினர். 'தனக்குத் தான் மகனாகிய தத்துவன்' என்பது இருநூற்றெழுபது யாண்டிற்கு முன்னர்த் தோன்றிய திரு மொழி. அம் மொழிப் பொருளைத் தெளிவுறச் செய்தது அடிகளார் அருணூற்பொருள். வேதம் வேதாங்கம் ஆகமம் இதிகாசம் புராணம் தருக்கம் இலக்கணம் இலக்கியம் (பண்டைத் தமிழ்) முதலிய எல்லாவற்றிலும் அடிகள் ஆராய்ச்சி மிக்கவர்கள். அவர்கள் அறியாத நூல்களே யில்லை எனலாம். சைவ சித்தாந்தத்தில் மிக வல்லவர்கள் என்பதைப் பலநூல்களால் அறியலாம். அவர்கள் பாடலுள், உள்ளூர்ச் சிவசுப்பிரமணியர் சதகம் என ஒன்றுளது. அதில் உள்ள 21, 22, 23, 24, 25, 26, 27, 28, 29, 30 ஆம் பாடல்களை மட்டும் மநநம் செய்து நாளடைவில் அனுபவம் வளரப் பெறுவர். ஆதலின், அவர்கள் எளிய முறையில் சைவ சித்தாந்தத்தின் அடிப்படை யறிவு நன் மக்களுக்கு உண்டாதற் பொருட்டுப் பெருங் கருணையுடன் அருளிய திறத்தை யறிந்தால் யாவரும் எக்காலும் போற்றிப் பயனடைவர் என்பது திண்ணமாம். அச் சதகத்தின் அமைப்பையும் அளவில்லாச் சிறப்பையும் எழுதப்புகின் அஃது ஒரு

தனிப் பெரு நூலாய் விடும். அதனைக் கற்போர் மறந்தும் தீநெறியொழுக மாட்டார். குரு, சிவம், ஒளி, சோதி, பொருள், அமுது, நித்தியானந்தம், அரசு, பரம், இறை எல்லாமாயிலங்கும் பொருள், நாயகம், பராபரம், ஒன்று இல்லாதது, சதாசிவம் ஞானமுதம், சுகோதயம், சின்மயம், பரிபூரணம் என்னும் உட்கோள் கொண்டு முதலிருபது பாடலும் பாடப் பட்ட சிறப்பை எங்கும் காண்டல் அரிது. நாற்பதாவது பாடல் வரையில் தம்பால் குற்றம் உள்ளன என்றும், ஐம்பதாவது பாடல் வரையில் தாம் கொடுமை பல செய்தவர் என்றும், அறுபதாவது பாடல் வரையில் தமக்கு அருணலம் பழுக்குங் காலம் எக்காலம் என்றும், எழுபதாவது பாடல் வரையில் குருமரபுக்கு உரிய நெறியொழுக்கம் வேண்டி அது பெறல் என்றோ என்றும் எண்பதாவது பாடல் வரையில முருகப்பிரான் தமக்கு இன்னவாறு அருள் புரிய ஒன்றுதோ என்றும் தொண்ணூறுவதுபாடல் வரையில் தம்முள் இன்னவை வரவறிய அருள் புரிந்தாள் எனவும், முடிவு வரையில் தம் எண்ணக் குறிப்பை அறிந்து அருள் புரிந்தாள் என்றும் அமைத்துள்ள பாங்கு படிப்போர் பாடுவோர் கேட்போர் அனைவர்க்கும் பத்திக்கடலுட் படியச் செய்யும் நன்னெறிப் பயனை அப்போதே அளிக்கும். இச்சதகத்தைப் பன்முறை கற்போர் சிறிதுகாலத்திற்குள் திருவருளைப் பெரிதும்பெற்றுய்வர். அத்திருவருளே குருவடிவைக் கொண்டு உய்வைத் தரும். உண்மையை உணர்ந்தோர் இதனைக் கடைப் பிடித்து முருகனருளைக் கைக்கண்ட பயனாகப் பெறுதல் உறுதி. எம்மை நன்னெறிப் படுத்திய வற்றுள் இச்சதகமும் ஒன்று.

முருகப் பிரான் பரத்துவநிலையை அவர்களருளிய 'பாடல்' என்னும் நூலின் காப்பாகச் செய்த 'தெய்வ வணக்கம்' மூன்று செய்யுளையும் நோக்குவோர் இனிதுணர்வர். எந்நூற் பொருளும் அவற்றில் அடங்கி விட்டன. இவற்றில் கூறுதக கடவுளியல்பு யாண்டும் இல்லை. தாயுமானவர் பாடலை யொட்டி அமைந்தவாறு அது. தன்மையால் இரண்டும் ஒன்றே. பாடலும் ஆற்றலும் வெவ்வேறே.

பரிபூரணானந்த போதம், தகராலய ரகசியம், திருப்பா, முதலிய வற்றின் உரைகளுள் வடமொழி மேற்கோளும், அவற்றின் உரையும் நன்னெறியொழுக்கம் உடைய யாவர்க்கும், (தேவர்க்குக் கிடைக்காத) திவ்யாமிர்தமாம். சுவாமிகளது தமிழ் மொழிபெயர்ப் பாற்றலை அவற்றால் நன்கு தெளிந்து கொள்ளலாம்.

திருப்பாவில் முதல் மூன்று பாடலின் உரையில் வடமொழி மேற் கோளையும் அவற்றின் மொழி பெயர்ப்பையும் ஊன்றி நோக்குவோர்க்கு, சுவாமிகளது மொழி பெயர்ப் பாற்றல் நன்கு விளங்கும்.

பரிபூரணானந்த போதம், துறவற விளக்கப் படலத்திலே, சொத்து என்னும் வழக்குக்கு மூலம் இஃது என்று காட்டினார்கள். அது "ஸ்வவஸ்து" என்பதன் மரூஉவே யாகும் என்று அதற்கு முன் அறியாதிருந்ததும் அதன் முதனிலை என்ன என்று ஆய்ந்து தெரியாது வருந்தியதும், அத்தெளிவு கண்டு மிக்க இன்புற்றதும் எமக்குப் பெரியன. பிறர்க்குச் சிறியனவாக இருத்தலுங் கூடும்.

"சேந்தன் செந்தமிழ்" என்னும் நூல் தமிழுக்குப் பெருந் தொண்டு செய்ததாகப் போற்றும் வண்ணம் சுவாமிகளால் அருளப் பட்டது. வடமொழிப் பயிற்சி இல்லாதவர்க்கு மிக்க துணையாவது அது.

"சண்முக கவசம்" பாராயணம் செய்து பயன் உறுவோர் உலகிற் பலர் இப்போதும் உளர். அதனால் எண்ணிலா நலம் எய்தினோர் எண்ணிலாரை நாமும் அறிவோம்.

முடிவில் தலைப்பிற் குறித்தற்குத்தக ஆற்றல் ஒன்றைக் காட்டி, கற்போர் அடிகளார் அருளிய நூல்களில் எங்கும் உள்ள இவ்வாற்றலை உணர்ந்து உணர்வை வளர்த்துக் கொள்ளலாம் படி செய்து அமைகுதும். "இமாந் லோகாந் நீகாமரூப்யநுஞ்ச்ரந் 1 ஏதத் ஸாம காயந் நாஸ்தே.

(தைத்ரியோபநிஷத். பிருகுவல்லி அநுவாகம் 10.)

என்னும் வடமொழியைப் பலர் மொழி பெயர்த்துளர். அவருள் நம் சுவாமிகளே

நன்கு மொழிபெயர்த்தருளினர்கள். அஃதாவது, '(அறிந்தவன்) தான் விரும்பினவுடன் கிடைக்கும் அன்னத்துடனும் உருவத்துடனும் இயைந்து இவ்வுலகின் கண் சஞ்சரித்துக் கொண்டுயாண்டும் சமமாயுளதைப் பாடிக் கொண்டிருக்கின்றனன்' என்பது. இஃது அனுபவ ஞானியாகிய ஜீவன் முக்தன் பாடுவன் என்பதற்கு எடுத்துக் காட்டியது.

சிவமான வா பா டித் தெள்ளேணங் கொட்டாமோ" என்னும் திருவாசகத்தையும் ஆண்டுக் காட்டியருளினர்கள்.

திருப்பா 109. 'வேதம்' என்னும் தலைப்பிலுள்ள ஏழாவது திருப்பாவில்.

இழைத்த பாவம் வீட்டி மேவும் ஏமகேவலந்
தழைத்த காயந் தள்ளியுந் தள் ளாதும் ஆம் எனுக்
குழைத்த பத்துக் கூறுமா றிரண்டுமுண் டுனல்
பிழைத்த வெற்கி யாது கூடும் பேறெலாம்' உளோய்

என்னும் நாலடியுள் மூன்ருவதடிக்கு, நம் ஸ்வாமிகளே பொருள் விளக்கம் எழுதியருளினர்கள். அதைத் திருப்பாவின் முடிவின் முடிவிற் காணலாம்.

அதனைத் தனியாக வெளியிட்டால் நல்லோர் பல்லோர்க்குப் பேரின்ப வாழ்வுறத் தூண்டும் பயன் உண்டாகும். அறிவுரையைநன்கு கற்றுணர்வோர்க்கும் இதுகாறும் இவ்வளவு தனிப்பேராற்றல் நம் ஸ்வாமிகளுக்கு உண்டு என்னும் உண்மை இனிது உணரப்படும். படின் அஃது ஒன்றே இக் கட்டுரை வரைவுக்கும் பயனாகும்.

**அடிகள் திருவடிகள் அறிவோர்க் கெல்லாம் துணை**



உ
முருகா

# நல்லோர்



## திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள்

நிலத்தினும் கடல் மூன்று மடங்குப் பெரிது; கடலுக்கு இடையே உலகம் அழியாமல் இருப்பதற்குக் காரணம் நல்லோர்கள் வாழ்வதே யாகும்.

பண்புடையார் பட்டுண் டுலகம்; அஃதின்றேல்
மண்புக்கு மாய்வது மன். —திருக்குறள்.

மழை பொழிவதும் நல்லோர் பொருட்டே எனவுணர்க.

நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை.

என்று ஔவைப் பிராட்டியார் அருளிச் செய்கின்றார்.

புல்லர்கள் தமக்குத் தீங்கு புரியினும் அவர்மீது நல்லோர்கள் சினங் கொள்ளார். அறியாமையால் இவர்கள் இங்ஙனம் புரிகின்றார்கள் என்று கருதிப் புல்லர்களது அறியாமைக்குப் பெரிதும் இரங்குவர். "அந்தோ! இவர்கள் புல்லறிவு நீங்கி நல்லறிவு பெறுக' என்று அவர் பொருட்டு இறைவனை வேண்டுவர் நல்லோர்.

இனி, முனிவிலும் நல்லோர் அருள் புரிவர். புல்லர்கள் உள்ளங்களிந்து மகிழ்ச்சியுற்றாலும் ஒரு சிறிதும் உதவி புரிய மாட்டார்கள்.

வாழை காயாக இருப்பினும் வெட்டினவர்க்குப் பயன்படும். பழுத்தால் தான் பயன்படும் என்பது வாழைக் கில்லை. பூவும் பிஞ்சும் காயும் கனியும் இலையுந் தண்டும் மட்டையும் எல்லாமே மக்களுக்குப் பயன்படுகின்றன.

எட்டி மரம் பழுத்தாலும் மக்களுக்குப் பயன்படுவதில்லை. இதனைச் சிவப்பிரகாச அடிகளார் கூறுகின்றார்.

முனிவிலும் நல்குவர் மூதறிஞர் உள்ளக்
கனிவிலும் நல்கார் கயவர் — நனிவிளைவில்
காயினும் ஆகும் கதலிதான் எட்டிபழுத்
தாயினும் ஆமோ அறை.

நல்லோர்கள் எத்துணைத் துன்பமுறினும் அறநெறியினின்று வழுவார். செய்யத் தகாதவற்றைச் செய்யார். சொல்லத் தகாதன சொல்லார். நினைக்க ஒண்ணாதவற்றை நினையார். புலி பெரும் பசியுற்றாலும் புல்லைத் தின்னுதல்லவா? இது தான் நல்லோர்களின் பெருந்தன்மை. நல்லார் நல்லவற்றினின்றும் ஒரு போதும் வழுவார்.

நல்லாற் றொழுக்கின் தலைநின்றார் நல்கூர்ந்தும்
அல்லன செய்தற் கொருப்படார் — பற்பொறிய
செங்கட் புலியேறறப் பசித்தும் தின்னுவாம்
பைங்கட் புனத்த பைங்கூழ்,

இனி நல்லோர்கள் எத்துணைத் துன்பம் நேரினும் தங்களது தகுதியினின்றும் குறைவுபடார். சந்தனம், அரைத்தாலும் மணக்கும்; அகில் புகைத்தாலும் கமழும். சங்கு சுட்டாலும் வெண்மையாகவே யிருக்கும்.

"கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும்"

என்கிறார் ஔவையார்.

மேலும் நல்லோர் தமக்குத் தீங்கு இழைத்தோர்க்கும் நன்மையே புரிவர்.

இதுதான் மேன்மக்களின் சிறந்த இயல்பு,

" இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக் கால்
என்ன பயத்ததோ சால்பு "

என்பது திருவள்ளுவரது திருமொழி.

ஒரு சமயம் பாண்டவர்கள் வனத்தில் வசித்துக் கொண்டிருந்தார்கள். இன்பத்தின் சிகரத்தில் இருந்த அவர்கள் துன்பத்தின் சிகரத்தில் நின்றுர்கள். காற்று, மழை, வெயில், பனி, பசி, தாகம் முதலிய துன்பங்களைத் தாங்கிக்கொண்டு, தங்களின் மனநிலை பிறழாதும் தவநெறி தவருதும் வாழ்ந்தார்கள்,

இவர்களை ஆடைகளாலும் அணிகலன்களாலும் பிற உயர்வுகளாலும் அவமானம் புரியக் கருதினுர்கள் துரியோதனுதிகள். பசுக்களை விலங்குகள் கொல்லுவதாகவும், அப் பசுக்களைக் காப்பாற்றப் போவதாகவும் திருதராஷ்டிரனிடம் கூறி விடை பெற்று துரியோதனுதிகள் புறப்பட்டார்கள். 'நெய்கிறவனுக்கு குரங்குக் குட்டி எதற்கு, என்பது ஒரு பழமொழி. அதுபோல வேட்டையாடுகின்ற இவர்களுக்கு மனைவியாரை அழைத்துப் போவது எதற்கு? அவர்கள் நோக்கம் பாண்டவர்களை அவமானம் புரிவதுவேயாகும் ?

ஆதலால் துரியோதனன், துச்சாதனன், கர்ணன், சகுனி முதலிய கொடியவர்கள் தங்கள் மனைவிகளை விலையுயர்ந்த ஆடைகளாலும் அலங்கரித்துக்கொள்ளச் செய்து, நறுமணம் பூசி நன்மலர் முடித்து தேவகுமாரிகளுடன் தேவகுமாரர்கள் வந்தது போல் வந்து பாண்டவர்கள் முன்புற்று உலாவினுர்கள். தருமர் முதலியோரும், திரௌபதியும் அவர்களைக் கண்டுங் காணுதவர்களைப்போல் இருந்து தங்கள் தவநெறியில் நின்றுர்கள். எவ்விதமான மாறுபாட்டையும் அடையவில்லை. அவர்களுடைய ஏற்றத்தையும் தோற்றத்தையும் கண்டு பொருமையோ கோபமோ வருத்தமோ அடையவில்லை.

குபேரனுடைய சேனைத் தலைவன் சித்திரசேனன் என்பான் அங்கு வர அவனுடன் துரியோதனுதிகள் எதிர்த்தார்கள். சித்திரசேனன் துரியோதனன் முதலியோர்களை வென்று ஆண்களையும் பெண்களையும் இருவர் இருவராக எப்படி எப்படி அமைந்ததோ அந்தவண்ணம் பிணைத்து ஆடு மாடுகளை ஓட்டுவது போல் ஓட்டிக்கொண்டு சென்றனன்.

இதனையறிந்த தருமர் பெரிதும் மனம் வருந்தினுர். கண்ணீர் சிந்தினுர். துரியோதனன் முதலியோர்சிறை மீளும் வரை தண்ணீரும் அருந்த மாட்டேன் என்று சபதம் செய்து கொண்டார்.

துரியோதனுதியரைச் சித்திரசேனனிடமிருந்து சிறை மீட்டு வருமாறு வீமனையும் அருச்சுனனையும் அனுப்பியருளினுர்.

வீமார்ச்சுனர் சென்று சித்திரசேனனை வென்று துரியோதனுதியரை மீட்டு வந்தனர்.

## உபசரிப்பு

தம்மை அவமதிக்க வந்த மிகக் கொடியவர்களாகிய துரியோதனன் முதலியோரைத் தருமர் வரவேற்று, இன்னுரை பகர்ந்தார்; அறவுரை கூறினுர். சிதைந்த ஆடைகளை அகற்றுமாறு செய்து, ஆண்களுக்கும் பெண்களுக்கும் முன் குபேரன் தமக்களித்த விலைமதிக்க முடியாத ஆடை யாபரணங்களை வழங்கினுர். இனிது உபசரித்து ஊருக்கு அனுப்பி வைத்தார்.

தங்களை அவமானம் புரிய வந்த துரியோதனுதியரைச் சித்திரசேனனிடமிருந்து சிறை மீட்டு ஆடையும் அணிகலன்களும் வழங்கி நல்லுரை நவின்று உபசரித்தார் தருமர்.

ஆகவே நல்லோர் தமக்கு இடர் விளைவிப்பார்க்கும் இனிமையே புரிவர்.

இந்த இனிய கருத்தைக் கவிச்சக்ரவர்த்தியாகிய கம்ப நாடர் தாம் பாடிய இராமாயணத்தில்விபீடணனுக்கு அடைக்கலந்தரும் இடத்தில் இராமர் வாக்கில் வைத்துக் கூறுகின்றுர். மிக அழகான வாக்கு.

தேவர்கள் இனிய பாற் கடலில் மந்தர மலையை விடுத்து இடையருது கடலைக் கலக்கித் துன்புறுத்தினுர்கள். துன்புறுத்திய அமரர் இன்புறப் பாற்கடல் அமிர்தத்தையே தந்தது.

அது போல்' நல்லோர்கள் தமக்குத் தீமை புரிந்தோர்க்கும் நன்மையே புரிவார்கள். இக் கருத்தையுடைய இனிய செந்தமிழ்ப் பாடல் இதோ வருகின்றது. இலக்கியங்களில் இத்தகைய அற நெறிகளை இனிது விளக்கும் இனிய பாடல்கள் பல வுள. அவற்றைப் படித்துச் சுவைத்துத் தமிழ்மக்கள் நலம் பெறவேண்டும்.

தீர்வரும் இன்னல் தம்மைச் செய்யினும் செய்ய சிந்தைப்
பேரரு ளாளர் தந்தஞ் செய்கையில் பிழைப்ப துண்டோ
கார் வரை நிறுத்தித் தன்னைக் கனல் எழக் கலக்கக் கண்டும்
ஆர்கலி அமரர் உய்ய அமுது பண்டளித்த தன்றே.

இத்தகு நல்லோர்களின் தனிநாயகமாகவும், இனிய தாயகமாகவும் விளங்கியவர்கள் ஸ்ரீமத் பாம்பனடிகள். இத்தவமா முனிவர் 35 நாள் நிஷ்டை கூடி முருகனைத் தெரிசித்த புனிதத்தலம் பிரப்பன் வலசை. இங்கு அப்பெரியமகான் மாதவஞ் செய்த இடத்தில் ஆலயம் அமைத்துக் குடமுழுக்கு செய்கின்றனர்கள். அனைவரும் அன்புடன் தரிசித்து இளம் பூரணனுடைய இன்னருளைப் பெறுக.

### வாழ்த்து

நேரிசை வெண்பா

வாழி பிரப்பன் வலசை வளமையுடன்
வாழி திருப் பாம்பனர் வார்கழல்கள் — வாழி
குகனடியா ரெல்லாம் குமரனரு ளாலே
தகவுடனே வாழி தழைந்து.



ஓம் குகேசாய நம:

# தவராஜர் போற்றிய கவிராஜர்



திருப்புகழ் சதுரர்

சே. த. இராமலிங்கம் பிள்ளை B.A., B.T.,

தவம் என்பது தமிழ்ச் சொல். 'தபம்' என்பது வட சொல். 'தபு' என்ற தாது விற்கு 'எரித்தல்' என்று பொருள். சித்த ஒருமைப்பாடு பெறவும், அவா முதலிய மன மாசுகளை மாற்றவும், அவற்றின் இருப்பிட மான உடலை ஒறுத்தலே தவம் என்க.

"உற்ற நோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை

அற்றே தவத்திற்கு உரு"

என்பது தவத்திற்கு வள்ளுவர் வகுத்த இலக்கணம். இதனைப் பரிமேலழகர் "மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களால் உண்டி சுருக்கலும், கோடைக்கண் வெயிலில் நிற்றல் முதலிய செயல்களை மேற்கொண்டு அவற்றால் தம் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்துப் பிறஉயிர்களை ஓம்புதலும்" என்று உரை கூறியதும் உன்னுக.

எனவே, உள்ளத் தூய்மை யுற்று இறைவனை ஒருமுக உணர்வுடன் தியானிக்க அமைந்த உபாயமே தவம் என்னலாம். இதனால் நம் அருணகிரியாரும் இளம் பூரண னது இணையடிக் கமலாலயத்தில் அரை நிமிஷ நேர மட்டிலாவது செய்யத்தக்க முறைப் பட்ட தியானமே தவம் என்றும்,

இருதாளில் — நாறு கடம்பணியாப், பரி வோடு பணிந்து சடாக்ஷரம் நாட அருந்தவம் வாய்ப்பதும் - ஒரு நாளே"

என்றும் விளக்கியமை காண்க இவ்விரு விளக்கங்களும் அமைந்த தவம் சாலச் சிறந்தது. இவ்விதமாக 'உண்ணாது நோற்ற' பெரியார்கள் அன்றும் இருந்தனர்; இன்றும் இருக்கின்றனர்; அவர்கள் என்றும் இருப்பர். இக்காலத்து நாம் காண இருந்த தவசியர் திலகமாய்த் தவராசராய் விளங்கியவர் பாம்பன் ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகள் ஆவர். ஏனெனில் மனமடங்கும் திறத்தில் இராம நாத புரத்தைச் சார்ந்த பிரப்பன் வலசை மயானத்தில் நிட்டை கூடியிருந்து நீலமயில் பிரானைத் தியானித்து அவன் காட்சியும் உபதேசமும் பெற்றனர். ஆகையால், இங்கு நாம் தவராஜர் எனக் குறித்தது பாம்பன் ஸ்ரீ மத் குமர குருதாச சுவாமிகளையே என்க. இனி, அவர் போற்றிய 'கவிராஜரைப்' பற்றிக் கவனிப்போம்.

கவிராஜர்:—

கவி என்பது பாட்டு. அதனைப் பாடும் புலவர்கள் கவிஞர் எனப்படுவர். இவ் விதப் புலவர்கள் இரு வகைப்படுவர்:— (1) தம் வறுமை நீங்கி வாழ்க்கை நடத்த உலோபிகளான உலுத்தர்களைப் புகழ்ந்து பாடல் செய்பவர்கள். 2) மறந்தும் மாநு டரைப் பாடாத மாண்பு மிகுந்து இறைவ னொருவனையே புகழ்ந்து தமக்கும் ஏனைய உயிர் கட்கும் ஆண்டவனருள் தந்துதவு மாறு வேண்டிக் கவி செய்யவல்ல வித்தகர் கள். இரண்டாம் பிரிவைச் சார்ந்தவரது பாடல் முற்றும் தன்னலங் கலவாது வையகத் தார் வாழ வழி செய்வது, இவர்களுடைய பாடல், ஆக்கவும் அழிக்கவும் வல்ல ஆற் றல் மிக்கது. இத்தகைய சிறப்பு வாய்ந்த தெய்வக் கவிஞர்கட்குள் தலை சிறந்தொளிர் பவரே 'கவிராஜர்' எனப் போற்றப்படுவார். அற்றேல் தெய்வக் கவிஞர்கள் பலருக்கும் கவிராஜ ராஜனாக விளங்குபவன் குமார பிரானே ஆவான்.

"அதிக வித சாமர்த்ய கவிராஜ ராஜனே"

(கதிர் காமத் திருப்புகழ்

கந்தபிரானே கவிராஜன்:—

கந்தபிரானைக் கவிராசன் என்பது பக்தி யாலோ உபசாரமாகவோ உரைப்பது அல்ல. அவன் கவிராஜன் என்று அனைவரும் ஒப்புக் கொண்டுள்ளனர். இதோ படியுங்கள்;

ஒரு சமயம் புலவர்கள் அனைவரும் ஒன்று கூடித் தம்முள் தலைசிறந்த ஒருவரைத் தேடிக் கௌரவிக்க எண்ணினர். அதற்காக நெடு நாள் பலர் வாதஞ் செய்தனர். முதலில் அருந் தமிழன்னையாகிய அவ்வையே புலவர் தலைவி என்று கூறப்பட்டது. உடனே புலவர் களனைவரும் அவளுக்கு அக்ரக (முதல்) தாம் பூலந்தந்து சிறப்பிக்கச் சென்றனர். அதனை அறிந்த அவ்வையார், "அன்பர்களே! நான் கற்றது கைம்மண் அளவு. கல்லாதது உல களவு. என்னைவிட ஐந்திரவியாகரண முதலிய நூல்களின் ஆசிரியரான இந்திரனே இச்சிறப் புக்குரியவனுவன் அவனிடம் சொல்லுங்கள்" எனக் கூறிவிட்டாள். புலவர்களும் பொன் னுலகங் காக்கும் புரந்தரனிடம் போயினர். ஆனால் இந்திரனும் "எனக்கு அப்பரிசை ஏற்கும் தகுதியில்லை. என்னிலும் அதிகம் கற்றலும் கேட்டலுமுடைய அகத்திய முனி வரிடம் செல்லுங்கள்" என்று அனுப்பி விட்டான்.

புலவர் கூட்டம் தமிழ் முனிவரான மகத்து வமிக்க அகத்தியரிடம் சென்றது. ஆனால் கும்பமுனிவரோ, "எக்கலையும் வல்ல சகல கலா வல்லியான சரசுவதி தான் இச் சிறப்புக் குரியவள்" என்று கூறிவிட்டார். பிறகு புலவர்கள் நாமகள் இருப்பிடம் நண் ணினர். கலைமகள் அவர்களை நோக்கி, "அன்புடையீர்! கௌரியாகிய பார்வதி தேவி க்கு வலக்கண் கல்வித் தேவியான நானும் இடக்கண் செல்வமகளான திருமகளும் என் பர். ஆதலின் இருகண்களில் ஒரு கண்ணை மட்டும் சிறப்பு செய்வார் உலகில் உண் டோ? எனவே என்னைக் கண்களிலொன் றாகக் கொண்டுள்ளதால் காமாட்சி (கா - சரஸ்வதி, மா - இலக்குமி அட்சி - கண் ணாக உடையவள்) என்ற திருநாமந்தாங்கும் உமையவளே சிறப்பிக்கத் தக்கவள்" என்றாள். புலவர்கள் கௌரியை அணுகித் தம் விருப்பத்தை வெளியிட்டனர். உடனே பார்வதியம்மை "கவிஞர்களே! அருமறை தமிழ் நூலடைவே தெரிந்துரைக்கும் புல வோனும், சிவஞான தேசிகனும், சங்கப் புல வர்களின் தலைமைப் புலவனும், கும்பமுனி கும்பிடும் தம்பிரானும், நக்கீரர் கவி ஏற்ற நாயகனுமான சரவணவேளே சகல கலா வல்லப மூர்த்தியாவான். அவனுக்கே அக்ரக தாம்பூலம் அளிக்கவேண்டும்" என்று அரு ளிச் செய்தனர்.

இதனைக் கேட்ட புலவர்கள் கந்த லோ கம் சேர்ந்து நமது குமார மூர்த்தியிடம் தமது வேண்டுகோளை விண்ணப்பித்தனர். அதி கவித சாமர்த்திய கவிராஜனான கந்தவேளும் தமக்கு மேலொரு தலைமைப்புலவனின்மை யால் புன் முறுவலுடன் அவர்கள் தந்த புல வர் அக்ரக தாம்பூலத்தை ஏற்றருளினர். இதனைக் கண்ட கவிஞர்கள் கைகுவித்து இறைஞ்சி" "கவிராஜபதயே நமோ நம" எனப் போற்றினர்.

"புலவீர் என்றெனை அழைத்தீர் புரந்தரனே
என அவனும் பொதிகை வெற்பின்
இலகிய கோமுனி புலவனென்றலுமே
அவனுங் கேட்டிரங்கி நின்று
கலைமகளாம் புலத்தி எனக் கலைமகளும்
கருத் தழிந்து கௌரி என்ன
மலையரசன் மகள் புதல்வன் சரவணவேள்
புலவனென மிகுத்தாள் அன்றே"

இவ்வாறு சபையினர் தாங்கேட்டு நனி
விம்மித முற்று இயம் பொணாத
துவ்வாரும் ஒளி வடிவிற் கந்த புரஞ்
சென்றிறையைத் துதித்து நிற்ப
அவ்வாறங் குணர்ந்தருளிப் புன்னகைபூத்
திவ்வரிசை அழகிற் கொண்டேம்
தவ்வாத குணத்திர் எனும் சகல
கலா வல்லபன் நம் சாமிதானே"

என்பதால் மேற் குறித்த வரலாறு புலனாகின் றது.

அருட் கவிஞர் அருளிச் செயல்களான பாடல்களும் ஆக்கல் அளித்தல் அழித்தல் முதலிய செயல்களை ஆற்ற வல்லது முன்னர் கூறப் பட்டது.

அத்தகைய அமுதகனிகள் செய்த கவிரா ஜர் காழிக்கவுணியர் கோனான திருஞான சம்பந்த சுவாமிகளே ஆவர். இவரது கவி களின் சிறப்பை ஆண்பனையைப் பெண்பனை யாக்கியதும், திருமருகலில் தீவிடம் தீர்த்த தும்' கொடி மாடச் செங்குன்றூரில் நளிர் சுரம் நீக்கியதும் கொல்லிமழவன் மகளுடைய குமர கண்டவலியைப் போக்கியதும், பாண்டி யன்து பெரிய கூனும் ஒன்றிய வெப்பு நோ யும் பஞ்சாகப் பறக்கச் செய்ததும் எலும்பைப் பெண்ணாக்கியதும் பிறவும் நன்கு விளக்கு வன வாம்

"பயனுகும் நல்லாண்
பனைக்கு, விடத்திற்கு

மயிலாகும் நோய்க்கு
மருந்தாகும் — உயிராகும்
சிந்தும் எலும்பிற்குச்
சிரபுரத்துச் சம்
பந்தன் இயம்பு திருப்பாட்டு
(துறைமங் கலத்தார்)

ஆதலால் திருஞானக் கன்றெனும் ஆளுடைய பிள்ளையார் அபரசுப்பிரமணியத்தின அவதாரம் என்பர். இவருடைய அருள் வாழ்க்கையால் இவரது தந்தை தாயர் மரபுகள் விளக்கம் பெற்றன. எனவே இவர் இருகுல விளக்கான கவிராச சிங்கம் எனலாம். இதனாலன்றோ·

''உபயகுல தீயதுங்க, விருது கவிராச சிங்க
உரைபுகலி யூரிலன்று — வருவோனே''

என நம் அருணகிரிநாதர் அருள் வாக்கு எழுந்தது.

மேலும் இறையனார் களவியலுரை பற்றி எழுந்த சங்கப் புலவர்களின கலககததை உருத்திரஜன் மராயிருந்து நீக்கியதாலும், நாயகன் கவிக்கும் குற்றம் காட்டிய நக்கீரர் முட்டையைப் பாடிய பொய்யா மொழிப் புலவர், பழநித்தல புராணம் செய்த பால சுப்பிரமணிய கவிராஜர், வென்றி மாலைக் கவிராயர், சந்தக் கவிஞர் பெருமான் அருணகிரி நாத சுவாமிகள் போன்ற கவிஞர்கள் போற்றும் மாபெரும் தலைவன் முருக வேள் ஆதலினாலும், தவராஜரான பாம்பனடிகள் அப் பெருமானைக் கவிராஜபதயே நமோ நம'' எனப் போற்றுதலாலும் தவராஜர் போற்றும் கவிராஜர் ஆவர் குமார பரமனே என்று கூறலாமல்லவா?

வேலும் மயிலுந் துணை



உ

# பரிபூரணுனந்த போதம் - ஓரறிமுகம்

(கோ. ந. முந்துக்குமார சுவாமி. எம். ஏ. பி. எல்.)
(துணைத்தலைவ, சாந்தலிங்க அடிகள் தமிழ்க்கல்லூரி, பேரூர், கோயம்புத்தூர்)

சீரேறு நான் மறையுஞ் செப்பரிய தந்திரமும்
ஏரேறு நூல்பலவு மேசறவே — நாரோ
டுணர்ந்தா ருளத்திலில கோங்கார தேவின்
தணந்தாளிணை நினைவாஞ் சார்ந்து ''

இந் நூற்றுண்டின் தொடக்கத்தில் நஞ்சைசவப் பயிரானது கிறிஸ்தவம் முதலிய வேதவிரோத சமயங்கள் மாயா வாதம் முத வேதத்திரிபு சமயங்கள் ஆகிய களைகளால் மறைப்புண்டு நெருக்குண்டு சூழப்பெற்று இருந்த காலை நம்மனோரின் தவப்பயனுக ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் அத்தியாச்சிரம வைதிக சைவ சித்தாந்த ஞான பானுவாய்த் தோன்றி அவ்வஞ்ஞானக் களைகளைத் தடிந் தோட்டினர். அவர் சைவ உலகிற்கு அளித்த ஒப்பரிய சாத்திர தோத்திர நூல் களுள் அரிய தொன்று பரிபூரணுனந்த போதம் எனும் நூலாகும் இந்நூல் நுதலும் பொருளாலும் பொருளடைவு முறையாலும் சொல்லுந் திறத்தாலும் சைவ சாத்திரங் களுள் ஒன்றுன உமாபதி சிவமருளிய சிவப் பிரகாசத்திற்கு இணையாகக் கருதப்படுவது. இந்நூலிற்கு ஸ்ரீமத் சுவாமிகளே சிவ சூரியப் பிரகாசமெனும் உரை செய்திருக்கின்றுர்கள்.

நூற்பெயர்க் காரணம்:— இந்நூல் போதிக்கும் விதிகளின் வழியே ஒழுகுவார் பெறும் அந்த மில் இன்பத்து அழிவில ஆனந்தங் காரண மாக இப் பெயர் பெற்றது. மக்கள் இப்பிறப் பில் அடையும் இன்பங்களாவன தனுகரண புவனங்களால் துய்க்கும் இன்பம்; இவ் வுலகிற் செய்யும் நல்வினைகளின் காரணமாக மனுட கந்தருவராகவும் தேவ கந்தருவராக வும் துய்க்கும் இன்பம்; அதற்கு மேலாக தேவ லோகத்தில் அதி தேவதைகளாகத் துய்க்கும் ஆனந்தம்; அதற்கு மேலாக இந் திரனுக பிரகஸ்பதி யாக பிரஜாபதியாகத் துய்க்கும் ஆனந்தம் முதலியனவாம். இவ்வானந்தம் அனைத்தும் குறைவுடைய ஆனந்தமே யாகும். இவ்வாறனறி எவ்வகை ஆனந்தத்தினும் மேம்பட்டதொரு பிரம்மானந் தத்தையே பயனுக அளிப்பதால் பரிபூரணு னந்த போதம் என்ற பெயரை இந்நூல் பெற்றது.

நூற்பயன்:— இந்நூல் மெய்ஞ்ஞான நூல்கள் பலவற்றுள்ளும் எடுத்த சாரமாகும். சுருங் கச் சொல்லிப் பொருளைத் தெள்ளிதின் விளக்குவதால் பெருத்த மடலுறு தாழை போன்ற தன்று. உருவத்தாற் சிறிதாயினும் மணத்தால் மேம்பட்டமகிழமலர் போன்றதாம். வேதம் பகர்வது சைவ சித்தாந்தமே யென்றும் அது ஆகமத்திற்கு விரோதமான தன்றென்றும், இரண்டிற்குமுள்ள சமரசப் பொருளைத் தெளளிதின் விளக்குகின்றது. நெருப்பருகிற் சென்ருேருக்குக் குளிர் நீங்கு வது போலவும் கங்குற் காலததேகடுந்திசை தப்பி மறுகுவோருக்கு ஞாயிற்றின் உதயத் தாலே மயக்கம் ஒழிந்து செல்லுந்திசை தோன்றுதல் போலவும் அஞ்ஞான இருளில் மதிமயங்கி நிலை பேதுற்றுத் திரிவோருக்கும் இந்நூலை ஆராயின் மெய்ப் பொருள் கைவரப் பெறும். இந்நூல் மிக்க பெத தருள் தீவிரம் பெருகு அறிவுளார்க் காகுமே ' என்றதால் பவக்குான் மாக்களுள் உயர்ந்ததீவிரதர சத்திநிபாதம் மேவிய வருக்கே பயன் தருவதாகும். அவர் களுக்குச் செய்யப்படும். உபதேசம் மெல்லிய பஞ்சிலே தீயூட்டலை ஒக்குமாதலால்.

நூல்:— இநநூல் பதிபசு பாச யதார்த்த விளக்கப்படலம், துறவற விளக்கப் படலம் என இரு படலங்களை யுடையது. ஞான விசாரணை செய்வோரும் சாமானியரும் எளிதில் உணருமாறு இந்நூல் குருசீட சம்பாஷணையாக ஐயமகற்றும் வினுவிடை முறையில் உள்ளது இம் முறையில் சற் சீடன் கடாவுக்குச் சற்குரு விடையிறுக்கத் தொடங்குதல் முதலாகச் சற்சீடன் சுவானு பூதி அடைவது ஈருகப் பதினெட்டுப்

பொருள் நிலைகளையுடையது. ஸ்ரீமத் சுவாமிகள் இந்நூல் உரையில் மேற் கோளாக எடுத்தாண்ட, உபநிடதங்கள் 73ம், வேதங்கள் 4ம், ஆகமங்கள் 11ம், ஸ்மிருதிகள் 3ம், புராண இதிகாசங்கள் 18ம், தமிழ் மறைகள் 4ம், மெய்கண்ட சாத்திரங்கள் 13ம், சூத்திரங்கள் 2ம், அரதத்துவ சிவாச்சாரியார் போன்ற பெரியோர் வாக்குகள் 38ம், நிகண்டுகள் 5ம், ஆக 171 நூல்கள் ஆகுமெனில் இந்நூல் உரையின் பெருமை புலப்படுமன்றோ ?

**சற்சீடன் கடாவுக்கு சற்குரு விடையளித்தல்:—** சற்சீடன் யார ? ஐயம் எழுப்புவோர் எல்லாரும் சீடராகார். ' திருமலிந்தமகிதலத்தில் மானுடர்க்குட் சிறப்புடையனுகவும் முன்னை நோன்பாற் கலைமலிந்த பிறப்பு நோய்க்கு அஞ்சினேனுகவும் இருப்பவனே சற்சீடனுவான்- அது போன்று எல்லோரும் சற்குரு எனப்படார். கல்வியொடு தவப் பேறு முதிர்ந்த பின்னும் அருண் மலிந்த ஓர் இறைவனே ' சற்குருவாவார். இத்தகைய சிறப்புகளையுடைய சற்சீடன் ஒருவன் சற்குருவை அண்மி, '' எம் ஐயா! பொழிலண்ட நிரைகளையு மூத்தை உருமலிந்த உயிர்களையும் தந்தோ ரேவ ருரைத்தி '' என முதற் கடாவை எழுப்ப உரையாடல் தொடங்குகிறது.

**வத்து நிச்சயம்:—** சற்சீடனின் முதற் கடாவுக்கு விடையிறுக்கும் ஏதுவாக முப்பொருள் நிச்சயம் செய்யப்படுகின்றது. முதலிற் பதியிலக்கணம் கூறப் படுகின்றது. '' உட்கருவி புறக்கருவியாகக் கூறும் உடம்பினுக்குள் ளோருயிரே இருத்தன்மான, மட்பொலிவி ஞனிறுவு மூலகுக் கெல்லாம் மகத்தான பரம்பொரு ளொன்றுளது ' என்று பிரபஞ்சத்திற்கு நிமித்த காரணமான பொருள் உளன் எனவும், அப்பொருள்தான் உருவம், பற்றுக்கோடு, விகாரம், சுட்டியறியுந் தன்மை ஆகிய இவற்றுள் ஒன்று மில்லாத உண்மைப் பொருளாகி, கண்ணுகிய கருவிக் கெட்டாத அழிவற்ற அகண்ட ஞானுகாசம் என்னும்படி யாண்டும் வியாபித்து நிலை பேறுற்று இருக்கும் எனப்பதி யிலக்கணமும் கூறினா. அஃதே தான்,

' நிற்களங் நிராலம்ப நிருவிகார
நிரதிசய தத்துவமா யீறில்லாத
க-கருவிக் கெட்டாத வகண்ட ஞான
ககன மெனவே யெங்கு நிறைந்து நிற்கும்.'

**பரம் பொருளின் பெயர்கள் :-** ஒரு தலத்திற்கு அனநதம் பெயர்கள் இருத்தல் மான எங்கும் நிறைந்திருக்கும் பரம் பொருட்கு அளப்பிலாப் பெயர்களுண்டு என்று கூறி ஸ்ரீமத் சுவாமிகள் பத்துப் பெயர்களின் விளககங்களை அருளுகின்ருர். அவற்றுள் மிகச்சிறப்பான இரண்டைக காண்போம்.

கடவுள் :- இச்சொல் கடவு + உள் என்று பிரியும் வினைத் தொகையாகும். கடவுதல் என்ருல் செலுத்துதல். சீவான் மாக்களின் உள்ளக் குகை தோறும் இருந்து இச்சை ஞானம் கிரியை என்பவற்றை இயககிச் செல்லும் உள்ளமாக உள்ள பிரம்மம் கடவுள் எனப்பட்டது. இக் கருத்தையே ஸ்ரீ மத் சுவாமிகள் செக்கர் வேள் செம்மாபபில'' செலுத்துதலென்னுஞ் சொல்லே கடவுத லெனச்செந் நூல்கள் பலத்துடனுரைக்கு மாற்ருற் பசுக்களினுளத்தேநின்று செலுத்துளமாஙகுகற்குக் கடவுளென்றிருப்பே ரொன்மறத் தலத்தரும் இறும்பூ தெய்தத் தமிழினி லேய்ந்த தாமே'' என அருளியுள்ளார்.

ஸ்ரீமத் சுவாமிகள் அருளியுள்ள இவ்விளக்கம் தமிழிலக் கணத்திற்கும் சாத்திரக் கருத்திற்கும் பெரிதும் பொருநதியிருககப் பிறா கடவுள் என்பது கடத்தலையுடைய பொருள் என்றும் அது மனமொழிகளைக் கடந்துநிற்கும் பொருளையே குறிக்கும் என்றும் இப்பதம் தொழிலாகு பெயர் என்றுங் கூறுவது முதலாயின பொருந்தாமை ஓர்க.

ஈண்டு ஆன்மா பற்றிக் கூறும் விளக்கம் மனத்தில் இருத்தத் தககது. சிவமும் சக்தியும் இயைநதுள்ளதே பரமான்மா எனப்படும். ஆகவே அஃது ஆன்மா என்பதூஉம் போதரும். இவ்வுலக சிருட்டிக்கு முன்னே ஆன்மா ஒன்றே இருந்தது. வேறெவ்விதமான யாதுமின்று. அவ்வான்மா உலகைச் சிருட்டிக்க வேண்டுமென நோக்கிற்று. பிரளய காலத்தில் குணருத்திரன், விட்டுணு, பிரமன் முதலியோர் தொழிலிழந்தும் தூங்கியும் கிடத்தற் போற் கிடவாதுவிழித்திருந்து பெயர்த்தும் சிருட்டிதொடங்கும்சிவ பரம பொருள்ஒனறேயாக லின் ஆன்மா ஒன்றே இருந்த தென்க. அது கருப்ப சிசுவைக் கருப்ப வயிற்றடககிக் கூறு மாற்ருன் ஒருத்தியே இருந்தனள்

என்பது போல அவனிடத்திலேயே எல்லாப் பிரபஞ்சமும் அடங்கியிருக்கும்; சித்திரப் படஞ் சுருட்டப் பட்டது ஒக்கும், இவ்விளக்கம் சித்தாந்த சாத்திரம் கற்போருக்குத் தோன்றக் கூடிய பல ஐயங்களை அறுக்கும் எனலாம்.

**ஸுப்ர ரஹ்மண்யம் :-** ஸு = சுகம், ஆனந்தம ப்ரஹ்மம் பெரிய பொருள்: ந்யம் - வேறு காணப படுமொன்று. அதாவது பெரிய பொருளினின்றும் வெளிப் பட்டு மிளிர்வது. எனவே சிவானுபூதிச செல்வர்க்கு அவ்வனு பூதிப் பொருளாய்ப் பிரகசிப்பது. ஸுப்ரஹ்மண்ய வணககத்தை ஸ்ரீ மத்சுவாமிகள் பாயிரத்தில் ஆனந்த வத்து வணக்கம் என்று கூறியுளார்.

யாதொரு பொருளையும் நீளம் அகலம் கனம் எனச் சொல் மாத்திரையால் பிரித்தல் கூடுமேயன்றிப் பொருள் மாத்திரையால் பிரித்தல் கூடுவதன்று. அது போன்று சத்து சித்து ஆனந்தம் என்னும் மூவிலக்கணத்தோடு கூடிய பரம் பொருளைச் சொல்லால் உருவ மாத்திரையாய்ப் பிரித்தல் கூடுமேயன்றிப் பொருண் மாத்திரையாய் பிரிக்கப் படுவதன்று. எஞ்ஞான்றும் ஒரே தன்மையாய் இருத்தல் பற்றிச் சிவம் சத்தெனப் பட்டது. சிவ பரம் பொருளிடத்தும் ஞானமே தன் சொரூபமாக உடையாள் ஆதலின் அம்மை சித்து எனப் பட்டாள். சத்து சித்து ஆகிய அம்மையப் பனிடத்துத் தோன்றிய ஆனந்தப் பொருளே சுப்ரமணியம் என்று சுருதிப் பிரமாணத்தோடு ஸ்ரீமத்சுவாமிகள் நிறுவியுள்ளார். எனவே சுப்ரமணிய வணக்கம் சைவத்திற்குப் புறனன தன்று. அது சிவ வணக்கமே. அதனுற் கௌமாரம் எனும் தனிச் சமயம் ஒன்றில்லை என்பதெல்லாம் விளங்க வைத்தார்.

மேற் கூறப்பட்ட பரம் பொருளுக்குச் சூரியனிடத்தில் ஒளியிருத்தல் போல அருளெனப் படுவதுண்டு. பரம் பொருளை விட்டகலாத அவ்வருளுக்கு அபினை, சிவ சக்தி ஞானம், சித்து எனப் பல பெயர்கள் உண்டு. சிவனுகிய ஆன்மாவை நீங்கா சிவ சக்தியின் இலக்கணம் அக்கினியில் சூடு போன்றதாம். இவ்விடத்தில் சிவம் சர்வ வியாபகம் உடைத்தெனின் சீவனும் மாயையும் இருத்தல் எப்படியென்ற ஐயம் தோன்றுகிறது. இவ்வையத்தைச் சுவாமிகள் பின் வருமாறு களைகின்ரூர்.

உவமான முகத்தால் கூறின் அனல் போன்றவன் சீவான்மா. அந்நெருப்பின் கண்ணுள்ள சூடு போல சிவம். அதிலுள்ள ஒளி போன்றது மாயை. ஈண்டுக் கூறப்பட்ட சூடு ஐம் பெரும் பூதங்களில் ஒன்ருய் ஒளி நிறம் காட்டாததாய் எப்பொருளிலு முள்ள அக்கினி பூதமாம். ஒளி வடிவமாக இல்லாமல் சூக்குமமாக அக்கினி இருத்தல் எல்லா உடல்களிலும் காணலாம. இச் சூடாம் பூதம் போன்றதே சிவம் என்பது. இப பூதப் பொருள் சடப் பொருளைப் பற்றி ஒளியோடு விளங்கும் அக்கினியாகக் கண்ணுக்குப் புலப்படுவது, ஆன்மா வென்னும் பசுவுக்கு உவமையாம். அவ்வக்கினியை விட்டு நீங்காச் செந்நிறமே அப்பசுவின் மாயையாகிய அநாதி காரண தேகத்திற்கு உவமையாயிற்று. இருளில் அக்கினி ஒளி வீசுதலைப் போல் மலம் நீங்க ஆன்ம தேகமான மாயை ஒளி வீசும். சூக்கும சூடு பதியாகும் ஸ்தூல சூடு பசுவாகும். முப் பொருள் பற்றிய இவ்விளக்கம் புதுமுறையில் அமைந்திருப்ப தோடு தத்துவ அறிவுக்கு விருந்தாகவும் இருத்தல் உணர்ந்து மகிழத் தக்கது.

பதி பசு பாசங்கள் உள எனற்கு வேதாகமங்களின்

### சம்மதம்

நெருப்பு சூடு ஒளி ஆகிய மூன்றும் ஒன்றேடொன்று கலந்திருத்தல் போல எஞ்ஞான்று சிவ பரம் பொருள் உளதோ அன்றே சீவனும் மாயையும் உண்டு என்பது வேதாகமங் கட்கு உடன்பாடு. எனவே பதி பசு பாசம் மூன்றும் அநாதியே.

**சகள, நிஷ்களத் திரு மேனிகள் :—** சகளம்- உருவத் திரு மேனி. நிஷ்களம் - அருவத் திருமேனி பார்க்கப்படும் உருவுடைப் பொருகளெல்லாம் சகளமாகும்.

“ மொய்தரு பூதமாகி
மோகினி யந்தம் ஆகப்
பொய் தரு சமயமெல்லாம்
புக்கு நின் றிடும்பகன்று
மெய்தரு சைவமாகி
இருமூன் றும் வித்தையாகி
யெய்துதத் துவங்க ளேயு
மொன்று மிறைறெம் மிறைக்கே

என்ற சித்தியார் திரு விருத்தத்தில் கூறிய தனைத்தும் கண்டப் பொருளாகிய சகளமே

யாகும்' சகள மல்லாத நிஷ்கள மொன்றையே அருவாகவும் அவ்வகண்ட பொருளையே பரமசிவம் என்றும் கோடல் வேண்டு மென்பது இந்நூல் உடன்பாடு. பிரமன் விட்டுணு, உருத்திரன், மகேசன் என்னும் உருவ நிலை 4, விந்து, நாதம், சத்தி, சிவம் எனும் அருவ நிலை 4, சதாசிவன் என்று அரு உருவ நிலை 1 ஆகிய 9 திருமேனியும் சகளமாகும் இவை யனைத்தும் உருவே. இந்நிஷ்களத் திருமேனியையே விறகிற்றீயினன் பாலிற் படுநெய் போன் மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்'' என்பதாகத் தமிழ்மறைகள் பகர்கின்றன. இப் பரம் பொருளுக்குச் சகளத்துவம் உண்மையில் இல்லை. ஆன்மாவுக்குத் தேகம் எப்படிக் கற்பிக்கப் பட்டதோ அப் படியே பரம் பொருளுக்குச் சகளத்துவமும் கற்பிக்கப்பட்டது. உண்மையில் ஆன்மாவுக்கே மூர்த்த மில்லாத போது அதனை ஆளும்பதிக்கும் மூர்த்த மின்மை கூறலே ஏற்புடைத்தென வேதப பிராமணங்களோடு விளக்குவது அறிவுக்கு விருந்தாம்.

மாயாவாதிகள் சகசீவ பரங்கள் பொய்த் தோற்ற மென்றும் அது பிரமை என்றும் வாதிக்க ரஜ்ஜிசர்ப்ப நியாயம் ஸ்தானு புருஷ நியாயம் இரண்டினையும் ஆளுவர். மாயாவாதிகளின் ஆயுதமாகிய இவற்றைக் கொண்டே முப்பொருள் உண்மையைச் சாதித்தல் ஸ்ரீமத் சுவாமிகளின் நுண்மாண் நுழை புலத்தைக் காட்டும். ஆத்ம போதோட நிடதம் கயிற்றினிடத்துண்டாம் பாம்புத் தோற்றம் போலப் பிரபஞ்ச ஆதாரப் பிரமசத்தி மாத்திரம் இருக்கிறதாதலின் சகத்தில் இல்லை என்றும் வராஹோப நிஷத, சிதாகாயமாகவுள்ள என்னிடத்தில் சீவன் ஈசன் என்பார் கற்பிக்கப் பட்டிருக்கின்றனர். 'அன்னோர் உண்மையில் இலா'' என்றும் கூறுகின்றன. ஈண்டு கற்பிக்கப்பட்டதே யென்றது ஈசுர காரிய மாயையும் அதன் காரணமுமே யன்றிப் பரமாகிய ஈசனை அன்று. சீவம் என்றது சீவ போகத்தினை. சீவனை வினை வழியே செலுத்தும் ஈசுவர காரியம் இலதாயின் சிவ போதம் சீவிபாது. ஏனைக் கருவிகளும் இயங்கா வாகலின் "சீவத்துவமும் இன்று'' என்று சுருதி கூறிற்றெனக் கூறிய விளக்கம் இன்புறத்தக்கது.

கயிற்றரவம் என்பது விவர்த்தோ பாதான காரண மாகும். சகத்திற்கு விவர்த்த உபாதான காரணமெதுவோ அந்தச் சித்து நானென்று எப்பொழுதும் மௌனத்தை 'அச்சிரயித்திரு'' என்று வராஹோபநிஷதம் கூறும். கயிற்றுத் தானத்திற் பிரமத்தையும் அரவத்தானத்திற் சகசீவ பரங்களையும் கோடல் வேண்டும். அங்ஙன மாயின அரவுருவனைய கயிறும் அதன் நீட்சி வளைவு முதலிய விகாரங்களுமே அப்போலி அரவு தோன்றுதற்குக் காரணமா மாறு பல் வேறு வகைப்பட்ட விகார சகந் தோன்றுதற்குப் பிரமமே காரணமாகும். ஆயின் பிரமம் எவ்வித விகாரமு மற்றுச் சுத்தம் என்றதோடு முரணுமேயெனின் அற்றன்று. கயிற்றரவு நியாயத்தில் மாயையே கயிற்றுத் தானமாம். பிரபஞ்சமே அரவுத்தானமாம் எனப் பிரம தரிசனம் செய்வாருக்குத் தோன்றும் என்பதே பொருள். எனவே உபாதான காரணம் மாயையே. பங்கம் என்பது சேறு. சேற்றிற் கிடக்கும் கிழங்கி னின்றெழும் தாமரையை அச் சேற்றி னின்றெழும் பொருளெனு மருத்தத்திலே 'பங்கஜம்' எனச் சொல்லும் சிரேட்ட நியாயம் பற்றிப் பிரமத்தையே உபாதான காரணமாகக் கூறப்பட்டுள்ளது என்ற விளக்கம் மாயா வாதிகள் கருத்தை ஒழிப்பது காண்க.

**வேதந்தில் மாயை கூறப்பட்டுள்ளது:**— யஜுர் வேத ஸர்வ ஸாரோப நிஷத் கூறும் அநாத்ம மூலம் மாயா வசனப் பொருள். "ஜடப தார்த்த மூலந்தான் மாயை. அவள் ஆகாயத்தின் கண் மேகம் முதலியவற்றைப் போல பிரம சந்நிதியில் காணப்படுகின்றனள். அம்மாயை அநாதி. முடிவை யுடையவள் இருக்கிறவளுமல்லள்; இல்லாதவளுமல்லள்; அசத்தியுமல்லள்; சத்தியுமல்லள்; எனவே மாயை சடமே. ஆயினும் ஏனை இரு பொருளையும் போல அநாதி காரணப் பொருள் எனவே படும். இதனையே திருமந்திரமும் பதி பசு பாசம் எனப் பகர் மூன்றிற் - பதியினைப் போற் பசு பாச மநாதி பதியினைச் சென்றணுகாப் பசு பாசம்'' எனப் பகர்ந்தது. 'பதியணுகிற் பசு பாசம் நிலாவே' என்ற ஈற்றடிக்குப் பதிஞானத்தைப் பசு அடைந்தால் ஆணவ மாதிப் பாசங்கள் தம் பிரபாவத்தோடு நிற்க மாட்டா என்று பாம்பனடிகள் கூறிய உரையும் கவனிக்கத் தக்கது. மாயை சத்தியமுமல்ல என்பதற்கு காரணக் கேடுடைமையும் அசத்தியமுமல்ல

என்பதற்கு காரண முடைமையையும் காட்டி இந்நியாயம் "காரியங்களழியும் காரணம் கிடைக்கும்" என்று சிவஞான சித்தியாரும் கூறிற்று எனக் கூறி இது பற்றி மேலும் சுவேதா சுவத ரோப நிஷத், நாரதபரிவ்ராஜ கோப நிஷத்துக்களிலுள்ள மந்திரங்களை மேற் கோளாகக் காட்டி ஆன்மாக்கள் பல; அவை உலக வடிவுடைமையால் கருத்தா வல்ல என்பனவாதியான வேத விளக்கங்களை விளங்க எடுத்துக் காட்டியுள்ளார்.

உபநிடதங்களிற் கூறப்படும் பிரதிபிம்பம், பிம்பப் பிரதி-பிம்பம், கடஜலபானு, கடாகாச மஹாகாசம் முதலிய திருஷ்டாந்த நியாயங் களெல்லாம் சிவபெருமானுக்குக் கூறப்படும் அட்ட மூர்த்தி நியாயத்தில் அடங்கும். இந்நியாயங்க ளனைத்தும் பிரமம் எப் பொருளிலிருந்தும் ஒரு தொடக்கு முன்ன திருத்தலைப் புலப்படுத்தும்.

"ஊனாய் உயிரானா யுடலானா யுலகானாய்-வானாய் நிலனானாய் கடலானாய் மலையானாய்" எனச் சுந்தர மூர்த்திகளும், "வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி ஊனாகி உயிராகி' என மாணிக்க வாசகரும் கூறிய தானது நிஷ்களப் பொருள். கண்டப் பொருள்களோடு அவ்வப் பொருளாகக் கூடி நின்றும் அவற்றால் விகாரப் படாத அந்தர நிலையைச் சுட்டும் என்பதாம். அது எங்ஙனம் கூடுமோ வெனின் உப்பு நீ ருறைமீன் உப்பே ருதிருக்குமாறு என்க.

பதிக்கு பிருத்திவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சந்திரன் சூரியன், சீவான்மா எனும் எட்டும் அட்டமூர்த்தங்களாகும். எப்பொருளாய்க் கூறினும் அது அப்பதி யினையே சுட்டும். பொருளினது உண்மையை மறுத்துப் பிறிதொன்றாகக் கூறுதல் தண்டி யலங்காரத்துள் பொருளவநுதி அணி என்னுமோர் அலங்காரமாகும். அதன்படி, பதியை அட்டமூர்த்தங்களாகக் கூறுவது எனினும் ஒக்கும்.

சிவனுக்கு நிமித்த காரணம் ஒன்றுமே யுரித்து. உபாதான காரணம் உரித்தன்று என்பதை ஊர்ண நாபி நியாயங் காட்டிச் சுவாமிகள் விளக்கியுள்ளார். ஊர்ண நாபி (சிலந்திப் பூச்சி) ஆனது எப்படி நூலைச் சிருட்டிக் கின்றதோ பூமியில் எப்படிப் பல ஓடதிக ளுண்டாகின்றனவோ அப்படிப் பிரமமாகிய அக்ஷரத்தினின்று யாவும் உண்டாகின்றன என்பது முண்ட கோப நிஷத் வாக்யமாகும். மயிர்கள் சித்தல்லாத அசித்தாயிருத்தலால் அவை உடம்பாகிய அசித்திலிருந்து வந்தன. உயிராகிய சித்திலிருந்து வந்தனவல்ல. காரணம் சித்து பரிணமியாது. ஊர்ண நாபியின் உடம்பே உபாதான காரணம். அதன் கண்ணுள்ள உயிரே நூலினைச் செய்யும் நிமித்த காரணம்; பிரபஞ்சம் ஊர்ண நாபியினாற் செய்யப்பட்ட நூல் வலையையும் பிரபஞ்சத்தை ஒடுக்கிப் பிரமம் தனி நிற்கும் நிலை ஊர்ண நாபியையும் ஒக்கும் என்றார். குயவன் நிமித்த காரண மென்றும் திகிரி துணைக் காரணம் என்றும் இதுகாறும் சாத்திரங்கள் கூறிவந்த உவமானம் பொருந் தாது. காரணம் குயவன் மண்ணிற்கு வேறு யோருடம் பின்னுயிருக்குமாறு சிவம் இராமே, எப் பொருட் கண்ணும் வியாபியாய் உடங்கியைந்து நிற்றலின் இதற்கு மேற் கோளாகச் சுவாமிகள் "பிரமம் அவ்வப் பொருளாகவும் கூடி ஆதார அந்தர வத்துவாக நிற்பேனென மாயா காரணத்தி னின்று சிருஷ்டிசெய்யத் தொடங்கிற்று" என்ற சாந்தோக் யோப நிஷத் வரிகளைக் காட்டியுள்ளார். பசுவாகிய சீவனது பந்தமே பாசம். "வினையாததொர் பரிசில்வரு பசுபாசவேதனை யொண்டளையாயின தவிரவ் வரு டலைவனது சார்வாம்" எனத் திருஞான சம்பந்த சுவாமிகள் திருமுதுகுன்றத் தேவாரம் கூறும்.

எனவே பதி பசு பாசம் மூன்றும் அநாதி நித்தியம். ஆகலினன்றே ' பல கலை யாகம வேதம் யாவையினும் கருத்துப்பதி பசு பாசம் தெரித்தல்' என்று சிவப்பிரகாசமும் கூறிற்று.

**வேதாகமக் கூற்று ஒற்றுமை:—** வேதத்தில் ஆன்மாவுக்கு அஞ்ஞானமாகிய அவித்தை அல்லது பாசம் அநாதி எனக் கூறப் பட்டுள்ளது. ஆகமம், ஆன்மாவுக் கழுக் கானது மலம் என்றும் அது அநாதி என்றும் அரிசியிலே தவிட்டைப் போலவும் உமியைப் போலவும் முளையைப் போலவும் சகசக மாக உளது என்றும், அம்மலத்தில் தான் மாயையுமுளது என்றும் கூறுகின்றது. ஆதலால் இவ்விருதிற நூல்களும் ஒரு முடிவினவே.

பசுவாகிய ஆன்மாவை மல மாயையற்ற சுத்தம் என வேதாந்தம் கூறியது, முத்தி

நிலையிலுள்ள ஆன்மாவிற்கே பொருந்தும் பெத்த நிலையில் ஒவ்வாது. வேதமானது முத்தி முடிவையே ஆரம்பத்தினும் வைத்துக் கூறிற்று.

**அந்தரான்மா, பரமான்மா:**— ஆன்மா இவ்விரு திறத்தவாகக் கூறப்பெறும். சீவனின் தேகத்திற்கு உள்ளும் புறம்பும் காற்றும் ஆகாசமும் உளது போல உயிர்கள் தோறும் உள்நின்றிருக்கும் பிரமத்தை அந்தரான்மா என்றும் அவ்வுயிர்கட்கு வேறான பெரு வெளிப் பக்கத்திலுள்ள சொல்லுதற்கரிய பொருளைப் பரமான்மா என்றும் வேதாகமும் எடுத்துரைக்கும்.

சீவான்மா இருக்கும் குகை [இடம்] உடம்பிலுள்ள இதயத்தானமே. அவ்வான்மாவை உடம்பாகக் கொண்டுள்ள சிவமெனும் பரமான்மா இருக்கும் குகை அச்சீவான்மாவின் இதயமே; கடாகாச மஹாகாச உவமைகள் இதில் பொருந்துமாறு காண்க.

**பிரம்ம ஸூத்ரம்** — ஈண்டு மாயாவாத நூல் என்று கூறப்படுகின்ற பிரஹ்ம ஸூத்ரம் பற்றி சுவாமிகள் கூறும் கருத்து அறிதற்குரித்து. இது சித்தாந்த போதகமாய் உள்ளது; மாயாவாத சாத்திரம் அன்று என்று சுவாமிகள் கூறுமா றறிக "இச் சூத்திரமாகிய சாத்திரமும் இதற்கு ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியரால் செய்யப்பட்ட சைவ பாடியமும் அர்ச்சிராதி மார்க்கம் போந்தெய்து சிவலோக கதியைக் கூறி முடிதலினால் அவை தாழ்வுடையனவாகா. சிவ பரத்துவ போகார்த்தச் சுருதிகளை எடுத்துப் பிரமாணிக்கப் பட்டமை சாலப் பெரிதாயிருத்தலின் அப்பாடியம் சிவ நெறிச் செல்வர்கள் அவாவி இனிது படிகக்த் தக்கதேயாகும். சாதிப் பெருமை பாராட்டுவார் திருத்தி நோக்கி அதனுழை தெரிக்கப் பட்டவுனவுஞ் சிலவுள. அவை கருதியும் அதனை இழத்தல் கூடாது. அபிப்ராய பேதங்கள் பன்னூலகத்தும் உண்டாதல் தொல்வழக்கே. பிரஹ்ம ஸூத்ரம் என்னும் மீமாஞ்சையானது பண்டையார் வழக்கிற் பிரமாணமாக நிலவுகின்ற வித்தைபதினான்கனுள் ஒன்றாய் இருத்தலானும் சிவபெருமானது ஆஞ்ஞையின்படி விட்டுணு மூர்த்தி வியாசராக அவதரித்துப் பிரமத்தை விதிக்கும் இச்சூத்திரம் செய்தனரென ஸ்காந்த மஹா புராணத்தில் பெறப்படுதலானும், "......இது உபநிடத நெறியென்று உணர்த்துதலானும்" உமாபதிசிவாச்சாரியாரும் பிரஹ்ம சூத்திரத்தை அங்கீகரித்தார்.

இப் பிரஹ்ம சூத்திரத்தின் பெருமையை மீட்டும் துறவற விளக்கப் படல முதல் சூத்திர உரையிலே விளக்குவதால் இந்நூலின் மீது சுவாமிகளுக் கிருந்த பெருமதிப்புப் புலனும்.

**மூர்த்தி பேத நிச்சயம்:**—பிரமன் முதலாய பஞ்சகர்த்தர்களும் சர்வே சுவரனால் ஐந்தொழில்களும் நடாத்தச் சிருட்டிக்கப் படுவர். அந்தக் கருத்தர்களும் அந்நிர்குணப் பிரமப் பொருளின் அம்சமாவர். பல மதங்களும் தத்தம் தெய்வத்திற்குக் கர சரணாதி அந்தம் ஆயுதம் முதலிய ஒன்றும் இலலை என்று கூறும். சைவம் வைணவம் ஆகிய இரண்டினிலும் வடிவத்தை விடுத்து "நீ சொரூப மாத்திரையாகவே இருக்கின்றனை" எனத் துதித்துத் தியானித்தால் அது அந்தப் பரம் பொருளை எவ்வித மாறுபாடு மின்றி வழிபடும் மார்க்கமாகவே அமையும். 'மதவாதர்கள், வாய் ஞானம் ஒனறுமே கூறுவோர், ஞானச் செல்வத்தையடையார்' எனசுவாமிகள் சாதித்தது குறிக் கொள்ளத் தக்கது.

பசுவினது பான் மடியிலிருக்கும் உண்ணியானது அம்மடியிற் சுரக்கும் பாலை உண்ணாது விட்டு உடம்பு வீங்க உதிரத்தையே உண்டல் போல, உங்கள் கடவுள் வேறு. எங்கள் கடவுள் வேறு என்று வரதிப்போர் எண்ணிறந்த சாத்திரங்களை ஆராய்ந்திருப்பினும் ஞான மின்றி அஞ்ஞானமே யுள்ளவராவார் என்ற கருத்து மனத்தில் இருத்தல் இன்றியமையாததாகும்.

### 5. பஞ்ச கிருத்திய நிச்சயம்

சூரிய சன்னிதானத்தில் நல்ல தாமரை முகைகள் மலர்தல் போல சிவ சன்னிதான சத்தியால் யாவும் குறைவின்றித் தோன்றும். பஞ்ச கிருத்தியங்கள், பரம் பொருளுக்கு விளையாட் டென்று வேதங்கள் கூறும்; வண்ணானைப் போல் ஆன்மாக்களின் மல அசுத்தங்களைப் போக்கும் தொழிலாகச் சிவாகமங்கள் பகரும். சங்கற்ப மாத்திரை யான் அவற்றை எளிதிற் செய்வான் என்று வேதம் கூறுகின்றது. ஆகமம் விளக்குவது இச் செயல் சீவகாருண்யம் என்பது. இரசவாதி செம்பை மாற்றுயர்ந்த பொன்னாகச் செய்வது போல் இறைவன் தன் தயவால்

சீவர்களால் விரும்பப்பட்ட வழியிலே அவர்களை நடத்தி அவர்களின் அனுபவ வாயிலால் இயற்கையான ஆசையை ஒழிப்பித்து முத்தியிற் செலுத்துவன்; மருத்துவன் நோயளவாகக் கைப்பான மருந்து கொடுத்துக் குணப் படுத்துதல் போல வினை யளவாய் இறைவன் தண்டித் தருளலும் மறக் கருணையினுலாம். இப்பஞ்ச கிருத்தியமே அனவரத தாண்டவம் என்றும் கூறப்படும்.

### 6. பஞ்ச பாச விவரம்

செம்பென்று உவமிக்கப் பட்ட சீவனுக்குள்ள மும்மலங்களிலே களிம்பு வெட்டு வாய் தோறும் தோன்றி அதன் சொருபம் முழுதையும் மறைத்து நிற்பது போல ஆணவ மலம் அறிவின் கண் வியாபித்திருக்கும். அச்செம்பின் வாசனை போல காரண தேகத்தினின்று தோன்றி விருத்தியாகும் கன்ம மலம் நிற்கும். அச்செம்பிற் செந்நிறம் இருப்பது போல அம்மாயா மலம் காரண தேகம் முதலியனவாய்ச் சிறப்புற்றிருக்கும். இவ் விளக்கம் இதற்கு முந்திய எந்தச் சாத்திர நூலுள்ளும் கிடைக்காத தொன்றும்.

இப் பகுதியில் ஏசான்மவாதம் மாயாவாதம் ஆகியன மிகத் திறமையாகக் கண்டிக்கப் படுகின்றன.

ஞான ககனமாய்ப் புறத்திலுள்ள சிவமே அகத்தும் பிரகாசித்துக் கொண்டிருக்கும். அஞ்ஞானம் அல்லது ஆணவ மலம் சீவனுக்கு யாங்ஙனம் இருக்கும் என்ற அரிய வினவிற்கு அரிய விடை பகர்கின்றார் சுவாமிகள் கூகைக்குச் சூரியன் இருட்டாகக் காணப் படுகின்றான். கூகை பகற் குருடாய் இருத்தற்கு அதன் விழிக் குற்றமே ஏதுவாதல் போல யாண்டும் ஞானப் பகலாகவே உள்ள தெய்வத்தைத் தரிசியாது குருடாய் இருப்பதற்கு ஆணவ மலமே ஏது. பூத விருளும் ஆணவமாகி ஐவகைப் பாசங்களும் சிவத்தை மறையாது சீவனது அறிவையே மறைத்து நிற்கும்

### 7. கன் மத்திரய ஆசங்கை நிவிர்த்தி

கேடில்லாத ஞானக்கினி உதிக்கின் ஆகாமியம் அனைத்தும் ஒழியும். நிலை பேருக எஞ்சி நின்ற சஞ்சிதம் அப்பொழுதே சாம்பராகும். பிராரத்தம் வலி குறைந்து நின்று உடலூழாய்க் கழியும். உடம்புள்ளளவும் பிராரத்தம் ஒழியாது என்றமையால் தூல மனத்தோடு கூடிய பிராக்கிருதர்களுக்கு அனுபவம் தூலமாகும்; சூக்கும மனத்தோடுள்ள சீவன் முத்தர்களுக்கு அனுபவம் சூக்கும மாகும்.

### 8. முத்தியிலும் மும்முதல்களுள.

சீவ போதம் அழிந்து சிவ போதமானுல் அபேத நிலையில் பதி பசு பாசமெனும் முப்பொருள்களும் இருத்தல் எப்படி? அரணிக் கட்டையில் தீயெழுந்து அவ்வரணியைத் தன்னுள் அடக்கி மேலிட்டு நிற்கும். தீ மயமான அக்கட்டையின் கண்ணே தீயும் அதனை நீங்காச் சூடும் கலந்து நிற்பது போலச் சிவமும் சீவான்மாவும் பாசப் பொருட் கண்ணும் வியாபித்துப் ப்ரகாசித்துக் கொண்டிருக்கும் முத்தி நிலையிதுவே. இவ்விளக்கம் வேறு சாத்திரங்களில் பெறப் படாத தாகும். முத்தியின் கண் பதிப்பொருளும் மற்றிரண்டும் தோன்றுமல் ஒடுங்கி அவிரோத நயமாகப் பொருந்தும்.

### சுத்தாத் வைதம்

இப்பதத்தின் பொருளினை இவ்வாசிரியரே உள்ளபடி கண்டு கூறியுள்ளார். சுத்தாத் வைதம் என்ற தொடர் சுருதிளில் இல்லை என்பார் கூற்றுப் பொய்க்கும் படிப் பல எடுத்துக் காட்டுகளைக் காட்டுகின்ருர்.

விசிட்டம் முதலிய அடைகள் அவ்வம் மதாச்சாரியாரால் அத்வைதத்தை விசேடித்துச் சேர்க்கப்பட்டன; அவ்வாறு விசேடிக்கப் பட்டுப் பொருளுணர்த்தாது சுத்தமாய் நின்றே பொருளுணர்த் தலின்சுத்தாத்வைதம் எனின் அதுவும் பொருந்துவது அன்று. அடை மொழி அ + துவைதம் எனப்பிரியும். ஈண்டு அகரம் மொழி முதற்கண் மெய் வந்தமையின் நகரம்கெட வந்ததாகும். இவ்வகரத்திற்குப் பதஞ்சலியார் ஆறு பொருள்கள் கூறுகிருர் அவற்றுள் தற்சாத்ருச்யம் அல்லது ஒப்பு எனப்பட்டது தான் சிவ சாமியம் ஆகும். சாமியம் = சமத்துவம். சத்திரியனுகவேனும் வைசியனுக வேனும் உள்ள ஒருவன் யஞ்ஞோப வீதந் தரித்துப் பிராம்மண கன்மங்களைச் செய்யுமிடத்து அவன் பிராமணன் எனப்படான்; அவன் பிராமணனுக்கு ஒப்புளோன் ஆன அப்பிராமணன் எனப்படுமாறு சீவான்மா யோக ஞான விளக்கமுற்றஞான்று பரமான்மா எனப்படாது. அப்பர

மான்மாவின் சருவஞ்ஞத்துவம் முதலிய கலியாண குணங்களை அஃதடைந்து அதனை யொத்திருக்கும் என்றுரைக்கப்படும். அத்வைதம் எனபதற்கு அன்மைப் பொருளே வைதிக சித்தாந்தத்திற் கொள்ளப்படும். ஏகான்ம வாதிகளின் அத்துவிதப் பொருளுக்கும் சைவர்களின் அத்துவிதப் பொருளுக்கும் இடையே வேறுபாடு.

தன்னினம் பிறவினம் எனும் இரண்டு மாகிய துவிதமின்மையே அத்துவிதம் என்றும் உயிரனைத்தும் அறிவுடைய் பொருளாய வழி பிரமத்திற்குத் தன்னினமே யென்றும் அறிவில்லாப்பொருள்களே பிரம்மத்திற்குப் பிறவினம் என்றும் அறிவுடைப் பொருள்கட்கு முதற் காரணம் பிரமம் என்றும் ஏகான்ம வாதிகள் உரைப்பர்.

இப் பொருளைச் சுவாமிகள் மறுக்கின்றார். ஏகான்ம வாதிகள், "இரண்டில்லையெனின் ஒன்றுதான்" என்றும் அதுதான் அத்துவிதம் என்றும் உரைப்பர். ஆயின் 'ந' கரத்தின் பொருளாகிய அபாவம் இன்மைப் பொருளைப் பயந்ததாதல் வேண்டும். இந் 'நகரம்' எண்ணுப் பெயராகிய 'ஏகம்' என்பதோடு வரின் ந+ஏகம் = அநேகம் என ஆகும். அப்பொழுது ஏகம் என்ற ஒன்றில்லை. சூனியமே என்ற பொருளைப் பயக்க வேண்டும். ஆனல் சூனியம் என்ற பொருளைப்பயவாமல் வடமொழி மரபுப்படி ஏகம் அல்லாத இரண்டு அல்லாத அதற்கு மேற்பட்ட மூன்று முதலியவாகும். ஆகவே துவிதம் என்னும் எண்ணுப் பெயர் மேல் வந்த நகரமும் இன்மைப் பொருள் பயவாமல் அன்மைப்பொருளையே பயக்கும் என்று உறுதி செயல் வேண்டும். செயவே பிரமம் பசுபாசங்கட்கு வேறன்மையாக உடனியைந்து நிற்குந் தன்மையை அத்துவிதம் உணர்த்திற்று. "ஒரு காலத்திற் கூடியதாகக் கூறப்படும் சையோக மல்லாத சமவாய மெனுந் தாதான்மிய சம்பந்தமே வியாபகமும் வியாப்யமுமாய் உடங்கியைந்து நிற்கும் அத்துவிதம்" என விளக்கினர் சுவாமிகள்.

இவ்வாறு பொருள் கொள்ளாது அத்துவிதமும் ஏகமும் ஒரே பொருள் பயப்பன வெனின் ஏகபத்தினி விரதன் என்பதோடு அத்துவித பத்தினிவிரதன் என்றும் ஏக புத்திரன் என்பதோடு அத்துவித புத்திரன் என்பதும் வழக்கில் இருத்தல் வேண்டும். அத்தகைய வழக்காறு இன்மையின் அத்துவிதத்திற்கு ஏகான்ம வாதிகளின் பொருள் பொருந்தாது எனச் சுவாமிகள் மறுத்த சால்பு அறிந்து மகிழ்க.

எனவே அத்து விதம் ஏகமுமன்று துவிதமுமன்று. இவற்றிடையே சம்பந்தம் உணர்ந்து நிற்பது அலி என்பது ஆணுமன்று. பெண்ணு மன்று; நடு வென்பது அடியுமன்று முடியுமனறு; சோறு என்பது அரிசியுமன்று, கூழுமன்று; மாலை என்பது; இரவுமன்று பகலுமன்ற; என்பது போல அத்துவிதம் என்பது ஏகமுமன்று, துவிதமுமனறு யானையின் துதிக்கையில் நாசியும் கையும் இருத்தல் போலவும் பேய் பிடித்தவனிடத்துப் பேயும், பிடிபட்ட உயிரும் இருத்தல் போலவும், வௌவால் வடிவில் விலங்குக் கூறும் பறவைக் கூறும் இருத்தல் போலவும் அத்துவிதத்தில் ஏகமும், துவிதமும் கலந்திருக்கும். எனவே சைவ சித்தாந்திகள் கூறும் அத்து விதம் என்பது சுழுத்தியில் சீவான்மாவும் பரமான்மாவும், வியாபகமும் வியாப்பிய முமாகுந் தன்மையே வாகும். சுவாமிகளே தன் காசி யாத்திரையில்,

'ஒன்றெனற்குச் சுட்டு
விரலினையு மோரிரண்
டென்றிடற்கஃ தோடொன்
றினையு மிரண - டொன்று மென
ஆட்டியொன் றுக்குதலுங்
காட்டாம லத்துவிதங்
காட்டியதே கல்லாலிற் கை.

எனக் கூறியுள்ளார். ஏகவாதம் குழை கூழினையும் துவிதவாதம் அரிசியினையும், ஏகமுமன்று துவிதமுமன்று என்னும் அத்துவித சித்தாந்தம் பதமான சோற்றினையும் ஒக்கும் என உவமான முகத்தான் சுவாமிகள் எளிய முறையில் இதனை விளக்கியுள்ளார்.

வேதமுடிவும் ஆகம முடிவும் ஒன்றே. சுத்தாத்வைத அனுபூதியின் கண் இவ்விரண்டும் விரோத முருமல் ஒரு பொருளாக வே இருக்கும். ஆகமம் 'நீ அது ஆகுவை' என்றும் வேதம் 'அது நான்' என்றும் கூறும்.

இவ்வாறு முப்பொருள் நிச்சயத்தைக் கூறி ஆன்மாக்கள், பரம் பொருளோடு பிரிவின்றி நிற்கும் நிலையை அனுபவத்தி, லெய்தித் துக்கமின்றி இருக்கு மென்றும் காலவயப் பட்டவுடன் இச்சீவன் முக்திபதம் நீங்கி விதேக முத்திபதம் எய்தும் என்றும்

விளக்கு வதோடு பதி பசு பாச யதார்த்த விளக்கப் படலம் முற்றுகிறது.

துறவற விளக்கப் படலம் தமிழ் மொழியில் எந் நூல்களிலும் விளக்கப் பெருத துறவு நெறி முறைகளை விளக்குகின்றது. பிறவி யறுக்க விரும்புவோன் உலகைத் துறத்தல் அவசியம். உலக வாழ்வில் இருந்து கொண்டே பற்றற்ற வாழ்வில் வாழல் கூடு மென்பது இயலாத தொன்ருகும். அத்தகை யோரைத் துறவி எனல் கூடாது அகப் பற்று புறப்பற்று இரண்டினையும் கிரமமாக விடுபவரே கடைத் தேறுவர். குமார மூர்த்தியைத் தந்த பெருமான் தனித்த சந்நியாசியாகக் கல்லா னிழலில் இருந்து யோகம் பயின்றது உலகோருக்கு இவ்வுண் மையை உணர்த்தவே

சார்பறுத்தல் என்ற பகுதியில் தூமாதி மார்க்கமும் அர்ச்சிராதிமார்க்கமும் விளக்கப் பட்டன. இதில் இறந்தபின் மனிதனுக இருந்த உயிர் அடையும் கதிகள் தெளிவாகக் கூறப்பட்டன. இவ்விரு மார்க்கத்திற்கும் உரியன அல்லாத உயிர்கள் அதாவது எந்த நற்கருமமும் செய்யாத உயிர்கள் பிறப்பிறப் புக்களே எய்தும் என்று வலியுறுத்தியுள்ளார்.

இதில் கூறப்பட்டுள்ள சிவயோகம் சமாதி முதலியன நல்லாசிரியர் பால் உணரத் தக்கன. பிரமணர்கள் தம் சாதி அபிமானத் தால் மனுதர்ம சாஸ்திரத்திலும், ஏனைய நூல்களிலும் எழுதிச் சேர்த்த முடிபுகள் பல என்று எடுத்துக் காட்டி அம்முடிபுகளைச் சுவாமிகள் மறுத்துள்ள விதம் அறியத் தக்கது. பிரமவிதனை, தவம் உடையார் யாவரே யாயினும் அவரே உள்ளபடி பிராமணர். பார்ப்பனருக்கே வேதம் உரிய தென்று கருதி, ஆசாரமுள்ள மற்றையோர் அதனைக் கைவிடுதல் கூடாதென்பது சுவாமிகள் நம்மனோருக்குக் கூறும் அறி வுரையாகும்.

இத்தகைய சிறப்புவாய்ந்த அரிய பெரிய சாத்திரம் நமக்குக் கிடைக்கப்பெற்றிருந்தும் உரியமுறையில் பயன்படுத்தாமல் இருப்பது அஞ்ஞானமேயன்றே. சித்தாந்த சைவர்கள் அந்நூலைப் பரப்புவதைத் தம் தலையாய கடமையாகக் கொள்வார்களாக!

"குமர குரு தாச னடி நினைந் தவோமே.
குறைவில் முருகேசனருள் புனைகு வோமே

உ

குமரகுருதாச குருப்யோ நம:

# பாம்பன் கண்ட சேந்தன்

(வித்துவான் அம்பை சங்கரனார்)

இத்தமிழுலகில் வாழும் மக்கள் யாவரும் சிவபெருமானையே முழுமுதற் கடவுள் எனக் கருதுவர். விநாயகர், முருகன் போன்ற தெய்வங்களைப் பாமர மக்கள் எவ்வாறு முறை கொண்டாடுகின்றனரோ அது போன்று, அச்சிவபிரானுர்க்கு முறை கூறி வாழ்த்தி வணங்குதல் மரபு. பொதுவாக இந்நிலையிருந்தாலும் சில சிறப்புடைய பெரியோர்கள் தெய்வங்களுள் வேறுபாடு கற்பித்தல் கூடாது என்றும் எத்தெய்வத்தை வழிபட்டாலும் அது சிவபெருமானை வழிபட்ட பெருமையையே ஒக்கும் என்றும் கருதுவர்.

" யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வ
மாகி யாங்கே
மாதொரு பாக னுர்தாம் வருவர் "

என்பது நம் சைவ சித்தாந்த சாத்திர முடிவு.

இவ்வாறு பொதுவாக நம் சாத்திரங்கள் கூறினும் அக்கருத்தை வலியுறுத்திக் கூறிப் போந்தவர் நம் பாம்பனடிகளாவர். அவ்வடிகளார் முருகனும் சிவனும் ஒன்றே ; அவ்விருவருள் வேறுபாடு கற்பித்தல் ஒண்ணுது என்பதை மனத்துட் கொண்டு தாம் இயற்றிய நூல்கள் யாவற்றிலும் அக் கருத்தை வலியுறுத்திப் போந்தார்கள். அதற்கு அவர்கள் வேதம், ஆகமம், உபநிடதம் முதலிய எல்லாப் பகுதிகளிலுமிருந்து மேற்கோள் காட்டி நிறுவும் சிறப்பு ஒப்பிட்டுக் கூற முடியாத பெருமை வாய்ந்ததாகும்.

சுப்பிரமணியரை அறுமுகச்சிவம் என்றும் பரமசிவனை ஐம்முகச்சிவம் என்றும் சுவாமிகள் குறிப்பிடுவது மரபு. சுப்பிரமணியருக்குரிய பல பெயர்களையும் எடுத்துக் கூறி அப்பெயர்கள் யாவும் முருகனின் முழுமுதல் தன்மையையே குறிக்கின்றன என்பதைச் சுப்பிரமணிய வியாசத்துள் சுவாமிகள் மிக அழகு பொருந்த எடுத்துக் கூறியுள்ள திறம் உளங்கொளற்பாலது.

சேய் எனில் புத்திரன் எனும் பொருள் கொண்டு சிவ பிரானின் புத்திரனுதலின் முருகப்பிரானுக் கப்பெயர் வாய்த்தது என்றே பலரும் எண்ணுவர். சுவாமிகள் அவ்வாறு கருதவில்லை

" செவ்வாய் முருகன் இளமை புத்திரன்
இவ்வா றெல்லாம் சேயென இசைப்பர் "

என்பது சேந்தன் திவாகரம். இவ்வாறு மேற்கோட் கூறுவதுடன் அவற்றுள் முருகனுக்கே சேய் எனத் தனிப் பெயருண்டு என்று கூறி அப்பெயர்க் காரணமும் கூறுவர்.

செம்மை என்னும் பண்புப் பெயர் ஈறு போய் 'செம் என்று ஆயிற்று. முதனீண்டு பின்னர் 'சேம்' என்று வந்தது. பிறகு முன்னின்ற மகரமெய் யகர மெய்யாகத் திரிந்து அச்சொல்லே சேய் என்று ஆயிற்று என்று பாம்பனடிகள் எழுதியருளிய திறம் மிகவும் உளங்கொண்டு மகிழற்பாலதாம், சேந்தன் என்பதும் செம்மைப் பண்பினடியாகப் பிறந்த பெயரே என்பதற்குச்

" செக்கரும் செம்மையும் சேந்து பாடலமும் "

என்ற பிங்கலந்தை அடியை யெடுத்துக் காட்டி, ஈண்டுச் சேந்து என்பது செம்மைப் பண்பைக் குறிக்கவந்த சொல் எனத்தம் கோள்நிறுவும் முறைமிகவும் நினைந்து நினைந்து மகிழ்தற்குரியது.

இக்கருத்துக்கு அரண்செய்யாத பகுதி களைச் சுவாமிகள் ஏற்றுக் கொள்வதில்லை. அவ்வாறு ஏற்றுக் கொள்ளாமையோடன்றி மறுத்துஎழுதியும் தம்கருத்தைத் தெளிவாக்கி யுள்ளார்கள்.

வடமொழிக் கந்தபுராணம்தான் முருகப் பிரானை முழு முதற்பொருளெனப் போற்றத் தக்க நிலையில் உள்ளதென்பதும் பிற நூல்கள் யாவும் அதனை அடியொற்றி வந்தாலும் பின் ஞோர் வேண்டும் விகற்பங் கூறியதோடன்றி முருகப் பெருமான் முழு முதற்றன்மைக்கும் குறைகள் கற்பிக்கின்றன என்பதும் சுவாமி கள் கருத்தாகும். அதனுற்ருன் முருகப்பெரு மானின் பெருமையைச்சிறிதும் குறையாது மக்களுக்குக் காட்டவல்ல நிலையில் ஸ்ரீ மத் குமாரசுவாமியம் என்னும் ஒருசிறந்த நூலைப் டாம்பனடிகள் இயற்றியுள்ளார்கள். அது படித்து உணரத்தக்கதொரு சிறந்த நூலா கும்.

மேலும் பல்வேறு நூல்களில் காணப் பெறும் முருகப் பெருமானின் வரலாறுகள் குறித்தும் அவ்வரலாறுகளில் முருகப் பிரானின் முழுமுதற்றன்மைக்கு வரும் தடை கள் குறித்தும் அவற்றைக் களைய வேண் டிய இன்றியமையாமை குறித்தும் சுவாமி களைப்போல அழுத்தமாகவும் வெளிப்படை யாகவும் இதுகாறும் எவரும் கூறிற்றிலர். பல்வேறு தலங்களுக்குரிய புராணங்களிலும் முருகப் பெருமான் பெருமை எவ்வாறு கூறப்பெறுகின்றது எனபதையும் சுவாமி கள் தாம்எழுதிய சுப்பிரமணிய வியாசத் துள் எழுதிக் காட்டியுள்ளார்கள். இதிலி ருந்து சுவாமிகள் எவ்வளவு அகனறும் ஆழ்ந்தும் புலமைச் சிறப்புப் பெற்றுள்ளார் கள் என்பதைத் தெள்ளிதின் உணரலாம்.

கலியுக வரதனுய அம்முருகப் பெருமா னின் பெருமையை அறியவிரும்புவோர் அவ சியம் சுவாமிகளால் எழுதப்பெற்ற சுப்பிர மணிய வியாசம் என்னும் நூலை நன்கு ஓதி உணர்ந்து பலன்பெற்றுச் சிறந்தோங்குவார் களாக.

குருவருள் வாழ்க.



உ

ஓம் குமர குருதாச குருப்யோ நம:

# சைவச் சின்னம்



## ந. ஜெயராமன்

சைவச் சின்னங்களாவன நீறு, கண்மணி மாலை, திரு நாம ஜபம் என எம் குரு நாதர் பாம்பன் ஸ்ரீ மத் குமர குரு தாசப் பெருந்தகை வரையறுக்கின்றார். இவை மூன்றாயினும், மூன்று சின்னங்களையும் ஒருங்கே உடைமையே முழுமை பெறுமாகலின், தலைப்பு ''சின்னம்'' என ஒருமையில் வந்துள்ளது.

பூர்வ ஜென்மத்தில் நாம் இயற்றிய பூஜா பலன் கொண்டே இப்போது நாம் சைவர்களாய், சைவத்தில் நாட்டம் உடையவர்களாய், புறச்சமயம் பலவிருக்க, உட்சமயம் இஃதென உணர்ந்து அதன் வழி நடக்கும் பேற்றினைப் பெற்றுள்ளோம். எங்ஙனம் ஒரு பெண் மணமானவள் என்பதற்குச் சில குறிகளுடன் தோன்றலவசியமோ, அங்ஙனமே, பசுவாகிய நாம், சிவனைப் பதியாகக் கொண்டுள்ளோம் என விளக்க இக்குறிகள் அவசியம். எங்ஙனம் பத்தினிப் பெண்டிரிடம் மாற்றான் தீய எண்ணம் கொள்ள அஞ்சுவானோ, அங்ஙனமே புறச் சமயிகள் சிவ சின்னம் உடைய்வர்களிடம் அணுக அஞ்சுவார்கள். சடைமுடி, முண்டிதம், குறிப்பிட்ட உடை முதலியன சைவச் சின்னங்களாகா. அவை அவரவர்கள் மனோபாவப்படி யாவன. மணி, மந்திர ஔஷதங்கள் நோயாளனின் பிணியைக் குணப் படுத்துவது போல அறியாமையும்,பிறவியுமாகியதீராதநோய்கள்தீர்க்கவல்லவை அணியும் திருநீறும், புனையும் அக்கமணியும், அருச்சிக்கும் சிவநாமமுமேயாம்

விபூதி, பஸ்மம், பசிதம், காரம், இரக்ஷை காப்பு எனும் சொற்கள் திரு நீற்றைக் குறிக்கும்.

(வி = மேலான; பூதி = ஐசுவரியம்) தன்னைத்தரித்தவர் கட்கு மேலான அழிவில்லாத ஐசுவரியத்தை (முத்திப்பேற்றை) அளிக்க வல்லது விபூதி; பாவங்களையெல்லாம்நீறுக்குவது நீறு, பஸ்மம்; சிவஞானமாகிய சிவதத்துவத்தை விளக்குவது பசிதம். உயிர்களது மலத்தை நீக்குவது காரம். ஆன் மாக்களைத் துன்பத்தினின்றும் நீக்கி இரக்ஷிப்பது இரக்ஷை, காப்பு.

''தொகுத்த வாழ்க்கையாற் பூதியுஞ்
 சோதிமேற் றரலால்
பகுத்த நூல்புகல் பசிதமும்
 படுமலம பிணிமா
சுகுத்த லாலுயர் காரமும்
 காத்தலாற் காப்பு
மிகுத்த தீதுநீற்றிடுதலா
 னீறும்பேர் விளங்கும்''

எனக் கடம்பவன புராணம் கூறுவதும் காண்க. அணிவதற்குரிய சின்னம்இந்நீறே என வேதங்களும் சைவாகம புராண முதலியனவும் நிர்ணயித்துள்ளன.

எல்லாம் வல்ல இறைவன் பதி; ஆன்ம கோடிகள் பசுக்கள். இவ்வான்ம கோடிகளைப் பிணித்திருப்பது மும்மலம். இம்மலத்தை ஒழிக்கவே பசு பதியைச் சாருகிறது. பதியைச் சாருங்கால் பசுவைப் பற்றியுள்ள மலம் சிவ ஞானாக்கினியால் பஸ்மமாகிறது. சிவாக்கினியின் சிரேஷ்ட வீரியமே பஸ்மமெனப்பட்டது. இந்தத் தத்துவம் மக்களுக்கு நனி விளங்கவே சிவாக்கினியால் தகிக்கப்பட்ட பசுவின் மலமான பஸ்மமே தாரணத்துக்கு உரிய பொருளென் இறைவன் அருளிச் செய்துள்ளான். மேலும் பசு (ஆ) தருமதேவதையின் சொரூபம். தேவர், முனிவர் மற்றெவரும் விரும்பியுண்ணும் அமுதமாகிய பாலை அளிப்பதும் புனிதமானதும் பசுவாதலின் அதன் கோமயமே நீற்றிற்கு எடுத்துக்'கொள்ளத் தக்கதென வேதவேதாந்தங்கள் விதித்துள்ளன.பஸ்மதாரணஞ் செய்பவன் சிவாக்கினியால் மல பந்த விடுதலை பெறுகிறான். சைவர்களு மேயன்றி கிறிஸ்தவ மதத்தினரும் குறிப்பிட்ட சில புனிதச் சடங்குகளுக்குப் பஸ்மம் உபயோகப் படுத்துகிறார்கள். (எண்ணாகமம் — 19ஆம் அதிகாரம் காண்க.) பஸ்மம் தயாரிக்கும் முறை தான் வேறு.

விபூதி தாரண முறையைப் பல் வேறு ஆசிரியர்கள் பல்வேறு வகையாகக் கூறிப் போந்தார்கள். ஆயினும் நமது ஞான பானுவாகிய ஸ்ரீ குமர குருதாச சுவாமிகள் விபூதி தாரணம் பற்றி மிக விளக்கமாகவும் ஆணித்தரமாகவும் "ஸ்ரீ சிவஞான தீப" மெனும் திவ்விய நூலில் அனுட்டான விதியியலில் விளக்கியுள்ளார்கள். தவள நிற விபூதியினை வலக்கையா லெடுத்து இடக்கையில் வைத்து வலக்கையால் மூடிக்கொண்டு "பஞ்சப் பிரம, பீஜ சடங்க" மந்திரங்களாய பதினொரு மந்திரங்களானும் அபிமந்திரித்து 'அஸ்த்ராய பட்' என்று உத்தூளனமாகப் பூசிக் கொள்ள வேண்டும். திரிபுண்டரமாக இட வேண்டுமாயின்.

"ஈசான மூர்த்தயே நம:" என்று சென்னியிலும், "தத் புருஷ வக்த்ராய நம:" என்று நெற்றியிலும், "அகோர ஹ்ருதயாய நம:" என்று நெஞ்சிலும் வாமதேவ குஹ்யாய நம: என்று நாபியிலும், "ஸத்யோஜாத கவசாய நம:" என்று இருதோள், இருகரநடு, இரு மணிக்கட்டு, இருவிலா, முதுகு, கழுத்து. ஆகிய விடங்களிலும் அழகாக வணிந்து "அஸ்த்ராய பட்" என்று கை கழுவுதல் வேண்டும். துறவிகள் பஸ்ம தாரணம் உத்தூளனமாகச் செய்தல் வேண்டும்.

பஸ்மதாரணம் நான்காச்சிரமிகளுக்கும் முக்கியம். பஸ்ம தாரணமின்றி மந்திரம் ஜபித்தல் கூடாது. எதனையும் உட்கொள்ள லாகாது. தேவர் முனிவர் மற்றெல்லோரும் அணிவது பஸ்மமே. பஸ்மங்கொண்டு திரிபுண்டர மணிபவன் மகா பாதக, உபபாதகங்களினின்றும் நீங்கப் பெறுகிறான் சகல புண்ணிய தீர்த்தங்களிலும்ஸ்நானஞ் செய்தவனாகிறான். இஷ்ட தேவதையைத் தியானித்தவனாகிறான். சருவ சிவ மந்திரங்களையும் ஜபித்தவனாகிறான். இகத்திலே சகல போகங்களையும் அனுபவித்து இறுதியிலே தேகத்தை விட்டுச் சிவசாயுச்சிய மடைகிறான் இக்கரும பூமியில் மீண்டுமொரு பிறப்பினை யடையான்.

"கங்காளன் பூசுங் கவசத் திரு நீற்றை
மங்காமற் பூசி மகிழ்வா ரேயாமாகில்
தங்கா வினைகளுஞ் சாருஞ் சிவகதி
சிங்காரமான திருவடி சேர்வரே"

எனும் திரு மந்திரத்தை யோர்க.

கண்மணிமாலை, கண்டிகை, உருத்திராக்கம், கண்டி, அக்கம் எனும் பெயர்கள் உருத்திரா க்ஷத்தைக் குறிக்கும். உருத்திர + அக்கம் = மகா ருத்திரனும் சிவபெருமானுடைய கண் என்பது பொருள்.

அணிந்தார் தம் மும்மலங்களையும் நீக்கித் திருவருட்பேற்றை அளித்தலின் அது அக்கமாகும். குற்றங்களையுந் துன்பங்களையுங் கண்டித்தலின் கண்டி அல்லது கண்டிகை எனப்படும்.

பிரமா, விஷ்ணு முதலிய தேவர்களைக் காத்தல் பொருட்டும், சிவ பூஜையில் மேம்பட்ட தாரகனுடைய புத்திரர்களை யொறுக்க து அனுக்கிரகித்தல் பொருட்டும் சிவபெருமானா கண் மலர்ந்த வமயம், கண்களில் பெருகிய நீரே உருத்திராக்கங் - களாகவாகி, உருத்திராக்க மரங்களாயின. அவற்றினின்று தோன்றிய உருத்திராக்கங்களே இறைவன தாணைப்படி, பிரம்மாவிஷ்ணு முதலிய தேவர்களால் அணியப் பெற்றன வாயின. பிறப்பு இல்லாத பெருமானாரது திருமுகக் கண்களாய், பழமையானவாய் ஒழியாத பிறவித் துன்பங்களைப் போக்குவனவாயுள்ளவை உருத்திராக்கங்களேயாகும்.

"ஸாம வேத ருத்ராக்ஷ ஜாபால"த்தில் உருத்திராக்ஷ மணிகளினுற்பத்தி, அளவு நிறம், முகம், மகிமை, மந்திரம், தாரணபலன் முதலிய விவரங்கள் உள்ளன. 1, 5, 6, 11, 14 முகங்கள் கொண்ட அழகுள்ளதும், உறுதியானதும், பருத்திருப்பதும். முட்களோடும் கூடியதுமான உருத்திராக்கங்கள் உயர்வுடையன. ஏகமுக உருத்திராக்கம் விசேடித்த பலன் தரவுள்ளது அறுமுகச் சிவபிரானை உபாசனா மூர்த்தியாகக் கொண்டவர்கள் ஆறுமுகங் கொண்ட உருத்திராக்கம் விழைவார்கள். உரைகல்லில் உரைக்கும் போது பொன்னிறங் காட்டுவதே உத்தமமான உருத்திராக்கமாகும்.

சிகை, காது, கழுத்து, மார்பு, புஜம், கை ஆகிய தானங்களில் உருத்திராக்கங்கள் அணியலாம். 32 அல்லது 54 அல்லது 108 கொண்ட மாலை கழுத்தில் மாலையாக அணிவது கொள்ளத்தக்கது. முகம் முகத்தைப் பொருந்தவும், அடி அடியைப் பொருந்தவும் உருத்திராக்கத்தைப் பருத்தி நூலில் கோத்து ஒன்றோ டொன்று தொடாமல் நாக பாசம், பிரம் கிரந்தி, சாவித்திரிஎன்பவற்றுள் ஏதானுமொரு முடியிட்டு அணிவது விசேடம்.

ஒவ்வொன்றுக்கும் இடையில்பொன்,வெள்ளி, முத்து, பவள முதலிய மணிகள் இட்டும். அணியலாம். ஆயிரம் உருத்திராக்கங்களை அணிபவர் உருத்திரர் எனக் கருதப் பட்டுத் தேவர் களும் வணங்க உரியவராவர். உருத் திராக்கத்தில் பட்டு வடியும் ஜலம் கங்கா தீர்த்தத்துக்குச் சமம்.

உருத்திராக்கம் அணியாது செய்யும் சிவ பூஜை முதலிய எந்தச் சுப காரியங்களும் நலன் நல்கா. எல்லாப் புண்ணிய நதிகளி லும் நீராடல், யாகங்கள் செய்தல், தவம் புரிதல், தல யாத்திரை செய்தல், மூர்த்தி தரி சனம் செய்தல், தானங்களியற்றல் இவற்ருல் வரும் பலன்களை யெளிதி லீவது உருத்திராக் கம். இது சகல பாவத்தையும் போக்க வல் லது. வேதங்களினுலும், உபநிடதங்களினு லும் பெருமை செய்யப் பட்டுள்ள உருத்தி ராக்கமே முத்தி சாதனமாகும்.

''ஆய மாமணி யாயிரம்
புனைந்திடி லவரை
மாய ஞன்முகன் புரந்தரன்
வானவர் முதலோர்
பாயு மால்விடைப் பரனெனப்
பணிகுவ ரென்ருற்
றாய மாமணி மிலைந்தவர்
மனிதரோ சொல்வீர்''

எனும் பிரமோத்தர காண்டத் தூக்கினை யோா க.

**திருநாம ஜெபம்:—**

ஐம்முகச் சிவபெருமானை உபாசன மூர்த்தி யாகக் கொண்டுள்ளோர் '' சிவய நம: '' எனும் பஞ்சாக்ஷர மந்திரத்தையும், அறுமுகச் சிவபரம் பொருளை உபாசன மூர்த்தியாகக் கொண்டுளோர் '' சரவண பவ'' எனும் சடக் கர மந்திரத்தையும் மந்திர நாயகமாகக் கொண்டு ஜெபம் செய்து வருவது சிறந்தது.

பஞ்சாக்ஷரத்தில் ''சிவ'' என்னுமெழுத்துக் கள் அருளோடுங் கூடியுள்ள சிவனையும் ''ய'' பசுவையும், ''நம:'' பாச மெனப் படு வதையு முணர்த்தும். ''நம சிவய'' — தூல பஞ்சாக்கர மாகும்; ''சிவயநம:'' சூக்கும பஞ்சாக்கரமாகும்; ''சிவய வசி'' காரண பஞ்சாக்கரமாகும்; ''சி'' மகாமனுவாகும். சூக்கும பஞ்சாக்கரம் ஒரு தலை மாணிக்கமா கவும் காரண பஞ்சாக்கரம் இரு தலை மா ணிக்கமாகவும் ''உண்மை விளக்கம்'' இயம் புதலின் ''சிவய நம:'' எனக் கூறுதலே சிறந் தது எனக் காணப்படினும் வடமொழிவேத மும், தமிழ் மறையும், ''நம சிவய''. எனும் மந்திரமும் உகந்த தெனவே இயம்புகின் றன. இத்துடன் ஓங்காரமாகிய ஓம் எனும் எழுத்துக் கூட்டியும் உச்சரிக்கலாம். இது பஞ்சாக்கர சடக்கரமாகும்.



''ஓம்'' எனும் ஓங்கார மந்திரத்தில் அகர உகர, மகர, பிந்து, நாதம் ஐந்து முளது. இது ஓங்கார பஞ்சாக்கர மெனப்படும். ஓங்கார ஜபம் சன்னியாசிகளும், யோகிகளும் செய் யத் தக்கது.

சடக்கரத்தை மந்திர நாயகமாகப் பூணு வோர் ''சரவண பவாய நம:'' எனும் சடக் கர நவக்கரமாக வேனும், அதன் முன் ''ஓம்'' சேர்த்து சடக்கர தசக்கர மாக வேனும் கொள்ளக் கடவர். ''சரவணபவ'' என்பது அருளோடுங் கூடிய அறுமுகச் சிவ பரம் பொருளையும் பசுவையும், ''நம:'' பாசத்தை யும் குறிக்கும். இக சௌக்கியம் விழை வோர் ''ஓம் —(பரமாத்மரூபம்) ஐம் - (வாக்கு) க்லீம் — (ஜகந் மோக நம்)ஸௌ: — (காய பலம்) ஸ்ரீம் — (தனம்) ஹ்ரீம் (பூமி)'' என்ப வற்றைச் சடக்கரத்தின் முன் வைத்து ஜபிக்க அவ்வப் பலம் கிடைக்கும். குரு முகமாக உரிய தீக்கை பெற்று மந்திரம் ஜபித்தலே முழுப்பலன் நல்கவுள்ளது.

ஏகாந்தத்தான மெய்தி, இசைவு எழிலுடை ஓராசனத்தினி தமர்ந்து வழிபடு மூர்த்தமா கவே மதிக்கத்தக்க தன் குருவின் திருவடி மலரை நனி சிந்தித்த பின் மனத்தினை ஐம்புல நுகர்ச்சியாம்விடயங்களில்செல்லாதுதடுத்து இதயதாமரை நடுவணே உள்ள தகராகாசத் தில் இறைவன் திருமேனியை உண் - முக மாகத்தரிசித்து நனி தியானிக்க வேண்டும். நேரம் காலமில்லாமல் எக்காலத்திலும் தியா னம் செய்யலாம்.

மனோலய மெய்துவான் இதயாம் பரத்தில் இறைவனைத் தரிசித்து இனிது புரி தியானம் ஒரு மூர்த்தி பாவனையில் மட்டுமே கூடும்.

பலமூர்த்தி வழிபடு பந்தமாம். பஞ்சாக்கர தீக்கை பெற்றுளோர் ஐம்முகச் சிவ பிரானை யும் சடக்கர தீக்கை பெற்றுளோர் அறுமுகச் சிவ மூர்த்தியையுமே இதயாம் பரத்தில் வைத்துத் தியானித்தல் ஏற்புடைத்து.

"இவ்வொரு வழிபடு கடவுள் எம்மை யாண்டருள் குமார மூர்த்தியாயிருப்பின், இப் பிறப்பிற்றனே ஒல்லையினெளிதாக ஈறிலாக் கதி யெய்து மென யாந்துணிவுரை கூறுவாம்" என்று மிக்க வலியுடன் சாதித்துள்ளார் நமது குருநாதர் பாம்பன் சுவாமிகள். அவர்கள் அப்படித் துணிவுடன சாதித்துள்ள காரணம் அவர்களது சொந்த அனுபவமே. இக்கூற்றில் யாதும் ஐயம் இல்லை என்பது உறுதி.

இதனை யறிய மாட்டாத சில சைவர்கள் பஞ்சாக்கர பூஜையாலும், ஐம்முகச் சிவ வழிபாட்டாலும் எய்து பலன் சடக்கர ஜபத்தாலும் குமார மூர்த்த வழிபாட்டாலும் எய்த முடியாது எனப்பிதற்றி வருகிறுர்கள். என்னே பரிதாபம்! ஒரு நாள் நான் ஒரு ஸ்மார்த்த அன்பரிடம் பேசிக் கொண்டிருக்கும் பொழுது முருகப் பெருமான் உபாசனை யைப் பற்றி அவரது அபிப்பிராயம் கேட்ட பொழுது, அன்னூர் "Lord Muruga is a fragment of Lord Shiva" (முருகப் பெருமான் சிவ பெருமானின் ஒருபகுதி) எனப்பதிலிறுத்தார்.

சைவ சித்தாந்திகளுள் ஒரு சிலர் அவ்வண்ணமே நினைந்தும் ஒழுகியும் வருகிறுர்கள். இக்கருத்தினை யுடையவர் எப்படிப்பட்ட சைவராயினுமு போற்றற்குரியவரல்லர். புராண நாயகமாகிய ஸ்காந்த மகா புராணத்தில், யுத்தகாண்டத்தில், "ஸாக்ஷாத் பரசிவோஸ் மாகாம் கர்த்தா நேதாசசங்கர :1 ஷண்முகாக் யாம் க்ருத்வா தேவாந்ரக்ஷிதுமாகத : | (பொருள்—சாக்ஷாது பரமசிவனே தேவர்களைப் புரந்தருளும் பொருட்டுச் சுயமாகவே ஆறுமுகனெனும் பெயரைத் தரித்துக் கொண்டெழுந் தருளினன்)" என வரும் வாக்கியங்களையும், திரு மந்திரத்தில்,

" ஆறு முகத்தி லதிபதி நானென்றுங்
கூறு சமயக் குருபர னுனென்றுந்
தேறினர் தெற்குத் திருவம்பலத் துளே
வேறின்றி யண்ணல் விளங் கி நின்ருனே "

என வரும் தூக்கினையும்,

" அஞ்சு முகங், காட்டாம
லாறு முகங் காட்ட வந்த
செஞ்சரணச் சேவடியைச்
சிந்தை வைப்ப தெந்நாளோ"

எனும் ஸ்ரீ தாயுமான சுவாமிகள் கூற்றினையும்,

"தூவி மாமயிலூர்பவன்
சுடர்மதி யணிந்தோன்
தேவயானையே திருந்திழை
யுமைய வளாமால்"

எனும் இலிங்க புராணத் தூக்கினையும்,

" ஆறுமுகப் படுமுன நீ யைந்து முகத்
துடனிலவி யழியா நூல்கள்
கூறு முறைப் படியதன்பின் குறைவில் சிவ
சத்தியொடுங் குறைவொன் றின்றி
ஈறுமுத லொரு விடநின் றுருக்காட்ட
லுதியுன்னை யீசன் சேயென்
றூறில்லா துரைத்திடுத லுபசார
மல்லால்வே ரெழுங்குண் டோவே. "

என வரும் ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகளுடைய திருவாக்கினையும் உய்த்துணர்ந்த பெருமக்கள் அங்ஙனம் எண்ணத் துணிவர் கொல்? என்னை? அவ்வாறு துணிவோர்,

1) "பத்தியு ஞானமும் பரவிடு மார்க்கம்
எத்தனை யோவகை யிருக்கினு மிகத்தில்
முத்திதந் தனுதின முழுப்பல னல்கச்
சத்திய மாவது சரவண பவவே"

எனும் பேரருள் வாக்கினை உணராதவர்களே யாயினர் ஆதலின் என்க.

ஐமமுகச் சிவமூர்த்தியையும் அறுமுகச் சிவமூர்த்தியையும் பேதப் படுத்திக் கூறுபவர்கள் படுநரகாழ்வர் என்பது ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் முடிபு.

பஞ்சாக்ஷர மந்திரங் கொண்டு ஐம்முகச் சிவமூர்த்தத்தை வழிபடினும்சடக்கரமந்திரங் கொண்டு அறுமுகச் சிவமூர்த்தத்தை வழிபடினும் எய்து பலன் ஒன்றே என பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாசப் பெருந்தகை எண்ணிறந்த சாத்திர தோத்திர வாயிலானும் அங்கையில் நெல்லியங் கனியென விளக்கியுள்ளார்கள். அவர்களது நூல்களை ஓதி உணர்ந்தோரே உண்மையுணரும் திறன் பெற்றவராவர். ஒரு மூர்த்தி வழிபாட்டின் மேம்பாட்டை வலியுறுத்தி விளக்கியவரும் அவரேயாவர். அவரது நற் போதகங்களை நன்குணர்ந்து தூயமனத்துடன் சைவச் சின்னமாம் திருநீறும், கணமணி மாலையும் திருநாம ஜெபமும் கொண்டு விளங்கு வோர் யாவரேயாயினும் அவர்தாம் எல்லாம் வல்ல சிவ பரம் பொருளின் பூரண அருள் பெற்று இகபர சுகமனுபவிப்பர், இது திண்ணம்.

சற்குருநாதன் திருவடி வாழ்க.

# ஒட்பமுணர்த்தல்



(நக்கீரன் வழியடிமை. வித்துவான். பி. மா. சோமசுந்தர முதலியார்.

### உலகம் பலவிதம்

ஒட்ப முணர்த்தல் என்றல் பொருள் என்னை ? செவியறிவுறூஉ எனலே ஒட்ப முணர்த்தலாம் என்றறிக. ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் செவியறிவுறூஉ மூன்று வழங்கியுள்ளார்கள். அவை எம் போன்ற எளியர்க்கு ஏற்ற நெறி காட்டி ஏற்றமுற வுய்ப்பன. புலவராயுளாரும் நன்னெறியென மயங்கிக் கிடக்கும் புன்னெறியைப் புறம்போக்கும் பொருளுரை கொண்டது அந்நூல் - குறிப்பாக மூன்ருஞ் செவியறிவுறூஉ - என்பது குறிப்பிடற் பாலது.

உலகில் காணப்படும் பல் விநோதங்களும் உற்று நோக்குவார்க்குப் புலனும். காதல்—இன்றேல் சாதல் என்று வாய்ப் பறையறைந்து, பெற்ருேரைப் பிரிந்து, திருமணம் புரிந்து மகிழ்கிருன் ஒருவன். மறுநாள் தன் காதலிக்கு ஒரு கள்ளக் காதலனும் உண்டுஎன வறிந்து நஞ்சுண்டு மாய்கிருன். மக்களிடையில் இன்னன நிகழ்ச்சிகள் பல்ல.

வானுறவோங்கி வளரும்மர முமுள்ளது. நம் காலடிப்பட்டுக் கருகிவிடும் தாவர முமுண்டு. ஊசிலையுடைய மரமுமுண்டு. மூன்று பேர் உண்ணத்தக்க அளவில் வளரும் இலையுடைய வாழையுமுண்டு. மலர்களிலும் அங்ஙனமே குறுமை நீள வேற்றுமை யுளதே. அன்றியும் இவைகளில் திண்மை, மென்மை வேறுபாடுகளும் உண்டு. அம்மட்டோ! சில பசிய நிறம் வாய்ந்தவை, சில செம்மை நிறம் சேர்ந்தவை. சில வெண்மை நிறம் வாய்ந்தவை. இன்னன மாறுபாடுகள் பல்ல.

இவ்வாறு நோக்குழி எத்துணை மாறுபாடு என்று உளம் வியப்பர் நல்லோர். ஆயின், இத்திறத்த வுலகினைப் படைத்த காரணம் யாது எனும் வின எழுமேல் விடையுண்டோ ? இல்லை. என்னை ?

"படைத்த காரணம் யாதெனக்
கடாவல் விடை பெறற்குரிய வினு
வாகாது. இறைவன் திருவுளச் செய்
கையை இனிதறிந்துரைப்பார் எவரு
மிலரே: அறிந்தவா றீதென எப்புத்
தகமேனுங் கூறத் துணிந்தக்கால்
அது பல்லாற்ருனும் பழுதுபட்
டொழியும்"

என்பது முதற் செவியறிவிறூஉ கழறும் போதகம். இவ்வாறு உண்மை யெடுத்தியம்பும் என்னை ஆட் கொண்டருளுக என வேண்டுகிருர் நம்சுவாமிகள்.

"மரத்தழை மலர்க ணீளங் குறுமை
பன் மதர்ப்பு நொய்து, விருத்தமை
பசுமை செம்மை வெண்ணிற முதல
வாய்ச்செய், கருத்தினை யெவரே
கண்டார் காசினி படைத்த வேது,
விரித்திடல் பொருந்த வென்ருே
தெனைக் கொள்கோ வேற்பெம் மானே.

உலகப் பொருள்களின் விநோதம் பற்றி முதற் செவியறிவுறூஉ விரித்துரைக்கும். ஆண்டுக் காண்க.

### விக்கிரக வழிபாடு

"'தேவாரம்' திருப்புகழ் பாடவேண்டுமா ? பூசை செய்ய வேண்டுமா ? இவைகளை யெல்லாம் செய்துவிட்டு எத்தனை தீமைகள் புரிகிருர்கள் உலகினர்? அவர்களுக்கு எல்லாம் வல்லவன் அருளுண்டா ? ஆகவே மனம் சுத்தமாயிருந்தால் போதும். திருவள்ளுவர் என்ன சொல்கிருர் ? 'மனத்துக் கண் மாசிலனுத லனைத்தறன்' என்று தானே சொல்லியுள்ளார் " என்பர் சிலர்.

"கோயிலுக்குப் போக வேண்டுமா? அங்கே தான் இறைவன் இருக்கின்ருனு ?

இங்கே யில்லையா? என்று தங்கள் மார்பைத் தொட்டுக் காண்பிப்பர் சிலர். இவர், "நட்ட கல்லைத் தெய்வ மென்று நாலுபுட்பஞ் சாத்தியே, சுற்றி வந்து மொணமொணென்று சொல்லு மந்த்ர மேதடா, நட்ட கல்லும் பேசுமோ நாதனுள் ளிருக்கையில், சுட்ட சட்டி சட்டுவங் கறிச்சுவை யறியுமோ" என்ற பாட்டைக் காட்டுவர்.

இவரெல்லாங் கல்லா மூடர் குழுவிற் படுபவரேயாம். என்னை? இவர் தாம் கற்றதெல்லாம் எழுத்தைக் கூட்டிப் படிக்கவே யலாது சொற்பொருள் தேர வன்று தாங் காட்டுங் குறள் 'அறன் வலியுறுத்தி'ச் சொல்லப் பட்டதென்பதை முற்சாராரும், சித்தருழைச் சித்துக் களுளவாமே யன்றிச்சித்துருவாய சிவ பிரானன்றென்பதைப் பிற்சாராரு மெண்ணுதவரு மாயினர்.

இனி, "எத்திற எத்திற மாறுபடும் எத்திற எத்திற இறும் பூதுமா யுள்ள" தென முற்கிளத்திய மரம், தழை மலர் முதலியனவும் "வேறு பலவும் எல்லாம் வல்லவனுகிய அவன் சங்கல்ப சிருஷ்டியிலாகின்றமையின் எதனை யெப்படி யாக்கினு மாக்குவான். அவனுலாகாத தொன்று மின்றென வுணர்ந்து அவனனுக்கிரக வருளை எதிர்பார்த்தவனு யிருத்தலே விவேகமாம். அவ்விவேகம், அவன் திருச் சன்னிதியி லுய்ய வுளதாம்" என்றபடி அப்பெருமானை நாடோறும் வழிபட்டு வீடுபேறெய்த முயறலே அறிவுடைமையாம். எல்லாப் பொருள்களிலும் தங்கியும் எல்லாப் பொருள்களையும் தன்னுள் அடக்கியும் இலங்கும் அத்தெய்வம் அன்பர் வழிபாட்டுக் கிரங்கி விக்ரகத்துள் வராது என்பது பேதமையே. ஆகலின் இறைவன் திருவுள மிருந்தாங்கு உலகம் இயங்குமே யலாது உலகவர் இப்படி இப்படித்தான் இறைவன் இருக்கின்றுன் என்று வகுக்கும் இலக்கண வழியில் இறைவன் இயங்கான் என்பது கடைப்பிடிக்க. இறைவனின் உரு வழிபாட்டிலே சிறந்துதான் ஆன்ருேர்கள் அருளை யெய்தினர்கள். ஆகலின் விக்ரக ஆராதனை கூடாதென்பது தகுதியற்ற சொல்லேயாம். இதனைச் சுவாமிகள் "விண்டலமு மண்டலமும் வந்திக்க வுளநீ விழுக் கருணை யின்பெருக்கால், வேதத்தில் வெளியிட்ட விக்ரக வழிநீ விளங்குவதை யிலையென்பதும் - அண்டர் முதலெழுவகை யுயிர்க் குழுவையுந்தனு ளடக்கியாள் சருவவலிமை அயர்விலா துளவுனக் குருவெடுக்குந் திறமை யணுவு மொல் லாதென்பதும் - எண்டிகையினுந் தகுதி யற்ற சொல்லாய் முடியு மென்பதற் காசங்கையோ" என வினவிய ருளுகின்ருர்கள்.

"அளவையி லடங்கா தெல்லா மாற்றடல் வாய்ந்த தெய்வம்
கிளருரு வருளிற் கொள்ளா தெனல்சிற வாது கேடில்
உளமவிர் கடவு ளுேக்கி லுலகமா முலகர் போக்கில்
வளர்தலஃ தாரா தென்ருே தெனைக்கொள் கோ மலர்வேற் றேவே."

உலகர் போக்கில் வளர்தலஃ தாராது" என்பது உலகவர் இலக்கணப்படி அமைந்து நிரம்பாது என்னும் பொருளும் உலகர் போன்று பரிணமத் திருமேனி யுடைய தன்று என வேருெரு பொருளுந் தோற்றலில் முருகன் பேரில் பிள்ளைத் தமிழ் பாடுதல் பேதைமை யென்பதை ஈண்டுக் குறிப்பாலுணர்த்தினு ராயிற்று.

### கருவில் தோயா கன்னியர்

முருகன் முழுமுதல்வன். பிறப்பிறப்பில்லாதவன். "பெம்மான் முருகன் பிறவா னிறவான்" என்பது அனுபூதி. ஏனைய தேவர்கள் கருப்பையுட் கிடந்து பிறந்தவர்களே. வேல் இறைவனே தானேயாய ஐம்முகச்சிவத்தின் முதல் விழி தோன்றினன். அவனது தேவிமார் தேவயானை, வள்ளி, இவ்விருவரும் உலகுயிர்க் கெல்லாம் அன்னையராவர். இவரது தோற்றமும் கருப்பையுட் கிடவாதே நிகழ்ந்தது. திருமால் விழிகளில் தோன்றினர். அவன் விழிகள் அழகுடையன வாகலின் அவனைத் தாமரைக் கண்ணன் என்பர். அத்தாமரையிற் ருேற்றிய அவ்விரு தேவிமார்கள் எவ்வண்ணம் உள்ளனர்? தாமரையில் தாமரை தானே தோன்றும். முருங்கை மலரா தோன்றும். ஆகவே அவர்களின் முகம் தாமரை, கண்கள் தாமரை, தோள்

கள்தாமரை, வாய்தாமரை, கொப்பூழ் தாமரை, கால்தாமரை. இவ்வளவு அழகிய பெண்களை மணந்தவன் முருகன். அவனும் சிவபிரானின் கண்ணாகிய தாமரையில் வந்தவன் தான். ஆனால் ஒரேஒரு வித்தியாசம். தேவிமார்கள் நீர்ப்பெருகும் (கண்) தாமரையில் வந்தனர். முருகனோ எரிபெருகும் (கண்) தாமரையில் வந்தவன். நீரினும் தீவன்மைத் தன்றோ. ஆகலின் முழுமுதல் வனாகிய அவனைப் பாடுவதே நான் பெற்ற செல்வம் என்கிறார் அடிகள்.

" வதனமும் விழியுந் தோளும் வாய்சுழி
யிலஞ்சி தாளும்
மதனுறு ளின மாயே வயங்குற மணிமால்
பார்வைப்
பதுமநின் றுதித்த மாதர் மணந்தவன்
பாலத் தேய்கட்
பதுமம்வந் துளனன் னோன்சீர் பாடுத
லெனது பேறே."

இதனாலன்றோ திருப்பாவினும்,

" கடவுளா முனிவியக்கும் கதழ்வாய பிராரத்த
மதுகுறுகி லமிழ்திலே கனிநழுவி வீழ்தல்
பொருவும்"

என்றார் சுவாமிகள்

**திருவளர் தாமரை**

தாமரைக்குச் சிறப்புச் சொல்லப் புகுந்த ஆன்றோர், திருமகளும் விரும்பி வதியும் எழிலுடைத்தாம்; பெருமை யுடைத்தாம் என்பார் " திருவளர் தாமரை " என்றார். கமலம் = தாமரை. கமலத்திருப்பவள் கமலை. அக்கமலமோ சாதாரணமானது. வாடியழிவது. மணங்குன்றுவது. ஆனால் முருகனின் தேவிமார்கள் அமரும் கமலப் பூவோ சித்து (அறிவு) மணங்கமழ்வது. மணம்வளர்ந்து நிலைக்கும்பேறு உடையது. ஆகவே இவர்கள் மா கமலைகள் (மகாலட்சுமிகள்) ஆவார்கள்.

" கமலைசா தார ணக்கோ கனதம்வந்
தேற்றலப்பேர்
நிமலன்மா தேவி மார்க டோன்றுபூ நிகழ்சித்
தாயே
கமழுமே துவினன் னோர்மா கமலைக ளாவ
ரென்னு
இமிழல்வே ளாண்மை யென்றோ தெனைக்
கொள்கோ விலைவேற் றேவே."

ஈண்டு ' இலைவேல் ' என்றது சிகண்டி முனிவர் கதிர்காமங் காணச் சென்றாரைக் கொல்ல முயன்ற களிற்றை வெற்றிலையை வேலாக்கிக் கொன்ற சரிதமாம். மேல் 2ஆம் பாடலில் மலர்வேல் என்றது சிறுபாணாற்றுப்படையில் வரும் நல்லியக் கோடன் சரிதமா மென்றுணர்க.

**மாமலரோன்**

நான்முகற்கு ' மலரவன் ' என்னும் பேர் உண்டு. மலரில் வதியுங் காரணத்தால் மலரவனானான். அம்மலரும் சாதாரணத் தாமரையே. அழிவுடையதே. ஆயின் அம்மலரவன், மால், மற்றுள்ளவர்கள் தம் இதயதாரையில் வதிவோன் முருகன். அதனாலேயே குகன் என்று பெயருங் கொண்டான். ஆதலின் அறுமுகச்சிவன் மாமலரோன் ஆவான்.

தாமரை மலரில் வைகுந் தன்மையான்
மல ரோ னானன்
ஓமறை யோது வோனன் னோனரி
பிறவான் மாக்கள்
வாமவுள் ளிதய மாமுண் டகந்தொறும்
வதிகு கேசன்
மாமல ரோனே யென்றோ தெனைக் கொள்
கோ வடிவேற் றேவே.

ஓமறை யோதுவோன் = பிரணவத்தை முதலிலுடைய வேதத்தை நாடோறும் ஓது வோன் ஆகிய பிரமன்.

**வாலறிவனையே பாடுக**

கற்றதனா லாய பயன் வாலறிவன் நற்றாள் தொழலேயாம். கல்வியாஞ் செல்வத்தைக் கதிர்வேற் பெம்மான் அருளியதே அப்பயன் நோக்கியே யாம். " யாமோ தியகல்வியுமெம் மறிவுந்-தாமே பெறவே லவர்தந்ததனால் " என்பது அனுபூதி. கற்ற புலவர்கள் கவி புனைந்தனர். தாம் அங்ஙனம் பாடிய பாட்டை வயிற்றுப்பாட்டுக் கெனவே நோக்கினர் தம்போன்ற இழிபிறவியாய மனிதரை, இந்திரனென்றுஞ் சந்திரனென்றும், காமவேள் என்றுஞ் செவ்வேள் என்றும் வாய்க்கு வந்ததை யெல்லாம் பாடித் தங்கள் கல்வியின் அருமையும் தங்கள் பெருமையுங்குன்ற வாழ்ந்தனர். என்னை?

" வணக்கம் வருஞ் சிலநேரங் குமர கண்ட
வலிப்புவருஞ் சிலநேரம் வலியச் செய்யக்
கணக்குவருஞ் சிலநேரம் வேட்டைநாய்போற்
கடிக்கவரும் சிலநேரம் கயவர்க் கெல்லாம்

இணக்கம்வரும் படித்தமிழைப் பாடிப் பாடி
எத்தனைநாள் திரிந்துழல்வேன் ஐயா என்றன்
குணக்கடலே யருட்கடலே யசுர ரான குரை
கடலை வென்றபரங் குன்று ளானே''

என்றோர் புலவர் எந்தையாங் கந்தவேளை யெண்ணியுருகுதல் காண்க. மானுடரைப் பாடும் இவர்கள் படும் இடரும் மேற் செய்யுளில் நன்கு எடுத்துரைக்கப் பட்டுளதே. பிரமன் காணும் உலகைச் சிருட்டிக்கின்றான்; புலவர்கள் கற்பனை யுலகைச் சிருட்டி செய்து கற்பார்க்கும் கேட்பார்க்கும் கழிபெருவகை விளைக்கின் றார்கள் என்று பெருமையுறலாம். ஆயின் அப்பிரமனே முருகவேளைத் தொழாக் குற்றத்தால் சிறையிடப்பட்டானே தூ! இப் புலவர்கள் எம்மட்டு?

"கூரிய மனத்தின் கண்ணே குறித்துள பொருளாங் கூத்தப் பேரிய வுயிரைப் பாட்டிற் பிணைத்தயர் சிருட்டி வல்லார் வீரிய முருக வேளை விலக்கிடின் விரிஞ்சன் போற்பல் சூரிட ரடைவா ரென்றே தெனைக்கொள்கோ சுடர்வேற் றேவே.

## கிழியாத பாட்டு

ஔவை மூதாட்டியார் தமிழ் வேந்த னிடம் அறிவுரைகளைக் கூறிக் கொண் டிருந்தார். அவனோ அதனைக் கவனி யாமல் விலையுயர்ந்த ஆடையின் அழகை வியந்து கொண்டிருந்தான். அதுகண்ட ஔவையார் "நூற்றுப் பத்தாயிரம் பொன்பெறினும் நூற்சீலை நாற்றிங்கள் நாளுக்குள் நைந்து விடும்.'' ஆகவே அதனை வியவாதே என்றுங் கிழியாத பாட்டு அதனைக்கேள்'' என்றும் இடித் துரைத்தார்.

படித்து எறிந்துவிடும் நூல்கள் உண்டு. நாளிதழ், நாவல்கள், இன்றைய தேவை மட்டும் எடுத்துரைக்கும் பாடல்கள். ஆகியஇவை இவ்வினத்தைச் சேர்ந் தவை. என்றுமே போற்றி உச்சிமேற் கொளத்தகும் நூல்களும் உண்டு. கால முறைப்படி, திருக்குறள், பன்னிருதிரு முறைகள், அருணகிரிநாத சுவாமிகள் அருளிய திருப்புகழ் முதலிய நூல்கள், தாயுமானவர் பாடல், நமது ஸ்ரீமத் வாமிகள் பாடல் ஆகிய இவை இவ்வி த்தைச் சேர்ந்தவை. காரணம் என்ன?

உலகம் அழியுந் தன்மையது. அதி லுள்ள பொருள்களும் ஒருநாள் அழிய வேண்டுவனவே. நம் பெரியோர்கள் இதனையுணர்ந்தே உலகவரைப் பாடலை நீக்கி உயிர்க்குள் உயிராய் விளங்கும் உத்தமனைப் பாடினர். அவன் என்றும் நிலை பேறுடையவன். நிலைபேறுடைய பொருளைப் பாடிய பாக்களும் அத்தன் மையையே சார்ந்து நிற்கும். ஆகவே புலவர்களே! ஒன்றுங் கொடாதவனைக் காவென்றுங் கோவென்றுங் கூறி குன்றும் மலையுங் குறுகி வழிநடப் தென்று தொலையுமோ என்று ஏங்கு வீர்காள்! உங்கள் பாட்டு பாடிய அப் போதே இறந்துவிடும். என்பாட்டு என்று மே கிழியாது. இதனை உணர் வீர்களாக என்றருளுகின்றார் ஸ்ரீமத் சுவாமிகள்.

"பொன்றினர் தமையோர் கூற்று லுயிர்த்
தொழப் புரிந்த தேவின்
மன்றலா ரடியை நாடி மகிவரைந் ததைப்
பா டாற்றல்
என்றுமே கிழியா தென்பாட் டென்பதைப்
புலமை யோடு
நின்றுளீ ருணர்மின் மேலே நிகழ்த்திய
தேவேற் றேவே''

பொன்றினர் தமையோர் கூற்றுலுயிர்த் தெழப் புரிந்தது—இந்திரன் முதலியோ ரைச் சாகச்செய்து வியாழ பகவான் வேண்ட உயிர்த்தெழ அருளியது; சூரபதுமனால் போரில் உயிரிழந்த தேவகணங்களை உயிர்த்தெழச் செய்தது. கோழிக் கொடியான் உயிர் இழந்த நம்பி யரசனுதியரை உயிரத்தெழச் செய்தது. இடும்பனை உயிர்த்தெழச் செய்தது முதலாய நிகழ்ச்சிகளைச் சுட்டுமென வுணர்க.

## உடற்கிறை; உயிர்க்கிறை

"இரை தேடுவதோ டிறையுந் தேடு'' என்பது ஸ்ரீமத்சுவாமிகள் அருளிய ஞான மொழி. உணவின்றேல் உடலிளைக்கும். 'என்தேகம் இளைத்தாலும் போகேனினி' என்பது பட்டினத்தடிகள் திரு மொழி உடல் வன்மை குன்றின் இறைவழி பாடுந் தன்றலாகும். உடம்பை வளர் க்கு முபாய மறிந்தே — உடம்பை வளர்த் தேன் உயிர் வளர்த் தேனே'' என்பது திருமந்திரம்.

அழியும் உலகம் இது. இதில் பிறக்கும் உயிர்களின் உடம்பும் அழியுந் தன்மையதே. ஆயினும் உடலைப் போற்றுகிறோம். காரணம் என்ன? உடல் நமக்கு ஒரு ஏணி. அவ்வேணி கொண்டே வேலவன் பதமலரைக்குறுக வேண்டும். இதனை உணராமலேயே மக்கள் உடலை மட்டும் போற்றி உயிர் பற்றிச் சிந்தனையே இலாதுளார்கள்.

அரிசியின் விலை அதிகரித்துள்ளது. கீழே ஒருமணியுஞ் சிந்தாமல் போற்ற வேண்டும். எனவே ஒரு பாண்டத்தில் அதனை வைத்துப் போற்றுகிறோம். பாண்டத்துக்கு மட்டும் மிக அழகு செய்து அரிசியில் பூச்சிகள் சேருவதைக் கவனியாதிருக்கலாமா? நாளாக அரிசியைப் புழுத்தின்று விடுமே. அது போல இறைவனடியைப் பற்றுவதே உயிரின் குறிக்கோள். உயிரிருக்குப் பாண்டம் இவ்வுடல். பாண்டமாகிய உடலைப் பல விதங்களானும் பேனி உயிரைக் கவனியாது விடலாமா? ஆணவம், மாயை, கன்மம் என்ற பூச்சி களால் உயிர் துன்புறுதா? அவ்வாறு துன்புறு மாறு விடலாமா? அது குற்றமேயன்றோ.

"புழுக்குடை யுடம்பின் றேற்றப் பொலிவினுக் குணவு வேண்டல், இழுக்கமில் செயல்போற் றேவ விறைஞ்சலு முயிர்க்கா மாற்று, அழுக்குஈ மெலும்பு கோச மனைத்துமே டுறலு முள்கா, வழுக்கொளு மன்றோ வென்றோ தெனைக்கொள் கோ மயிலூர் தேவே' உடம்புக்கு உணவு வனப்புத் தருமாறு உயிர்க்கு வனப்புத் தருவது இறை வழிபாடாம். உணவில்லாவுடல் பசிநோயால் வருந்துமாறு, வழிபாடில்லா உயிரும் பவநோயால் வருந்தும்.

### நல்லோரிலக்கணம்

பொய், பொறுமை, கோபம், தெய்வமிகழல், தற்புகழ்ச்சி கொடு மொழி கூறல் என்னும் ஐந்து தீங்குகளையும் அகற்றி அன்போடு கூடிச் செய்யும் அறத்தினது பலனை அனுபவிக்கும் அவர்கள் தேவர்களே யாவர். ஏனைய வஞ்சகர்களைப் புறம் போக்குவன் வடிவேற் பெம்மான்.

பொய்யழுக் காறு கோபம்
பூரணற் பழித்தல் கீர்த்தி
வெய்ய சொற் புகற லென்னு
மைந்தையும் விடுத்தன் பானே
செய்யறப் பலனைக் காண்பார்
தேவரே யாவ ரேனைக்
கையரைக் கழிக்கு மென்கோ
கதிர்மணி வேற்பெம் மானே.

### மகேசுவர பூசை

அறம், பொருள், இன்பம் என அறநூல்கள் மக்களெய்தற்குரிய பயனை மூவகையாக வகுக்கும். அறம் நிகழவும் பொருள் வேண்டும். இன்பந் துய்க்கவும் பொருள் வேண்டும். இவ்வாறு பொருள் பெறுஞ் சிறப்பு நோக்கிப் பொருளை நடுவண்வைத்தார் புலனுணர் மாந்தர் என்ப. பொருளான் வரும் இன்பம் துய்க்கப்படுவதும் ஓரளவே. அளவுக்கு மீறிய இன்பம், நுகர்காலைச்சலிப் புண்டாக்கும். நோயும் தரும் ஆகலின் துய்ப்பாங்கு துய்ப்பான் எஞ்சிய செல்வத்தைச் சேமித்து வைத்தல் எவண்? "அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன் பெற்றான் பொருள் வைப்புழி'' என்பர் திருவள்ளுவர். "செல்வத்துப் பயனே ஈதல்'' என நக்கீரனாரும் அதனையே உரைத்தார்.

வங்கியில் பணம்சேமித்தால் வட்டி போட்டுப் பெருகுமாறுபோல அற்றார் அழிபசி தீர்த்தல் துன்பமே இல்லா இன்பானுபவச் சொர்க்கத்திலுய்க்கும். ஆண்டு அறஞ் செய்தற் கிடனின்மையால் அச்செல்வங் குறைவுற்று மீண்டுஞ் சுகதுக்கானுபவப் பூமியின் கண்ணே வர நேரிடும். அமெரிக்காவில் வாழவிரும்பும் இந்தியக் குடிமகன் தன் சொத்துக்களையெல்லாம் தாலர்களாக மாற்றிக்கொண்டு அங்கேயே சென்று வாழ்கின்றான். அவ்வாறு அவனுக்கு உதவுவது நாணய மாற்று வங்கி.

அது போல நமது செல்வமாகிய பொருளை சிந்தையாகிய பொருளை அருளுலகத்துய்க்கும் அருளாக மாற்ற வேண்டும். இந்நாணய மாற்று வங்கியாக வயங்குபவர் இறைவனடியார். ஆயிரம் அற்றாரழிபசி தீர்ப்பினும் ஆயிரம் அந்தணர்க்கு அளிப்

பினும், ஆயிரம் ஆலயம் அமைப்பினும் அறுமுகன் அடியாரை உண்பிக்கும் ஓர் 'பிடி சோற்றுக் கிணையாகாதே. அதனுன ன்றோ "அகரமாயிர மந்தணர்க் கீயிலென்-சிகரமாயிரஞ் செய்துமுடிக்கிலென்-பகரு ஞானி பகலூண் பலத்துக்கு-நிகரில்லை யென்பது நிச்சயந் தானே" என்றார் திரு மந்திர முனிவரும். ஆகலின் மகேசுவர பூசை நிகழ்த்தும் மாணெறிமேற் கொண் டாரை யெல்லாம் மயிலமர் செல்வன் உள முவந்தாண்டருள்வானென்க.

"பசியினு மிகுந்த வாதை
யிலதெனும் பாஞ் மை தேர்ந்தார்
பிசியறு மயில்வே டொண்டர்ப்
பேணுவா ருணவே யூட்டி
நிசிதபு புகழாம் வேத
நிகழ்த்திய முனிவ னேந்தும்
உசிதவ ளாகத் தாள்பங்
கனதுள முவப்ப வாழ்வார்

இவ்வற மொழிகள் ஸ்ரீமத்குமார சுவாமி யத்துளதாம். இன்னணம், நம்பால்கருணை கொண்டு ஸ்ரீமத்சுவாமிகளருளிய ஞான மொழிகள் அவர்தம் எல்லா நூல்களினும் மணியெனச் சுடருகின்றன. இன்று முத லேனும், அவர்தம் நூல்களை முறையாக வோதி, முருகப் பரமனது முளரிப் பதங் கட்கு ஆட்படுவோமாக.



ஓம்

# ஸ்ரீமத்
# அருணகிரிநாத முனீந்திரர் சரித வரலாறு



**ஸ்ரீமத் அருணகிரிநாத சுவாமிகள் துதி**

அருவமொரு நான்காகி யுருவமொரு
நான்காகி யறையி ரண்டும்
மருவியுள வுருவருவ மொன்ருகி
முத்திறமும் வழுத்த வொண்ணுப்
பெருவெளிக்கு மப்பாலா யுள்ளபொரு
ளீதெனவே பெரிதுஞ் சேயோன்
ஒருவனையே புகழ்ந்தவரு ளருணகிரி
சேவடிப்போ துளத்துள் வைப்பாம்.

ஸ்ரீமத் அருணகிரிநாத முனீந்திரரது வரலாறு சர்வ சாதாரணமான ஒரு கதையைப்போல் பற்பல விதமாகப் பரவியுள்ளது. எனினும் அப் பெருமானையே ஆசிரியராகக் கொண்டு தமது பாடல்கள் தோறும் அவர் திருப் பெயரை அமைந்துப் பரவி வந்தவரும் அவரது உருவத் தோற்றம், மகா நாள் முதலியவற்றை ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னரே கணித்துள்ள சுவாநுபூதிச் செல்வருமாகிய பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் தம்மையடைந்தார்க்கு உபதேசித்த முறையைத் தழுவி இச்சரித்திரம் கீழ்வருமாறு எழுதப் பெற்றுள்ளது.

நினைத்த மாத்திரத்தில் மோக்ஷம் என்று சொல்லும்படியான திருவண்ணமலையின்கண், சுமார் ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் ஐசுவரியத்தில் மிகச் சிறந்தவராயினும் செருக்கடையாமல் சிவ பக்தியில் பெரிதும் ஈடுபட்டு ஆண்டவன் ஸந்நிதானத்திற்கு அலகிடுதல், மெழுகிடுதல், பூமாலைபுனைதல், பக்தியுடன் சதாகாலமும் பாடுதல் முதலிய தொண்டுகள் புரிவதே பெரும் பாக்கியமெனக் கருதியவரும், உருத்திரகணிகையர் வகுப்பைச் சார்ந்தவருமாகிய முத்தம்மையார் என்ற ஒரு மாது இருந்தனர். இவ்வம்மையார்க்குப் புத்திரப் பேறுபெற ஆசை உண்டாயிற்று. அதனல் அம்மை ஒருநாள் குகப் பெருமான் ஸந்நிதானத்திற்கு முன்பாக நின்று தொழும்போது, ஞானத்தில் மேம்பட்டவனுயும், ஈச்வரபக்தியில் சிறந்தவனுயும், உலகம் புகழவாழ்பவனுயும், உள்ள ஒரு சற்புத்திரனைத் தமக்கு அருள வேண்டுமென வேண்டிக் கொண்டனர். அச்சமயம் கண்கள் கூசும்படி திடீரென ஓர் ஒளி தோன்றியது. அதனுல் அம்மையார் தமது நிலை கலங்கித் தெளிந்த நேரம் "உனக்கு உலகம் புகழும் ஓர் சற்புத்திரன் பிறப்பான்" என்ற அசரீரி வாக்கு உண்டாயிற்று. அதுகேட்டு அம்மையார் ஆனந்த பரவசத்தில் மூழ்கி வீடு திரும்பினர்.

அப்பால் அம்மையார் கர்ப்ப மடைந்தனர்; பத்துத்திங்களும் கழிந்தபின் அம்மையாருக்கு ஒரு சுபதினத்தில் சர்வ மங்கள லக்ஷணங்களும் பொருந்திய ஓர் ஆண் மகவு பிறந்தது. (இப்பிறப்பானது ஆண் சேர்க்கையின்றி அமைந்த இயேசு கிறிஸ்து, திருஞான சம்பந்தர் முதலியோரைப் போன்றது).

முத்தம்மையார் மிகுந்த செல்வாக்குள்ள வராதலால் குழந்தை அதற்குத்தக்கபடி சகல சீருடன் வளர்க்கப்பட்டு வந்தது. அக்குழந்தை இளமையிலேயேசகல கலைகளும் உணர்ந்து சிவஞான சீலமடைந்து தாயைப்போல் முருகப்பெருமானிடம் மிகுந்த பற்றுள்ளதாக இருந்தது. அம்மையார் சுவாமிகளது இளமையில் முருகனடி சேர்ந்துவிட்டார்.

சுவாமிகளுக்குப் பருவம் முதிர்வதோடு பக்தியும் ஞானமும் மேன்மேலும் அதிகரித்துக் கொண்டே வந்தன. தாயாரின் கோரிக்கையை நிறைவேற்றத் திருவருளின் சம்மதமும் நெருங்கிற்று. கலைகளிலும் ஞானத்திலும் செல்வத்திலும் ஒப்புயர் வின்றி இருக்கும் சுவாமிகளின் நல்ல காளைப் பருவத்திலே செவ்வேட் பரமன் சுவாமிகளை யாட்கொண்டு அவரை உலகப் பிரசித்தராக்கத் திருவுளங் கொண்

டார். சுவாமிகளின் மாசற்ற பொன் போன்ற மேனியில் யாதொரு காரணமுமின்றித் திடீரெனத் தொழுநோய் காண ஆரம்பித்தது. (இஃது திருநாவுக்கரசு நாயனர் சூலைநோய் பெற்றதை ஒக்கும்) இதனல் கவலை கொண்ட ஆசிரியர் இப்பெருநோய் ஊழ்வினை; விலை மாதரின் வேட்கை முதலியவற்றின் பயனக நேர்வதென்று தீர்மானித்துத் தமது பாடல்களில் பண்டை வினைபோக்கல். போகமாதர் வெறுப்பு, சிற்றின்ப நிவர்த்தி முதலியவைகளை எடுத்துக் காட்டிப் பாடியுள்ளார்.

நாளுக்குநாள் நோய் அதிகரிக்க சுவாமிகள் கொடுமை சகியாராகித் தமது செல்வம் மாடமாளிகை முதலியன விடுத்து இறைவன் அநுக்ரகத்தைப் பெற்றுலன்றித் தீரா நோயாகிய அத்தொழு நோய் ஒழியாதெனத் தீர்மானித்து ஆண்டவன் ஸந்நிதானத்தையே தமது வாசஸ்தானமாக்கிக் கொண்டார்.

பின்னர் சுவாமிகட்கு அங்கக் குறைவுகள் ஏற்பட்டன; உருவம் குலைந்தது. ஆண்டவன் திருவருளை எதிர்நோக்கி இரவும் பகலும் அவர் தொழுது கொண்டிருப்பார். ஆனல் மனம்சோரவில்லை. இக்காலத்தில் ஓர் நாள் ஆண்டவன் மனமிரங்கிக் குருவாகத் தரிசனந் தந்து ஞானேபதேசம் செய்து ஜெபமாலை தந்தருளினர். அப்பால் சுவாமிகள் ஆறுநாட்கள் உடல் மறந்த நிட்டையிலிருந்து தெளிந்தபோது, நோய் நீங்கிப் புனிதவுடல் பெற்ருர். சுவாமிகள் அளவிலா ஆனந்தமடைந்து தமக்கு அநுக்ரகஞ் செய்தருளிய அருணைநாதனைப் பலவாறு புகழ்ந்து புகழ்ந்து மீண்டும் தரிசனந்தர வேண்டினர். குமரவேள் மறுமுறை தரிசனந்தந்து தம்மைப்பற்றிப் பாடும்படி "முத்தைத் தரு" என்ற அடியெடுத்துத்தர அன்று முதல் சுவாமிகள் சந்தமமைந்த திருப்புகழ்ப்பாக்களைப் பல தலங்களுக்கும் சென்று ஆங்காங்கு பாடிக்கொண்டேவந்தார். சிலநாள் கழிந்ததும், தமக்கு அநுக்ரகஞ்செய்த ஆண்டவனை மீண்டும் காணசுவாமிகளுக்கு அவா மேலிட்டது. அப்பேரானந்தம் கிட்டாது சுவாமிகள் மிகவும் துக்கித்தார்; பரிதபித்தார், எவ்வெவ்வித முறையில் முறையிட்டும் வேண்டியும் ஆண்டவனது கருணை ஏற்படவில்லை. காட்சி தந்து ஆட்கொண்டு அருளிய பரமனைக் காணது சரீரத்தை வைத்திருப்பது கூடாதென உறுதிகொண்டு விட்டார்

ஓலைச் சுவடியில் தாம் எழுதிவைத்திருந்த பாட்டுகளனைத்தையும் திரட்டியெடுத்துக்கொண்டு கோபுரத்தின்மீதேறினர்; இறைவனைத் தொழுது, தமது சுவடியிலுள்ள ஒவ்வொரு திருப்புகழையும் மற்றெரு முறை படித்துப் பக்தியிற் பரவசமானர்; பின்தெளிந்து உலகத்தார் அப்பாடலைப் படித்துப் பாடிஉய்தல் கருதிப் பெருங்கருணைகொண்டு, பாடலை ஒவ்வொன்ருகக் கீழே நழுவவிடுத்தார். இது தான் இவர் பாடிய பதினயிரம் பாடல்கள் சிதறுண்ட காரணம். எவரெவர் காப்பாற்றிக் கொடுத்தனரோ அவைதான் தற்போது வெளிவந்துள. மற்றவை மறைந்தன. சுவாமிகள் பாடி முடித்தாய்விட்டதாயினும் கோரிய தரிசனத்திற்கு முருகன் இன்னும் கருணை செய்யவில்லை. அதனல் சுவாமிகள் உடலை விடுக்கமுன்னரே தீர்மானித்துள்ளபடி கீழே குதிக்கத் தாவி விட்டார். கருணையங்கடலாகிய நமது முருகப்பெருமான் தமது இருகரங்களில் சுவாமிகளைத் தாங்கி மீண்டும் உலகத்தாரின் காரணமாக அவருக்கு அணிமாதி சித்திகளும் அநுக்ரகித்து மறைந்தார்; இவ்விதமாகவே சுவாமிகள் சிலகாலம் கூன், குருடு, செவிடு, முதலியவைகளைச் சொஸ்தப்படுத்தி தீராப்பிணிகளைத் தீர்த்து மற்றும் பல அற்புதங்களும் செய்து கொண்டு வந்தார்.

இஃதிவ்வாறிருக்க, வில்லிபுத்தூரார் என்பார் ஒருவர் தமது கல்விச்செருக்கால் புலவர்களை யெல்லாம் வரவழைத்து வாதில் வென்று தோல்வியுறச் செய்து அவர்கள் காதுகளை அரிந்து கொண்டு வந்த விஷயம் சுவாமிகள் கேள்விப்பட்டார். இதைக் கேட்டதும் சுவாமிகள் சற்றும் மனம் சகியாதாராகித் தாமே நேரில் அவரிடம் போய் அவ்வாழ்வாரை வாதில் வென்று அவர் காதை யறுக்காது கர்ண தானமும் மற்ருேர் காரணத்திற்காக கண் தானமும் அருளினர். இந்த நிலையில் சுவாமிகளின் கீர்த்தி, பிரதாபம் தயை, அநுக்ரகம்,புகழ் முதலியன பரவின. அப்

பால் இவரைப் போற்றுவாரும் பின்பற்றுவாரும் மிகுந்தனர்.

திருவண்ணுமலையிலே சம்பந்தாண்டான் என்னுமோர் மந்திரவாதிக்கு இவ்விஷயம் எட்டியதும் அவன் இவரை உயிருடன் காணவும் மனம் பொருளுகி அக்காலம் அவ்வூரை அரசாண்டவனும் மந்திர சக்திக்காகப் பயந்து தன்னிடம் கட்டுப்பட்டவனுமான பிரபுடதேவ மகாராஜனிடம் நமது சுவாமிகளைக் கொணர்வித்தான்; இராஜசபையில் பலருமறிய சுவாமிகளை அவர் தம் ஆத்மநாதனுகிய முருகப்பெருமானை வரவழைத்துக் காண்பிக்கும்படியும், அதற்கு ஈடாகத் தான் உபாசனை செய்து வந்த தேவியை அங்ஙனமே வரவழைப்பதாகவும் வாக்குறுதி செய்து கொண்டான். அரசன் கட்டளைப்படி ஏற்பாடுகள் யாவும் முடிந்தபின்னர், முதலில் சம்பந்தாண்டான் தன் தேவியை வரவழைப்பதற்காக எவ்வளவோ பாடுபட்டும் தேவி மறுத்துவிட்டாள். நமது சுவாமிகளோ வெகு எளிதில் "அதலசேடனுராட" என்ற பதிகத்தைப்பாடி முருகப்பெருமானை யாவரும் காணமயில் வாகனுரூடராகக் காட்சி தந்தருளச் செய்தார்.

நிற்க, யாதொரு காரணத்தாலேயோ, அரசனின் இருகண்களின் ஒளிமறைய, சுவாமிகள் அவன்பால் மிகுந்த கருணை கொண்டவராய்த் தாமே ஒரு கிளி யுருக் கொண்டு விண்ணுலகம் சென்று பாரிஜாத மலர் கொணர்ந்து அரசனின் குருட்டுத் தன்மையைப் போக்கி யருளினர். இவர் புரிந்தபல அதிசயங்களில் இது ஒன்று. (மற்றும் இவர் பரகாயப் பிரவேசம் என்றதோர் அற்ப வித்தையினுல் தமது வுடலைத் திருவண்ணுமலைக் கோபுரத்தின் ஓர் பகுதியில் மறைத்து வைத்துச் செத்துக்கிடந்ததோர் கிளியுடலில் புகுந்து பூக்கொணரச் சென்றதாகவும் திரும்பி வருங்கால் இவருடல் சம்பந்தாண்டான் சூழ்ச்சியினுல் எரித்து விடப்பட்டதாகவும் கற்பனை பிறந்துள்ளது.) ஆண்டவன் இவர்பால் கொண்டுள்ள பெருங்கருணைக்கும் ஆசிரியரது பெருந்தன்மைக்கும் இக்கற்பனை பொருந்துமோ?

முடிவாகக் கூறின், இவர் தரிசித்துப் பாடாத முருகன் க்ஷேத்திரமே கிடையாது. மற்றும் இவர் பாடியது கந்தரலங்காரம், கந்தரநுபூதி, வகுப்பு, வேல் விருத்தம், மயில் விருத்தம் முதலியன. இவர் தம்மை ஆசிரியராகக் கொள்வார்க்கு இன்றும் என்றும் அநுக்ரகித்து ஆண்டவன் திருவடி பெறுவதில் உதவி புரியக்காத்திருப்பது சரதம். இவரைக் கொண்டாடும் நாள் ஆண்டுதோறும் உத்தராயணத்து ஆரும் பௌர்ணமியெனக் குறிக்கப்பட்டுள்ளது.



# பாம்பனடிகள் காட்டிய வழி



திரு. T. கணேசம்பிள்ளை

அமிழ் தினுமினிய தூயசெந்தமிழ் வழங்கும் எந்நாட்டிலும் நன்றுடெனப் புகழும் தென் பாண்டி நாட்டின் திலகமென விளங்கும் சேதுவள நாட்டில் பாம்பன் எனும் பதியில் தமிழ்நாடு செய்த தவப்பயனாய், தமிழும் சைவமும் பண்பாடு அடையவும், புன்னெறியான உலகப் பன்னெறி விலக்கிச்செந் நெறியான செவ்வேள் திருவருள் சிவநெறியை விளக்கவும், கி. பி 1850ம் ஆண்டில் காலையில் எழுந்த இள ஞாயிறே போன்று அன்பின் உருவகமாக, அடக்கத்தின் சிகரமாக, அறிவின் கருவூலமாக, பண்பின் விளை நிலமாக அவதரித்தவர் பாம்பன் ஸ்ரீமத் குமர குரு தாச சுவாமிகள்,

சுத்தாத் வைத வைதிக சைவ சித்தாந்த ஞான பாஸ்கரராய்த் திகழ்ந்த சுவாமிகள் "ஆரியத்தொடு செந்தமிழ்ப் பயன்'' நன் கறிந்து வட நூற் கடலைக்கடந்து செந்தமிழின்பம் பருகியவர். தமது இளமைப்பருவந் தொட்டே முருகவேளின் மீது அன்பு முகிழ்த்து அந்த வேளையே எந்த வேளையும் பாடும் பேரன்பினராகிக் கந்தப்பெருமானைக் கனவிலும் நனவிலும் தரிசித்து, அவன் அனுபூதியைப் பெற்று 'உபய அருணகிரி' என்று உலகம் போற்ற இத் தலைமுறையில் வாழ்ந்த சிறந்த குருநாதராவார். சுமார் 20 ஆண்டு இல்லறம் நடாத்திப் பின்னர்ச் சுமார் 34 ஆண்டுகள் நேரிய துறவறத்தினின்று செவ்வேட் பரமன் சீரைத் தம் வாழ்க்கையாலும் தாம் செய்தருளிய சாத்திர தோத்திரப்பாக்களாலும் பல விடங்களிலும் பரப்பி வந்தவர். இத்தகைய பெருமை வாய்ந்த நம் சுவாமிகள் சுமார் 79 ஆண்டுகள் இவ்வுலகில் ஞான வள்ளலாய் நிலவி நிகழும் சுக்கில ஆண்டில் (30-5-1929) திருவுருக் கரந்து சென்னைத் திருவான்மியூரில் மகாசமாதி நிலையில் அமர்ந்துள் ளார்கள்.

சுவாமிகள் உலகில் சத்தியமும், பக்தியும், ஞானமும் பரவு வதற்கான புனித வழி, ஒரு மூர்த்தி வழிபாடாகும் எனத் தெளிந்து நின்றவர். சிலர் அருணகிரி நாதரருளிய திருப்புகழ் முதலியன ஓதி முருகப்பெருமான் ஒருவரையே வழிபடுவது கௌமார சமயம் என்னும் கருத்தால் கௌமார சங்கங்கள், கௌமார மடாலயங்கள் ஏற்படுத்தியுள்ளனர். வேறு சிலர் ஸ்ரீ அம்பிகையை வழிபடுவது சாக்த சமயம் என்றும், தனியாகக் கணபதியை ம டும் வழிபாடு செய்வோர் தங்கள் சமயம் காணுபத்தியம என்றும் கூறிச் செல்கின்றனர். இவர்களை நோக்கிப்பாம்பனடிகள் கூறியவை கூறுவோம்.

''இவர்கள் வழிபாடு சிறந்ததே. இம் மூவகையார் வழிபாடுகளும் தனித்தனியே ஒரு மூர்த்தி வழிபாட்டின் பாற்படும். தியானயோகத்துக்கு ஒரு மூர்த்தியையேகொள்ள வேண்டும். சமயா சாரியர் நால்வர்களும் அருணகிரி நாதரும், யானும் பின்பற்றிய வழி இவ்வொரு மூர்த்தி வழிபாடேயாகும்.

நால்வர் பெருமான்கள் எந் தெந்த சிவாலயம் சென்றாலும். அவர்கள் பாடிய தோத்திரப்பாக்கள் சிவ பெருமான் ஒருவருக்கேயாம். தனியாக உமா தேவியருக்காவது, விநாயகருக்காவது, முருகனுக்காவது பாடியது கிடையாது. பாட்டுடைத்தலைவன் சிவபெருமானே. பாட்டுடைத்தலைவன் சுற்றமாகக் கொண்டு உமா தேவியார், கணபதி, முருகன் இவர்கள் பெயர்களும் இடை யிடையேவரும். இவ்வாறே ஸ்ரீ அருணகிரிநாதரும் தாம் சென்ற சிவாலயங்களிலெல்லாம் தனது ஆன்மார்த்த மூர்த்தியாகிய செவ்வேட்பரமன் ஒருவருக்கே தோத்திரப்பாக்கள் இயற்றியுள்ளார்! இவர் பாடல்கட்குப் பாட்டுடைத் தலைவன் முருகனே. இப்பாக்களிடையே

பாட்டுடைத்தலைவன் சுற்றமாகக் கொண்டு சிவபெருமான், கணபதி, உமாதேவியார், விஷ்ணு மூர்த்தி இவர்கள் பெயரும், இவர்களின் பரத்துவமும் கூறியுள்ளார்: பாடல் முடிவு மட்டும் 'பெருமாளே, என்று முருகப் பெருமானுக்குத்தான் தோத்திரம் முடியும். பாட்டுடைத்தலைவன் யார் என்று உணராமல் அருணகிரியார் எல்லா மூர்த்திகளையும் தோத்தரித்துள்ளார் என்று சிலர் கூறிக் கொள்வது அறியாமையே யாகும். "யானும் அருணகிரியாரையே பின் பற்றினவனுயுள்ளேன் என்று கூறி மேலும் நமது சுவாமிகள் கூறுவதாவது:— சிவ பெருமான், உமா தேவியார், கணபதி, முருகன் இந்த நான்கு மூர்த்தங்களும் சிவ மூர்த்தங்களே. நான்கு மூர்த்திகளில் உயர்வு தாழ்வு கூறுதல் கூடாது. ஆன் மார்த்த வழிபாட்டிற்கு யாதேனும் ஒரு மூர்த்தியையே கொள்ள வேண்டும் யாதேனுமொரு மூர்த்தியைத்தனது ஆன்மார்த்த மூர்த்தியாக வழிபடுவோர் மற்ற மூன்று மூர்த்திகளைக் காணும்போது, தான் வழிபடும் மூர்த்தியாகவே பாவித்து வணங்கலாம், இந்த நான்கு மூர்த்திகளில் எந்த மூர்த்தியைத் தனியாக வழி பட்டாலும் அவர்கள் எல்லோருடைய சமயமும் சிவ சமயம் என்றே கொள்ள வேண்டும்: முருகனை வழிபட்டுயர்ந்த அணருகிரியார் திருப்புகழில்சிவசமய அறுமுகவ என்றும்போற்றுவது கவனிக்கத் தக்கது. பாம்பனடிகள் தமது வழிபாடெனும் கோட்பாட்டை

"மடமோட்டுங் கருணைதனை மறவேன்
நெஞ்சுளவளவும் மாற்ருர் நூலைத்
தொடமாட்டேன் அவருரைக்கும் உரை
கேளேன் அனியாயத் தொடக்கர் [கோட்குட்
படமாட் டேன் அருள் சுரந்து வீணுய
வொரு மொழிப் பய னிற் படரு நோக்கம்
விடமாட் டேன் இனிதளித்தி எனதுகுகப்
பிரம மென விளங் கெம்மானே"

என்னும் பாட்டால் உணர்த்துகிருர்கள்.

நால்வர் பெருமக்களில்,

"கருமான் உரியாடைக்
கரைசேர் கண்டத் தெம்
பெருமான் கழல் அல்லால்
பேணுதுள்ளமே"

என்று திருஞான சம்மந்தரும்,

"சென்று நாம் சிறு தெய்வம்
சேர் வோ மல் லோம்
சிவ பெருமான் திருவடியே
சேரப் பெற்ருேம்"

என்று திருநாவுக்கரசு சுவாமிகளும்

"மறிசேர் அங்கையனே
மழபாடி யுண் மாணிக்கமே
அறிவே உன்னை அல்லால்
இனியாரை நினைக் கே னே"

என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளும்,

"கொள் ளேன் புரந்தரன் மாலயன்
வாழ்வு குடி கெடினும்
நள் ளேன் நினது அடியா ரொடு
அல்லால் நரகம் புகினும்
எள்ளேன் திருவருளாலே
இருக்கப் பெறின் இறைவா
உள்ளேன் பிற தெய்வம் உன்னையல்
லால் எங்கள் உத்தமனே"

என்று மாணிக்கவாசகரும்,

"படிக்கின் றிலை பழநித்திருநாமம்
படிப் பவர் தாள்
முடிக்கின் றிலை முருகா
வென்கிலை முசியா மலிட்டு
மிடிக்கின் றிலை பரமானந்த
மேற் கொள விம்மி விம்மி
நடிக்கின் றிலை நெஞ்சமே
தஞ்சமேது நமக்கினியே"

என்று அருணகிரி நாதரும் ஒருமூர்த்தி வழி பாட்டுக் கோட்பாட்டை உறுதிப்படுத்திப் பாடியமை உணரத்தக்கதாகும்.

பாம்பனடிகள் மற்ற மூர்த்திகளைக் காணும் போது தாம் வழிபடும் செவ்வேட்பரமனுகவே பாவித்து வணங்கி வழிபட்டார் என்பது அடிகளாரின் கீழ்க்காணும் பாக்களால் தெளிவாகும். அடிகளார் குன்றக்குடிக்குப் போய் குமரவேளைத் தரிசித்துத் துதித்து விட்டுத் திருப்பத்தூரையடைந்து திருத்தணி ஈஸ்வரரை தரிசனம் செய்யும் பொழுது

"பொன்னும் அருஞ்செல்வி நீங்காதி
லங்கு பொழில் வளஞ் சால்
நன் னுடெனுந் திருப் புத்தூரின்
மேவிய நந்தி தன்னை
என்னுதரம் படு செவ்வே
ளெனத்தரிசித்து இறைஞ்சி
இன்னுவுரங் கடிந்தேன் மனந்தான்
குளிர்ந் தேன் அன்பரே"

என்றும், திருக்கானப் பேரூரை (காளையார் கோயில்) யடைந்து தெய்வதரிசனம் செய்யும் போது.

"நீரகம் சார் நெடு நேமியிற்
சீர்மை நிரம்பு கின்ற
பேரகம் சார் திருக்கானநற்
பேரூர்ப் பெரிய வனை
ஏரகஞ் சார் திருச் சேயவன்
யாண்டு மிருப் பவ னென்
றோரகங் கொண்டு வந்திப் பவர்க்
கேமன் உலகிலை யே"

என்றும், இராமேச்சுரத்தை யடைந்து திருக்கோயில் கொண்டு விளங்கும் இராம நாதனையும், பர்வத வர்த்தனி அம்பிகையையும், என்னுண்டவனுகிய சுப்பிரமணிய மென்றுமே கருதிப்பாடிப் பரவினர்.

"எல்லாங் குமாரப் பெருமா ளென்
ஞேர்ந்திடு மென்ன கத்தே
நல்லான் பருதிக்குலராமன்
பூசித்த நாதனையும்
அல்லாஞ் சுரியற் பருவத
வர்த்தனி அம்மையையும்
வல்லான் சிவ சண் முகன்று னென்
றெண்ணி வணங் குவலே!"

விஜய வருடம் புரட்டாசி மாதத்துப் பௌர்ணமியன்று கன்னியாகுமரி சென்று ஆங்கு கோயில் கொண்டுள்ள சத்தியைச் சத்தி வேற் பெருமானென்றே தரிசித்துப் பாடுகின்ருர்.

"அலை மேவு பவ்வ வள நீடு
மங் கன்னி யாகுமரி
நிலை மேவு சத்திதனை யென்னை
யாளொரு நேயமுள்ள
இலை வேல னென்று விஜய தெய்
வக் கன்னி யென்னுமதிக்
கலை மேவு பூரணை நாள்
கண்டிறைஞ்சிய காலமன்றே"

பின்னர் கன்னியாகுமரி அண்மையிலுள்ள சுசீந்திரத்தை யடைந்து ஆங்கு விளங்கும் தாணுமாலயப் பெருமானை, குமரப் பெருமாஞகக் கருதிப்பணிந்து,

"பத்தர் குழாஞ்சூழ் சுசீந்திரம்
வாழ் உமை பங்கனைமா
சித்தர் குழாஞ் சூழ் குமரன் எனக்
கருள் தேவென என்
புத்தி விடாது நினைந்து
கனிந்து புகழவுற்ற
இத்தின நற்றின மன்றோ
எனக்குள் இருப்பவனே"

என்னுங் கட்டளைக் கலித்துறையைப் பாடினர். இவ்வாறு தாம் காணும் மூர்த்தியைத்தனது ஆன்மார்த்தமுருக மூர்த்தியாகப் பாவித்த தொடன்றித் தம்மை அண்டிய சீடர்கட்கும் இவ்வாறு வழிபாடு செய்ய வேண்டு மென்று போதித்து, உலகுக்கும் இச் செவ்விய நெறியை விளக்கிக் காட்டினர்கள்.

சைவர்களுள் வீரசைவர் என ஒரு சாரார் உளர். இவர்களுள்ளும் பல ஞானிகள் தோன்றியுள்ளனர். இவர்கள் இயற்றிய நூல்களும் பலவுள. அவைகள் தோத்திரங்களாகவும் சாத்திரங்களாகவும் உள்ளன. அவர்கள் கூறும் முத்தி இலக்கணம் சைவ சித்தாந்தத்துக்கு முரண்பட்டதாகக் காணப் பட்டாலும். அவர்களை இழித்துக் கூறுதல் கூடாது, அவர்கள் முடிவைப் பற்றிக் கூறுவது எவ்வாறிருப்பினும், அவர்கள் வழிபடு மூர்த்தி சிவபெருமானும், அணிவது விபூதியும், தரிப்பது உருத்திராக்கமும், ஜபிப்பது பஞ்சாக்கரமு மாதலால் குறைகூறக் கூடாது.

சைவத்திருமுறை வகுத்த ஆசிரியர் தமது திருமுறைகண்ட புராணத்துள் திருக்கோவையார் என்னும் நூலை மணிவாசகப் பெருமான் இயற்றிய நூலன்று என்று சேர்க்காமல் விட்டிருக்க, அவருக்குப்பின் வந்தவர்கள் பாவை பாடிய வாயால் கோவை பாடிஞரென்றும், அவ்வாறு பாடும்படி சிவபெருமானே மணிவாசகஞரைக் கேட்டுக் கொண்டாரென்றும். எழுதிவைத்ததை நம்பி ஷ திருமுறைகளில் தற்காலம் சேர்த்துக் கொண்டுள்ளார்கள். காமுகர்களால் போற்றப்படுகின்ற களவுத் துறைகளைத்தையும் தன்னுட் கொண்டுள்ள இந்நூலைத் திருமுறைகளோடு சேர்க்கப்படுவது எமக்கு உடன் பாடன்று என்றும், இக்கருத்தை வேதத்தைக் குறித்த வியாசத்திலும், செவியறிவுறூஉ என்னும் நூலில் களவின் இழிவைக் கூறுதலாலும் பெரிதும் விளக்கியுள்ளார்கள்.

மெய்கண்ட தேவர்பால் பெரிதும் பற்று வைத்திருந்த ஒருவரால் இயற்றப்பட்ட,

"வேதம் பசு அதன் பால்
மெய்யா கமம் நால்வர்
ஓதுந் தமிழ் அதனின் உள்ளுறு
நெய் — போதமிகு
நெய்யின் உறு சுவையாம் நீள்
வெண் ணெய் மெய் கண்டான்
செய்த தமிழ் நூலின் திறம்"

என்ற செய்யுளை, பாம்பனடிகளார் தாம் இயற்றிய தகராலய ரகசியம் என்னும் நூலில் கண்டித்துள்ளார். வேதம் முதலியன பசு வென்றும், பால் என்றும், நெய் என்றும் கூறி மெய் கண்டார் நூலை சுவை யென்றது ஸ்ரீமத் அருணகிநாதனு ரருளியுள்ள தெய்வத்திருப் புகழ் முதலிய நூல்களில் மிக்கப் பற்றுள்ளார், ரசத்தின் மேல் அதிரசம் என ஒன்று இருப்பது போல், சுவையின் மேல் நுண் சுவை உளதென்று கூறி ஷ செய்யுளை,

"வேதம் பசு அதன் பால்
மெய்யா கமம் நால்வர்
ஓதுந் தமிழ் நெய்
யுறுசுவையே — போதமெனக்
கோடலா மென்பாய் குரவன் அருணகிரி
பாடரு னுண்சுவையாம் பார்"

எனச் சுவைக்கு மேல் நுண் சுவை அருணகிரியார் வாக்கு என்று ஷ செய்யுளைத் திருத்தி இயற்றிடக் கூடும் அல்லவா? வேதம் முதலிய நூல்களை இழித்து மெய் கண்டாருடைய தமிழ்ச்சிவ ஞான போதம் என்னும் நூலை உயர்த்திக் கூறினவரைப் பற்றி அடிகளார், மகனுக்கு முடி சூட்டிப் பார்க்க மன்னனைக் கொல்லும் வனிதையைப் போல்வராய்த் தமிழ்சிவஞான போதம் ஒன்றையே உயர்த்திக் கூறியுள்ளார் என்று தகராலய ரகசியத்தில் கூறி யுள்ளார்கள்.

ஸ்ரீமத் அருணகிரிநாதர் இயற்றியருளிய கந்தர் அனுபூதியின் முதற் செய்யுள் காப்புச் செய்யுளாக அச்சிடப்பட்டு வழங்கியுள்ள நெஞ்சக்கன கல்லு............பஞ்சக்கரவானை பதம் பணிவாம் என்னும் செய்யுள் அருணகிரியார் திருவாக்கல்ல; வேறு எவரோ அச்செய்யுளை இயற்றிச் சேர்த்துள்ளார். ஆடும்பரிவேல்........... தனியானை சகோதரனே என்னும் செய்யுளே அந் நூலின் முதற் செய்யுளாகும். அதில் காப்புக்கடவுளாகிய விநாயகரை நினைத்தும், பன்னர் அவர் சகோதரனும் தனது ஆன் மார்த்த மூர்த்தியுமாகிய முருகப் பெருமானை தனியானை சகோதரனே என விளித்துப் பாடும் பணியே பணியாய் அருள்வாய் என்று அவரையே வேண்டுதல் செய்கிறார். இந்நூலில் விநாயகருக்குச் காப்புச்செய்யுள் இயற்றிச் சேர்த்தது போல, அருணகிரி யாராலேயே இயற்றப்பட்ட கந்தரலங்காரக்த் துக்கும் அவ்வொருவர் அவ்விதக் காப்புச் செய்யுள் ஒன்று இயற்றி அந் நூலோடு சேர்க்காமல் விட்ட காரணம் தெரிய வில்லை,

இந்நூல் அவர் பார்வைக்குக் கிடைக்க வில்லை போலும். கிடைத்திருந்தால் இதற்கும் ஒரு காப்புச் செய்யுளியற்றிச் சேர்த்திருப்பார். கந்தரலங்கார முதற் செய்யுள், "அடலருணை.........களிற்றுக்கிளைய களிற்றினையே" என்று உள்ளது. இதன் ஈற்றடியில் களிற்றுக்கிளைய களிற்றினையே என வருவது போலவே ஷ அனுபூதி முதற் செய்யுளின் "ஈற்றடியில் தனியானை சகோதரனே" என ஒரு படித்தாகவே அருளிச் செய்துள்ளார் என்பதனைக் கூர்ந்து நோக்கின் ஷ அனுபூதியின் காப்புச் செய்யுள் யாராலோ இயற்றப்பட்டுச் சேர்க்கப்பட்டுள்ளது என்பது நன்கு தெளியலாம்.

கந்தரனுபூதியின் கடைசிப்பாடலான "உருவாய் அருவாய் உளதாயிலதாய்...... வருவாய் அருள்வாய் குகனே" என்னும் பாடல் அருணகிரியார் வாக்கன்று. புஷ்பரதச் செட்டியார் என்பவர் முதன் முதலில் அச்சிட்டகந்தரனுபூதிப் பதிப்பில் "தூசாமணியும்... பேசா அனுபூதி பிறந்ததுவே" என்னும் பாட்டோடு முடிகிறது. 43 பாடலை மட்டும் கொண்ட அந்நூல் அக்கரங்கள் 51 ஆதல் பற்றிப் போலும் 8 பாடல்கள் யாரோ ஒருவரால் பின்னர்ச் சேர்க்கப் பட்டிருக்கிறது. மேற் சொன்ன 43ஆம் செய்யுளோடு கந்தரனுபூதி முடிகின்ற தென்பதே எம் கொள்கையாம் என்றும் சுவாமிகள் குறிப்பிட்டுள்ளார்கள்.

ஒரு தெய்வவழிபாடே சிறந்த தென்றும், நால்வர் பெருமான்களும், அருணகிரி நாதரும் அந்நெறியில் நின்று காட்டினார்கள் என்றும், இவர்களையே பின்பற்ற வேண்டு மென்று பெரிதும் வற்புறுத்தி

"பல தெய்வவழிபாடுவியபசாரம்போன்றது" என்றும் கூறியுள்ளார். இது வன்றி வெளிப்பூஜைகளை விட உட்பூஜையே சிறந்த தென்றும், வெளிப்பூஜைகளில் மகேச்சுர பூஜையே சிறந்த தென்றும், சிவனடியார்களைத் திருவமுது செய்விப்பதே மகேச்சுரபூஜை என்றும் தெரிவித்துள்ளார். இதன் சிறப்பு குறித்து சுவாமிகள் இயற்றிய சேந்தன் செந்தமிழ் என்னும் நூலில் 34ஆம் செய்யுள் வருமாறு:—

> துன்பக் குரிய வழி நின்னைத்
> தொழாமை அருள்
> இன்பக்குரிய வழியேகில்
> நின்றுள்— அன்பர்க்கே
> இன்சோறிட்டு ஏத்தல்
> எனுமுன் முறையிது தான்
> உன் சேர்வுற்றார்க்கு
> உறும் வேலோய்"

இறைவனுடைய அருளைப் பெறுதற்குரிய வழி அவனை முற்றிலும் நம்பியுள்ள பெரியோர்கட்கு இனிய உணவையிட்டு அவர்களை வழிபடுவது என்றும், அடியவர் வழிபாட்டையே அவன் வழிபாடாக உவந்து கொள்கிறான் என்றும், அடியவர் வழிபாடு பசுவின் வாயிற் புல்லைக் கொடுத்து மடியிற் பாலைக்கறப்பதையும், அடியவரை வழிபடாது நேரே இறைவனை வழிபடல், மடியிலேயே புல்லைக் கொடுத்து அம்மடியிலேயே பாலைக்கறக்க நினைப்பதையு மொக்கு மென்றும் கூறி, பசுவின் வாயினை அடியவர் ஸ்தானமாகவும், மடியினை இறைவனது ஸ்தானமாகவும் குறிப்பிடுகிறார்.

மாணிக்கவாசகனார் திருப்பெருந்துறையில் சிவபெருமானால் நேரில் ஆட்கொள்ளப்பட்டது போலவே பாம்பனடிகளாரும் இராமநாதபுரத்தைச்சார்ந்த பிரப்பன்வலசை என்னும் திருவூரில் நிட்டையில் இருந்த போது ஸ்ரீ கந்தப் பெருமானால் ஆட் கொள்ளப்பட்டவர்.

அடிகளார் தோத்திரங்களாகவும் சாத்திரங்களாகவும் பாடியுள்ள பாடல் தொகை 6666 ஆகும். இவைகளில் சாத்திர நூற்கள் சுருதி, யுக்தி, அனுபவங்களால் மிளிர்வனவாகும். பரிபூரணானந்த போதம் என்னும் சாத்திர நூல் இருபடலங்களைக் கொண்டுள்ளது. சுருதி, யுக்திஎன்பன வற்றை அந்நூலின் முதற் படலமாகிய பதி பசுபாச யதார்த்த விளக்கப் படலத்தும், அனுபவத்தை ஷ நூலின் பிற்படலமாகிய துறவற விளக்கப்படலத்தும், தகராலய ரகசியம், திருப்பா என்னும் நூற்களிலும் விளக்கமாகக் காணலாம்.

ஆறெழுத்துளங் கொண்டு ஐம்புல னடக்கி, அவா அறுத்து, ஒரு நெறி துருவி, அருள் நெறி நின்று 'உபய அருணகிரி'நாதரென்றிலகி முருகவேள் புகழை முற்படவளர்த்த நமது பாம்பனடிகளின் அருமை பெருமைகளை அனைவரும் உணர்ந்து, அம்முனி புங்கவர் நமக்குக் காட்டியருளிய செந்நெறியைப்பின்பற்றிப் பேரின்ப வாழ்வில் திளைக்க எல்லாம் வல்ல திருப் பிரப்பன் வலசைச் செப்பதியமர்ந்த ஸ்ரீமயூரநாதப் பெருமான் திருவடிகளை மனம், வாக்கு, காயங்களால் போற்றிப்புகழ்ந்து வாழ்த்தி வணங்கி வழிபட்டு வாழ்வோமாக,

> வானம் இடிந்து தலையில் விழும்படி
> வம்பு வந்தாலும் என்னை—அந்தக்
> கானமயின் முருகையன் திருவருள்
> கைவிட மாட்டாதே
> —ஸ்ரீமத் பாம்பனடிகள்

குமரகுருதாச குருவே சரணம்



# எங்கள் தெய்வம்



எஸ். வி. இராசவினாயகம், தலைவர் தமிழ் நாடு தெய்வீசப் பேரவைவை, தெய்வச்சிலை நல்லூர்

சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த பாண்டி வள நாட்டில் அமைந்துள்ளது முகவை மாவட்டம். இங்கு சேது காவலர்கள் என அழைக்கப்படும் சேதுபதிகள் வாழ்ந்து வரு மிடம் இராமநாதபுரம் நகர். இம்மரபில் வந்த பாஸ்கர சேதுபதி அவர்கள் சுவாமி விவேகானந்தரை சிக்காகோவிற்கு அனுப்பி இந்து சமயம் தழைக்கச் செய்ததை இந்த நானிலமே அறியும்,

இலக்கியவரலாறும், பழமையும், தமிழ் மணமும் கமழும் இந்நகருக்குத் தென் மேற்கில் 16 கி. மீ. தொலைவில் உள்ளது திரு உத்தர கோசமங்கை யென்னும் ஊர். மணி வாசகரால் ''பத்தரெல்லாம் பார்மேல் சிவபுரம் போல் கொண்டாடும் உத்தர கோச மங்கை ஊர்'' எனக்கூறப்பட்டது. திரு உத்தரகோச மங்கையை சைவசமயப் பெரியார்கள் யாவரும் நன்கறிவர். இறைவன் இறைவிக்குப் பிரணவ மந்திரத்தை உப தேசித்த தலமாகையால் உத்தர கோச மங்கை என்ற பெயர் பெற்றதென்று தல புராணம் கூறுகிறது. இத்தலம் ஆதி சிதம்பரம் என்றும் அழைக்கப்படுகிறது. இச்சிவாலயத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் மங்கள நாதர்; இறைவி மங்களேஸ்வரி என அழைக்கப்படுகிறது. இத்தலத்திற்கு வந்த ஸ்ரீ அருணகிரியார் அறுமுகன் மேல் திருப்புகழ் பாடியுள்ளார். இத்தலம் ஓர் பழமைப் பதியாகும். இங்குள்ள மரகத நடராஜர் சிலை காண்போர் கண்ணையும் கருத்தையும் கவரத்தக்கவை. உலக அதிசயங்களில் ஒன்றெனத் திகழ்கிறது:

இன்னோரன்னபிற பெருமைகள் வாய்ந்த திரு உத்தர கோசமங்கைப் பதிக்கு வட கிழக்கில் $1\frac{1}{2}$ கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ள சிற்றூர் தெய்வச்சிலை நல்லூர். தொல்காப்பியத்திற்கு உரைபுகன்ற தெய்வச்சிலையார் என்ற புலவர் இங்கு வாழ்ந்ததாகப் பெரியோர்கள் கூறுகின்றனர். இதை மெய்ப்பிக்கும் வண்ணம் இச் சிற்றூரில் வாழும் மக்கள் 100% எழுத்தறிவு பெற்றவராய்ப் பல்லாண்டு காலமாய் வந்து கொண்டிருக்கிறது. இவ்வூரின் கீழ்ப் பகுதியில் திருக்குளமும் ஐயனார் சிலையும் உள்ளன. ஐயனார் சிலைக்குப் பக்கத்தில் பட்டை தீட்டிய சிவலிங்கமும் அமைந்துள்ளது இதன் மருகில் சுமார் 7 அடி உயரமும் $\frac{3}{4}$ அடி விட்டமும் கொண்ட ஸ்தல விருட்சம் ஒன்று இருக்கிறது. இம்மரம் பூக்கிறது; காய்க்கிறது இல்லை. பல்லாண்டுகளாய் உள்ள இந்த அதிசயமரம் பருப்பது மில்லை படர்வதுமில்லை. ஊர் நடுவில் அமைந்துள்ள வினாயகர் ஆலயம் மிகுந்த சிறப்பை அளிக்கிறது. திரு உத்தர கோச மங்கையுடன் கிராமச்சாலை இணைக்கப்பட்டிருக்கிறது.

சுமார் 500 ஜனத்தொகை கொண்ட இந்த கிராமத்தில் பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் சுமார் 30 பேர். இவர்கள் உள்ளூரிலும் சுற்றியுள்ள கிராமங்களிலும் பணியாற்றுகிறார்கள். இன்னும் பல துறைகளிலும் பணியாற்றுகின்ற சிலரும் உண்டு.

சுமார் 5 ஆண்டுகளுக்கு முன் எங்கள் கிராமத்திற்கு நடமாடும் தெய்வமொன்று மானுட உருவில் வந்தது ஓர் சாது. தெய்வச்சிலையார் வாழ்ந்த இடமல்லவா? காந்த மெனப்பற்றினர் கிராமமக்கள் சாது அவர்களை. தங்கினார்கள் கிராமத்தில், யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என் பதற் கிணங்க நாள் தோறும் ஊர்மக்களைக் கூட்டி மன்றத்தின் நடுவில் தொண்டர்புராணப் பெருமையையும் இன்னோரன்ன இலக்கிய உபந்நியாசங்களையும் நடத்தினார்கள்: திருநீற்றின் பெருமையை அறிய வேண்டுமானால் தெய்வச் சிலை நல்லூர் கிராம மக்களைப் பார்த்தாலே விளங்கும். பால்

வேறுபாடின்றி நீறு அணியச் செய்த பெருமை எங்கள் வழிபாட்டுத் தெய்வமாகிய திரு. தங்கவேல் சுவாமிகளைச் சாரும் என்ருல் மிகையாகாது. தன் பணி தொடர எண்ணியசாது அவர்கள் தெய்வீகப் பேரவையை ஸ்தலத்தில் நிறுவி வார வழிபாட்டு முறையினையும் ஆரம்பித்தார்கள். சுற்றுப் புறக் கிராமமான 1. வெள்ளா 2. களரி முதலிய இடங்களிலும் தன் பணியைத் தொடர்ந்தார்கள். சுவாமிகள் அவர்கள் உணவில் அரிசி உணவை, உப்பு, உறைப்பு ஆகியவற்றை நீக்கி தன் வழிமுறையைக் கைக் கொண்ட நிலையை எண்ணிஞலே எம்மால் இயம்ப முடியவில்லை. ஒப்பாரும் மிக்காரும் இல்லாசாது அவர்கள் பிரப்பன் வலசையில் பாம்பன் சுவாமிகட்கு திருக் கோயில் கட்டி வருவதை அன்பர்கள் அறிவார்கள். தெய்வச்சிலை நல்லூரிலும் பாம்பன் சுவாமிகட்கு என ஒரு மடாலயம் தேவை என்பதை வெளியிட கிராமமக்கள் 20 செண்டு நிலத்தை விலைக்கு வாங்கி கல்கட்டிடம் கட்டப்பட்டு நிலமட்டம் வந்திருக்கிறது சென்னை உயர் திரு என். ஜெயராமன் அவர்கள் தன் குடும்பசமேத ராய் தெய்வச்சிலை நல்லூர் வருகை தந்துமடத்திற்கு ரூ 101 நன்கொடை நல்கியதைக் குறிப்பிடாமல் இருப்பதற்கில்லை. சாது அவர்கள் திருவான்மியூர் சென்ற போது மடத்திற்காக பாம்பன் சுவாமிகளின் முழு வண்ணப்படத்தை சிவநெறிச் செல்வர் என். ஜெயராமன் அவர்கள் வழங்கியுள்ளார்கள் மற்றும் காளையார் கோவில் மட அதிபர் உயர்திரு அருணசல சுவாமி போன்றவர்களும் பொதுமககளும் நன்கொடை உதவியதைக் கொண்டே கட்டிடம் நடந்து வருகிறது. பாம்பன் சுவாமிகளுக்காகத் தெய்வச் சிலை நல்லூரில் கட்டிடம் நடந்து கொண்டிருக்கும் நிலையில் அது பூர்த்தி செய்ய முடியாத நிலை வந்துளது. ஆன்மிக அன்பு கொண்ட நேயர்கள் தங்களால் இயன்ற பொருள் உதவிசெய்து சுவாமிகள் அருள்பெற வேண்டுகிறேன்.



உ

# கந்தபுராண வரலாறும் தமிழ்நூல்களும்:



திரு C. S. கண்ணுயிரம், கோவை.

இவ்விந்திய நாடு எத்துணைப் பழமையானதோ அத்துணைப் பழமையானது சிவவழிபாடானசைவ சமயமாகும். இஃது ஏனைய சமயங்களைப் போன்று அன்னிய மண்ணில் தோன்றி இந் நாட்டுள் நுழைந்து நிலைபெற்ற தன்று. இந்நாட்டுள்ளும் யாரால் எக்காலத்துத் தோற்றுவிக்கப் பட்டதென்றும் அறுதியிட்டுக் கூறும் பான்மைத்தன்று. வெளிநாட்டினின்றும் ஈண்டுப் போந்தும், இத்தேயத்திலேயே தோற்றுவிக்கப்பட்டும் விளங்கிய பலசமயங்களின் உயிர்க்கொள்கைகளையும் தன்னகத் தடக்கி இந்துசமயமென்று பரந்து விளங்குவது. காலப் போக்கில் அவ்வச்சமயங்கள் வழக்கற்றொழிய இஃதொன்றே நிலைத்து விளங்குவதாம்.

சிவ பரஞ்சுடரைச் சிவலிங்க வடிவிலும் ஏனைய தடத்த வடிவங்களிலும் வழிபடுவோர் எண்ணற்றோராவர். அவனது மகாமந்திர மாகிய திருவைந் தெழுத்தும் அவனும் வேறு வேறு அல்ல. அவனே அம்மந்திரமும் அம்மந்திரமே அவனுமாம். அம்மந்திரத்தின் சுருக்கமே பிரணவமாகும். அதனை விநாயகப்பெருமான் வடிவில் வழிபடுவோர் ஒருசாரர். இறைவன் கருணையே வடிவானவன். அவ்வடிவத்தையே உமாதேவியாகக் கொண்டு வழிபடுவோர் மற்றொருசாரர். ஈசனின் இளமைக்கோலமாகிய குமாரபரமேச்சுர வடிவமே முருகப்பெருமான் ஆகும். அச்செவ்வேட் பரமனையே வழிபடுவோர் பிறிதொருசாரர். இந்நால் வகை வழிபாட்டினரும் சைவசமயிகளே என்பர் ஸ்ரீமத்-பாம்பன் சுவாமிகள் போன்ற பெருமக்கள்.

இவற்றுள் ஈண்டு அறுமுகச்சிவனாகிய குறிஞ்சிக் கிழவனின் வரலாறு தமிழ் நாட்டில் தொன்றுதொட்டு வழங்கி வருவதோ அன்றி வெளிநாட்டில் தோன்றி இங்குப் புகுந்த பிறமொழிக் கதையை மொழிபெயர்த்து அழகுறப் புனையப்பெற்ற பெருங்காவியமோ என்று சிறிது ஆராய்வோம்.

கந்தவேளின் வரலாறு கூறும் தமிழ் நூல் "கந்தபுராண"மாகும். இதனை ஸ்காந்தமெனும் வடமொழி நூலினின்றும் தமிழாக்கியவர் கச்சியப்பசிவாசாரியார் ஆவர் இவரது காலம் கி பி. 11-ம் நூற்றாண்டாகும் இந்நூல் வடமொழி நூலின் மொழி பெயர்ப்பாயினும் இஃது எழுதுவதன் முன் நந்தமிழ் நாட்டில் கார்த்திகேயப்பெருமானின் வரலாறுமவன் தோற்றத்துக்குக் காரணமாய சூரபதுமன் வரலாறும் மிகவும் பரந்து வழங்கின. அன்றியும் தமிழ்க் கந்தபுராணத்துள் காணப் பெறுத பல நிகழ்ச்சிகளும் பண்டைத் தமிழகத்தில் வழக்கிலிருந்தன. இவற்றைக் கச்சியப்ப சிவாசாரியார் காலமாகிய பதினொன்றும் நூற்றாண்டுக்கு முற்பட்ட பல தமிழ் நூல்களில் பரக்கக் காணலாம்.

"தக்கயாகத்தில் சிவ நிந்தனைக்கு உடன் பட்டதால் அமரர்கள் இறைவனாணையால் வந்த வீரபத்திரராலும் காளிதேவியாலும் ஒறுக்கப் பட்டனர். அதன் பின்பும் எஞ்சிய பாவம் நீங்கிக் கழுவாய் பெற அவர்கள் பல்லூழிக் காலம் சூரபதுமனால் துன்புற்றனர். இறுதியில் அவர்களை உய்விக்க இறைவன் திருவுளம் பற்றினன். அவனது ஐம் முகங்களுடன் அதோ முகமும் கூடிய ஆறு முகங்களினின்றும் தோன்றிய ஆறு தீப் பொறிகளை அவன் ஆணையால் அக்கினி தேவன் கையில் தாங்கிச் சென்று கங்கையில்விட்டான். அவை சரவணப்பொய்கையில் அறுமுகப் பரமனைக் காட்சி தந்து, பின்னர் ஆறு குழந்தைகளாகத் தங்கின. கார்த்திகை மாதர் அறுவரும் அவற்றையெடுத்துப் பாலூட்டினர். அக் குழந்தைகளை உமையம்மையார் எடுத்தணைக்க அவை ஆறு திருமுகங்களும் பன்னிரு கரங்களும் கொண்ட திருமேனியுடைய முருகப் பெருமானைப் பண்டு போல் இணைந்தன. வடிவேலிறை தேவ சேனாதிபதியாகச் சூரன் மீது போர்க்

கெழுந்தான். வழியில் எதிர்த்த தாரகனைக் கிரௌஞ்ச மலையுடன் வேற் படையால் பிளந்து அழித்தான். பின் மாயப்போர் பல செய்து நடுக்கடலுள் மா மரமாகி நின்ற சூரனை வேலாற் பிளந்தான். இறுதியில் ஆர்த்து வந்த அரக்கன் உரத்தில் வேல் விட, அவன் இருபிளவாகி ஒரு பகுதி சேவலாகவும் மற்றொரு பகுதி மாமயிலாகவும் மாறிப் பதைத்து வந்தான். இறைவன் தன் கருணை நோக்கால் மாயை தன் மைந்தனின் பலமொழித்து மயிலை ஊர்தியாக்கிச் சேவலைக் கொடியாக உயர்த்தான். இந்திரனும் தேவர்களும் துன் பொழிந்து வாழ்த் தெடுத்தனர். '' இது கந்தபுராண வரலாற்றின் சுருக்கம் இவ்வரலாற்றின் குறிப்புக்களை இனிப்பழந் தமிழ் நூல்களில் காணலாம்.

தக்கயாகத்தில் வீரபத்திரருடன் காளியையும் இறைவர் தோற்றுவித்து வேள்வியை அழிக்க அனுப்பியதை

'' செவ்வேள் வித்தகனை முன் சிதைத்தார் போலும் ''
'' வேலார்கை வீரியைமுன் படைத்தார் போலும் ''

என்னும் திருவீழி மிழலைத் தாண்டகங்களிற் காண்க. தக்கன் வேள்வியை அழித்ததை மூவர் தேவாரத்தும் திருவாசகத்தும் திருக்கோவையாருள்ளும் திரு மந்திரத்தினுள்ளும், எண்ணற்ற இடங்களிற் காணலாம்.

இறைவனின் ஆறு திருமுகங்களினின்றும் வெளிப்போந்த ஆறு தீப் பொறிகளை அக்கினி தேவன் தாங்கிச் சென்றதையும், சரவணப் பொய்கையுள் சேர்த்ததையும், ஆறு குழவிகட்கும் கார்த்திகை மகளிர் பாலமுதளித்ததையும். நக்கீரதேவ நாயனர்;

''நெடும் பெருஞ் சிமையத்துநீலப்பைஞ்சுனை
ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப
அறுவர் பயந்த ஆறமர் செல்வ'

[திருமுருகாற்றுப் படை 253-255]

என்றருளினர்.

சரவணப் பொய்கையுள் சண்முகப் பெருமான் இருந்ததால் அவனுக்குச் சரவணன் என்ற திருநாமம் வழங்கலாயிற்று. இதனைச்

'' சரவணத் தான்கைதொழுதுசாரும்மடி''
என்று திருவதிகை வீரட்டானத் தாண்டகத்தில் அரசுகள் அருளியுள்ளது காண்க. அப்பொய்கையுள் ஆறு சேய்களும் ஒன்றாய் இணைந்து அவன் பன்னிரு விழிகளுடன் விளங்கியதைப் '' பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்றும் '' என்று திருப்பூவணத் தேவாரத்துள் போற்றுகின்றார் தாண்டகவேந்தர். இளங்கோவாகிய குழந்தை வேலனின் இவ்வரலாற்றினை இளங்கோவடிகளும்:

'' சரவணப்பூம் பள்ளியறைத் தாய்மாரறுவர்
திருமுலைப்பா லுண்டான் திருக்கைவே லன்றே
[சிலப்பதிகாரம் — குன்றக்குரவை]

என்று எழிலோவியம் தீட்டியுள்ளார்.

தேவயானையின் காந்தன் தேவசேனாபதியாகப் போர்க் கெழுந்ததை;

'' வானோர் வணங்குவிற் றானைத் தலைவ ''
[திருமுருகாற் றுப்படை 260]

என்று போற்றுகின்றார். பொய்யடிமையில்லாப் புலவர் பெருந்தகை. இதனையே '' அமரர் சேனைக்கு நாயகனான குறவர் மங்கைதன் கேள் வனைப் பெற்ற கோனை'' '' என்று திரு நள்ளாற்றுத் தேவாரத்தில் நம்பிகள் அருளியுள்ளமை காண்க.

அறுமுகச் செல்வன் அமரர் சேனைக்குத் தலைவனாகிப் படை நடத்திச் செல்லும் போது எதிர்பட்ட தாரகன், வீரபாகு தேவர் உள்ளிட்ட சேனை முழுவதையும் கிரௌஞ்ச மலையுள் அடக்கிச்சிறைசெய்து போர்க் கெழுந்தான். செவ்வேளின் கை வேல் மலையையும் தாரகனின் மார்பையும் பிளந்தது.

''குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து.
[திருமுருகாற்றுப் படை126]

என்று நக்கீரர் பெருமானும்;

''வரு திகிரி யோனவுணன் மார்பம் பிளந்த
குருகு பெயர்க் குன்றங் கொன்ற நெடு வேலே''
[சிலப்பதிகாரம் குன்றக்குரவை]

என்று இளங்கோவடிகளும் இயம்புவது நோக்குக.

சூரபதுமன், தன் தம்பிமாரும், மக்களும் அமைச்சரும் எண்ணற்ற சேனைத் தலைவர்களும் வீரர்களும் போரில் இறந்தொழிந்த பின்பு தான் தமியனாக நின்று காங்கேயப் பெருமானுடன் மாயப்போர்பல புரிந்தான்; மறிகடலின் நடுவே மாமரமாய் நின்றான். பன்னிருகையோன் கொன்னுனி வேலால் கடல்கலங்கி மாமரம் பிளப்புண் டொழிந்தது. இதனை :—

''பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச்
சூர் முத றடிந்த சுடரிலை நெடுவேல்''
'' அவுணர் நல்வல மடங்கக் கவிழிணர்
மாமுத றடிந்த மறுவில் கொற்றத்
தெய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்.'.
திருமுருகாற்றுப் படை,
[45—46; 59—61].

என்று நக்கீரதேவ நாயனாரும்,

' பாரிடம் பௌவத்தி னுட்புக்குப் பண்டொரு நாள
சூர்மா தடிந்த சுடரிலைய வெள்வேலே.,
[சிலப்பதிகாரம் - குன்றக் குரவை

என்று இளங்கோவடிகளும்கூறியுள்ளனர்

இறுதியில் இறைவன் சூரனை வேலால் இரண்டாகப் பிளக்க அவன் சேவலும் மயிலுமாய்ச் சீறி வருகின்றான். அண்ணலின் அருள் நோக்கால் ஆணவ மலம் அடங்கச் சூரன் உய்கின்றான். மயிலூர்தி-யில் இவர்ந்து சேவலைக் கொடியில் உயர்த்துகின்றான் பெருமான். தேவர்கள் மகிழ்ச்சியால் ஆர்க்கின்றார்கள். இதனை நக்கீர தேவர்,

'' சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி
போர் மிகு பொருந குரிசில்''

'' கோழி யோங்கிய வென்றடு விறற் கொடி,

'' மஞ்ஞையன் புகரில் சேவலங் கொடியன்
[திருமுருகாற்றுப் படை
275 — 276; 38; 210 — 211

என்றும், இளங்கோவடிகள்,

''வண்ண, மணி விசும்பிற் கோனேத்த
மாறட்ட வெள்வேலே''
[சிலப்பதிகாரம்-குன்றக்குரவை

என்றும் குறிக்கின்றனர். நமது சமயஆசாரியப் பெருமக்கள் :—

''சேந்தனை முன் பயந்துலகில் தேவர்கள் தம்
பகை கெடுத்தோன் திகழுமூரர ''

'' தழைமயி - லேறவன் தாதையோதான்'
[ஆளுடைய பிள்ளையார்]

''சமர - சூரபன் மாவைத் தடிந்த வேற்
குமரன் தாதை,'

'கோழிக் கொடியோன்தன் தாதைபோலும்''
'' கடல் சூர் தடிந்திட்ட செட்டியப்பனை''
[ஆளுடைய அரசுகள்]

என்று போற்றி நம்மை ஆற்றுப் படுத்துகின்றனர்.

இது காறும் கந்த புராணத் துள் கண்ட வரலாறுகளை ஏனைய பழந் தமிழ் நூல்கள் ஆங்காங்கே பகரக்கண்டோம், இனி, கச்சியப்பசிவாசாரியார் தாமியற்றிய கந்த புராணத்துள் காணப் படாத செய்திகளும் பண்டைத் தமிழ் நூல்களுள் கூறப் படுவதைக் காண்போம்

விலங்குவடிவாகிய "சூரன் என்னும் அசுரனும், மனிதவடிவாகிய" பதுமன்'' என்னும் அசுரனும் ஆகிய இருவரும் ஓர் உருவாகிச் சூரபதுமன் என்னும் பெயரில் ஒரு பெரிய உடலைப் பெற்றார்கள். அவ்வோரே உடலில் அவ்விரு உயிர்களும் வாழ்ந்தன. முருகப் பெருமான் அவ்வோரே பெரிய உடம்பு அற்று விழும்படியும் சூரபதுமன் அஞ்சும் படியும் வேற்படை கொண்டு நெருங்கித் தாக்கினான். இவ்வரலாறு கச்சியப்பசிவாசாரியாரால் கூறப் பெற வில்லை. இதனை நக்கீர தேவ நாயனார்,

''இருபே ருருவின் ஒருபே ரியாக்கை
அறுவேறு வகையி னஞ்சுவர மண்டி''

[திருமுருகாற்றுப் படை 57 – 58]

என்று பாடுகின்றார்.

கடலின் நடுவே சூரபதுமன் வேற்றுருவங் கொண்டு மாமரமாக நின்றான். அவ்வஞ்சத்தை அறிந்த செஞ் சுடர்வேலோன் அவ் வசுரனின் போர்த்திறங் கடந்து அக்கடலின் நடுவில் அலைகளையே அரங்கமாகக் கொண்டு துடி கொட்டி நடன மாடினான் அவுணர்கள் தாங்கள் போர் செய்தற் கெடுத்த படைக்கலங்

களைப்போர்க் காற்ருது களத்திலே போட்டு விட்டு வருந்திஞர்கள். அஞ்ஞான்று முருகவேள் தன் குடையை முன்னே சாய்த்து அதுவே ஒரு முக வெழினியாக நடன மாடிஞன். இவ்விரு நடனங் களும் முறையே துடிக் கூத்து என்றும், குடைக் கூத்து என்றும் பெயர் பெற்றுப் பதிஞேராடலுட் சேர்க்கப் பெற்று மக் களால் பயின்ருடப் பெற்றன. இங்ஙனம் சமர்க்களத்தில் சண்முகப் பெருமான் கூத்தியற்றியதைக் கச்சியப்பசிவாசாரி யார் பாடவில்லை. இவற்றை இளங் கோவடிகள்·

......மாக்கட னடுவ
ணீர்த்திரை யரங்கத்து
நிகர்த்துமுன் னின்ற
சூர்த்திறங் கடந்தோடி ஞடிய துடியும்
படை வீழ்த் தவுணர் பையு ளெய்தக்
குடை வீழ்த் தவர்மு ஞடிய குடையும்''

[சிலப் பதிகாரம் கடலாடு காதை]

என்று இயம்பி யுள்ளார்.

ஆதலின், முருகப் பெருமானின் வரலா றும் அப்பெருமானின் தோற்றத்துக்கு முன்னமேயே தோன்றிய வனும், அவ் விறைவனின் தோற்றத்துக் குக்காரண மான வனு மான சூரபது மனின் வர லாறும் கூறும் கந்த புராணக் காதை மிகப் பழமையானதும் நந் தமிழ் நாட்டிலேயே தோன்றி இந்நாட்டுக்கே தனி உரிமை யானதுமாம் என்க. தமிழ் நாட்டில் இக் கதையைக் கூறும் எண்ணிறந்த பலகாவி யங்கள் முற்காலத்தில் மக்களிடையே பரவி வழங்கின என்றும், கச்சியப்ப சிவா சாரியார் இயற்றிய கந்த புராணம் எனும் பெருங் காவியம் தோன்றிய பின் கண் ணுதற் பெருமான் கற்றைச் சடையி னின்றும் கங்கையாறு இழிந்து பூவுலகு புக்கபின் இவ்வுலகில் உலவிய ஏனைய ஆறுகள் பொலி விழந்தமைபோல அக் காவியங்க ளெல்லாம் சிறப் பொடுங்கிக் காலப் போக்கில் வழக்காறற்றன என்றும் கோடலே பொருந்தும்.

உ

சிவமயம்

மயிலுமயிலுந்துணை

# நகரம் போல்வர் புகரில் குரவர்

அ. கந்தசாமி, பக்தர், குயவன்பேட்டை என்கிற வரகூர்.

## 1. பிரப்பன் வலசைத் தவம்

இஞ்ஞான்று பிரப்பன் வலசையின் கண் திருகோயில மைத்துக் குட நீராட்டு நடை பெறும் நிலத்தே சுவாமிகள் நிட்டையைத் தொடங்கிய நாள் விசய ஆண்டு பங்குனி திங்கள் 5ஆம்நாள் (17-3. 1894 பூர்வபக் கத்து) ஏகாதேசியும் பூசநாளும் கூடிய சனிக் கிழமையாகும்

1. "சொல்லாத சொல் லொன்றைச்
சொல்லா மற்றுன்
சொற் குருவின் சொலினிற் குஞ்
சுகுர்தர் செய்கை
கல்லாத விரண்டுகொள் மாடா யென் போற்
காசினியி னிற்குநரு முண்டோ யாண்டும்
பொல்லாத பவக்கயவர் குருவாய் மூடம்
பொலி மனுடப் பதடியாய்ப் புழுத்த நயா
யெல்லாத பந்தெரியாச் சிதடனுகி
யிருக்குமெனக் கயிலோயுன்
களிப்பெங் கெய்தும்

உ. ஒய்வறு பிறவித் துயர்மன நனவி
லோயுமட் டுளதென லருநா
லாய்வரு மனுட ரறிவர் கொல் லோவன்
னவர்களி லொருவனென் றிடவிங்
நாய்வர விருப்பி னுங்கருத் தழுங்கா
நலத்தினை யேனுமுந் றெழியுஞ்
சேய்வர வினிலஃ தோயுமென் றுயிச்
செனிப்பினுக் கெந் நல முளதோ.

எனச் சுவாமிகள் குமரவேள் பதிற்றுப் பத்தந்தாதி 8-35 ஆம் தூக்குகளில் வேண்டி நின்றுரன்றே. மேற் கூறியவாறு தவம் தொடங்கிய ஆருவது நாள் மன மடங்கித் தேவனைத் தியானித்திருந்தார் 'நீஎழுந்து விடு' என்னுஞ் சொல்தோன்று வதாயிற்று

புனலை மலிந்து நடித்தவர்
வாக்குப் புகனெறியே
சனனமொழிக்கு மதரறி
விக்கு மோர் சாமியெனக்
குணையல திந்த வுலகினர் யாரு
முறைப்பதென்னின்
மனது திருத்தியடையாது
காண்சிகி வாகனனே"

என விண்ணப்பித் திருர்தனர் நம்சுவா மிகள் பிறவியை யொழிக்கும் படியான வுறுதியுபதேசம் எனக்கு இவ்வுலகினரு ரைப்ப தென்றுல் என்மனசு திருப்தியடை யாதன்றே அவ்வுபதேசத்தை நீயே உரைத் தருளல் வேண்டுமென வேண்டி நின்றமை இத்திருப்பாடற் கண் காணப் அதுப்பெற்றவாறு நூலுள் யாண்டுயாண்டு கூறப்படுமோ ஆண்டாண் டறிந்து கோட லறிவுடைமையாம் என்றபடிக்குச் சுவாமி களின் வேண்டு கோட்கிணங்கிஉபதேசம் செய்யவே இளைஞர் இரண்டு முனிவர்க ளோடு ஏழாவது நாளிரவில் தோன்றினர் பார்க்க வரவில்லையாம் என்பது உணரற் பாற்று. சுவாமிகள் தவம் புரிந்திருந்த ஞான்று எட்டி மரத்தால் செய்த யோக தண்டம் ஒன்று வைத்திருந்தா ரென்பது தெரிகிறது.

என்றும் இளையோனுகிய அக்குகன் நம் சுவாமிகளின் கண் களிக்க வந்த ஞான்று சிரசு முண்டிதமாயும் அறையில் ஒள்ளிய கௌபீனம் பிரகாசிக்கவும் இருந்தனன். இஃது

முண்டமுண் டனமுமொண் கீளுடையு
மிலக வென்
முனவந்து சொற்ற வொரு சொன்
முடிவை நன்குய்த்துணர மூலநாடிச் செயலை
முன்னிடுத லல்லாததாய்
துண்ட நுதி முதலாய காட்சிகளோ டக்கரஞ்
சொல்லு நெறி யல்லாததாய்
சுகுர்தகன் மம்விரத மூர்த்தி தலநீர்நிலைக
டொழரேய்த லில்லாததாய்
எண்டிசையு மப்பாலு
நிறையுமொரு நீர்மையா

யேசிலா மோன முத்ரை
என்றகை காட்டான தகரா லயப்பே
ரிராசியச் சுக மார்க்கமாய்க்
கண்டேனவ் வண கிலாப் பேதைக்கு கின்ன
கலிதோயு மார்க்க முறுமோ [ருட்
கரிசறவி ளங்கவரு சின்மயா னந்தமே
கருணைக் குகப் பிரமமே

எனத் திருப்பாவினுள் (கருணைக் குகப் பிரமம் -அ- ஆம்பாவால்) அறியலாகுமே. அவ்வண்ணம் வெளிப்பட்ட சிவகுமாரன் "அந் நின்மலப் பொருளையுனது நெஞ்சத்தே தங்கும்படி யொரு நிலைமை செய்தாயோ" என்று வினவுபதாகச் சுவாமிகள் திருவாய் மலர்ந்துள்ளார்

"தொட்டதே பற்றுக கிற்குமன மாய்த்தருட்
டுவெளியை யெவ்விதத்துஞ்
சொந்தப் படுத்க வென வீரமுற் றேயொரு
சுரததேத னித்திருந்து
கிட்டைசா தித்தகா ணற்குகிலை காட்டுமா
கிறை கருணை மேனி கொண்டங்
கின்மலப் பொருளையுன் னெஞ்சினிற் றங்க
கிலைமைசெய்தாய் கொலென்று [வொரு
சு டிவினவிப் போய பின்னாடி யேனச்
சுரத்திடை யிருந்துன்கனே
சுகமௌன நாட்டமாகின் றதுபொ ருமலோர்
சூழ்ச்சி கொண் டெழவிதித்தாய்
பட்டபா டெல்லாம்வி யர்த்தமா மோவெங்கள்
பக்ஷமுள பரதெய்வமே
பகனிசா வின்னடுவி லவிர்குகப் பிரமமே
பரிபூர ஞானந்தமே.

என அத்திருப்பாவின் கண்ணேயே வருஉம் பாடலை நோக்குக. இவ்வாறு இறைவன் வினய அவ்வொரு மொழிப் பயனில் படரும் நெறியிலேயே சுவாமிகள் கருத்தூன்றி நின்றுரென்பது

"மடமோட்டுங் கருணைதனை மறவேனெஞ் சுளவளவு மாற்றுர் நூலைத், தொடமாட்டே னவருரைக்கு முரைகேளே னனியாயத் தொடக்கர் கோட்குட், படமாட்டே னருள் சுரந்து வினயவொரு மொழிப்பயனிற் படரு நோக்கம், விடமாட்டே னினிதளித்தி யெனதுகுகப் பிரமமென விளங்கெம் மானே" எனவரும் திருப்பாடலினு முணரப் படும். இவ்வாறு சுவாமிகள் பிரப்பன் வலசையில் குமரப்பெருமானிடத்து அருளுபதேசம் பெற்றவிவரத்தை, இரண்டாவது மண்டலம், 'முதற் காண்டத்துப் பிரப்பன் வலசைத் 'திருப் பதிகத்தே'

"வள்ளன் முருகையர் நடுநிற்கு நிலையைச் சொலிமறைந்தவிடமும்" எனவும் இரண்டாவது மண்டலம், இரண்டாம் காண்டத்து ஆசிரிய வியலில் "பஞ்சபுலன்வழியே போந்து பாழ்படு மனமதை நுதனடுவில்-துஞ்சிட வைத்தது துஞ்சாது சொக்கிடு நோமையை எற்கன்ஞன்-அஞ்சயவங்குலி யாவணமா வருளிய நீ" யெனவும், ஆருவது மண்டலம், டல திறப்பொருட் காண்டத்து (பெருவேண்டு கோளில்) "பாடாடுகள் பல்குந் திரு வளமேவு பிரப்பைக் - காடாரிடமதி ஞனடி கந்தும் பொழு தெதுவும்-ஊடாடலிலாமே யொரு மொழியோதி மறைந்த-வாடர்முக முனியே யெனைமறவேல் எனைமறவேல்" எனவும் அருளியுள்ளமை யோர்க.

மேற்காட்டிய 'முண்ட முண்டனமும்,' என்ற பாடற்கண் "ஏசிலாமோன முத்ரை என்றகை காட்டான தகராலயப் பேரிராசியச் சுகமார்க்க" மென்றதும் "நிட்டைநிமித்தம தாகமு னுற்றவென் னீர்மையெல்லாநமுவ - நட்டந டுத்தக ராலய மானதிஞட்டமி டும்படிநீ" - என ஐந்தாவது மண்டலத்து (ப்பராபரம்) இயம்பியதுவுமே தகராலய ரகசிய மூலமும் அதன் உரையே சதானந்தசாகரமெனும் பெயருடன் மூன்ருவது மண்டலத்தைச் சார்ந்ததாய் விளங்குகின்றது. "இந்நூலுட் கூறட்பட்ட தகரவித்தையினையாம் பிரப்பை யென்னு மொருசாராகிய காட்டின் கணகழப்பட்ட குழிக்கட் பங்குனி திங்களிலுற்ற ஒரு சனிவாரம் தொடக்கமாக 35 நாள்காறும் தனி நிட்டை சாதித்திருந்த ஞான்று கௌபீன தாரியாய் வெளிப்பட்ட இறைவன் எனக்கொரு மொழியிலுணர்த்தியருளி மறைந்தன னென்பது எம்முடைய பாடல்களிற் பல செய்யுட் களகத்தும் வந்திருப்பினும், கககக. – திருப்பாட்டுக்களடங்கியுள்ள திருப்பா வென்னு நூலுட் பராபரமென்னும் பதிகத்தில் வருவது படித்தறிதல் நெறி யுடைத்தாகும்" என்றும்.

"யாம் துறவற நிலைபுக்க வாண்டிற் கடுத்துறு மாண்டிற்றுனே ஸ்ரீ சிதம்பர வெல்லைப் பாட்டிலுள்ள குயவன் பேட்டையிலே அளியார்ந்த செல்வச் சிரஞ்சீவி இராஜா முத்துகிருஷ்ண நாயுடு

வின் நல்லுபசரிப்பினை யேற்றுச் சில திங்களாக வாசஞ் செய்து வருனொன்று திருவருட் சகாயத்தினைக் கொண்டு யாம் செய்த நூல்கணுன்கு. அவை பரிபூரணுனந்த போதம், தகராலய ரகசியம், கந்தரொலியலந்தாதி, குகப்பிரமவருட்பத்து என்பன. அக்கால மெக்கால மென்றறை யுருவண்ண மீற்றுச் செய்யுட்கண்ணேயே அது குறிக்கப் பட்டுள்ளது.'' என்றும் சுவாமிகளின் நூல்களினே வருதலோர்க. அஞ்ஞான்று காறும் ஒன்றரை வருடம் மௌனமாயிருந்த ஸ்ரீமத் சுவாமிகள் அச்சாத்திரத்தின் பொருளை யறிவானவாவிய மெய்யன்பர்கட்கப் பொருள் செவியறிவுறுத்தற் பொருட்டன்றே தமது மௌனத்தை வரைந்து பரங்கரை நாவான் மொழிந்தருளினர். அங்ஙனங் கேட்டாரனைவருங் கழிபேருவகை கூர்ந்தனர்.

இந்நூற்கோர் முன்னுரை வரைந்த சைவப் பெரியார். திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள் கூறுவதாவது "இந் நூலுட் சதானந்த சாகரம் வாரியிறைக்கும் ஞான முத்தங்களுள் ஒன்றைப் பெறுதலும் பண்டு அருமையாயிருந்த தென்றுங் கணிக்கவும் இடமுண்டு. சில நூல்கள் சுவை பார்த்தற்குரியன; சில விழுங்கத் தக்கன; மற்றுஞ் சில மென்று தின்று சீரணஞ்செய்து கொள்ளற் கேற்புடையன' என்றூர் பேகன். நம்முடைய ஆசிரியர் போதமும் இரகசியமும் ஈற்றிற் கூறியபடி கசடறக் கற்க வேண்டிய உண்மை நூல்களே'' என்பதே.

இவ்வுரையோ மேலான ஆராய்ச்சிகளைத் தழுவியமாணப் பெரிதாகும். இந்நூலில் மனசனுகிய சீடனுக்கு அறிஞராகிய ஞானசாரியார் வேதத்திலுள்ள தகரவித்தையைக் கடாவிடைகளாலுபதேசக் கிரமமாகப் போதிப் பதை விவரமாய்க் காணலாம். பிண்டதகர வித்தையியல் அண்டதகரவித்தையியல், குகேசனுடைய நிட்கள, சகளவுருவ விவரம், சுப்பிரமணிய காயத்திரி மந்திர விவரம் மற்றும் பல தெரிவிக்கப்பட்டுள. அதன் பெருமை எம்மனோரா லெடுத்துரைக்க ஏலாதவொன்றேயாகும்.

நிற்க, சுவாமிகள் பிரப்பன் வலசைக் கண் இவ்வாறு உபதேசம் பெற்று 35-நாள் நிட்டையிலிருந்து நிகழ்ந்த கட்டளையின்படி எழுந்து வெளிப்பட்ட தினம் சய ஆண்டு சித்திரைத் திங்கள் 9-ஆம் நாள் (20 — 4 — 1894) சுக்கிரவாரம், பௌர்ணமி திதி, சுவாதி நட்சத்திரம் கூடிய நன்னுளே யாகும். இந்நாளை சித்திரைப் பௌர்ணமி யென்பர். இந்நாளை உத்தேசித்தே சென்னை, திருவல்லிக்கேணிக் கடற்கரை வெண்மணற் பரப்பில் வேற் பெருமானுக்குச் சிற்றுண்டிபடைத்துண்ணல் என்ற பெயரோடு விழாஏற்படுத்தி அன்பர் களுடைய நாவிற்குச்சிற்றுண்டிச் சுவையும் பரத்துவப்பிரசங்கத்தின் மூலம் செவிக்குப் பேருண்டிச் சுவையுமூட்டித் தாமும் உள்ளும் புறமும் உவந்தார்கள் என்பது செவி வழிக் கேட்ட செய்தியாம்

## 2. திருப்பா பாடல்கள் மறைதலும் கிடைத்தலும்

சுவாமிகள் குயவன் பேட்டையிலெழுந்தருளியிருந்த ஞான்று ஐந்தாவது மண்டலமாகிய திருப்பாவில் 'பாராதியைம்பூத' மென்பது முதலாக யெழு அக்கரியுழி யென்ற 15 ஆம் பாடல் வரையிலும் இயற்றி யிருந்தார். அக்காலை அதாவது துன்முகி வருடத்து மாசி மாதம் கிபி 1897 பன்னிரு மகா மகப் புண்ணிய காலமானதால் குயவன் பேட்டை இராஜா முத்துக் கிருஷ்ண நாயுடு, திருவேட்களம் முத்துக் குமாரசாமி, வரகூர் ஆறுமுக பக்தர் ஆகிய மூவரும் உடன் வரச் சுவாமிகள் குடந்தைக்குச் சென்றூர்கள்

திருப்பாவிலருளிய ருஅ பாடற் பிரதியை விபூதிப்பை உருத்திராக்க மணிக் கண்டிகை வெள்ளாடை முதலியவைகளுடன் பூட்டுப் போன்ற கித்தான் பைக்குள் வைத்தெடுத்துச் சென்றூர். சென்று குடந்தையில் முத்துகிருஷ்ண நாயுடுவுக்குத் தெரிந்த ஒரு நண்பர் வீட்டில் அன்றிரவு தங்கினுர். மறுநாட்காலை இப்பையுடன் மகா மகப் புண்ணிய குளத்து நீராடி அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டு தாம் தங்கியிருந்த வீடு நோக்கி மீண்டு வந்தனர். வரும் வழியில் நெருக்கமுள்ள ஒருசந்தில் வந்தபோது திருடர்கள் மக்களின் ஆபரணங்களைப் பறித்துக் கொள்ளும்

பொருட்டு கூட்டமாக இரு புறத்தும் வந்து நெருங்கியகாலை சுவாமிகள் கீழே விழுந்து ஜனங்கள் மேலேறி துவைக்கும் ஆபத்தான நிலையில் முருகா என உரக்க சத்தமிட்டார். அது கேட்டுக் கூட்டம் விலகிய போது எழுந்து மறுபடியும் முருகா என்று அழைத்தார். இந்நிகழ்ச்சியால் நெருக்கங் கலைந்து சுவாமிகளும் உடன் சென்றவர்களும் இன்னலகன்று உயிர் தப்பினர்கள். இதனைச் சுவாமிகள்,

"—குடந்தை யிற்சிகா
துற்ற மன்பதைக் குண்ணெருங்கிநா
னுயிர்த்த துன்செய லெனற்கு மென்றலை"

என்று இடையருது நிற்க விழைதலில் அருளியுள்ளார்கள.

பின்னர் உடன் வந்தவர்களை காணுமையால்சுவாமிகள் தனித்து வீடுவந்து சேர்ந்தார். பின் முத்துகிருஷ்ண நாயுடுவும் முத்துக் குமார சாமியும கும்பலில் கட்டிய வேட்டியை யுமிழந்து கோவணக் கோலத்தோடே தனித் தனியே வந்தனர். இறுதியில் வந்த ஆறுமுக பக்தர் கட்டிய வேட்டியோடு சுவாமிகளின் பையையும் கொண்டுவந்தார். அவரைநோக்கி சுவாமிகள் யான் தப்பிவந்தேன். இருவரும் உடையிழந்துவந்தார்கள். ஆறுமுகப் உன்னிடம் பையிருந்ததால் எவ்விதம கொண்டு வந்தாய்'என்றபோது அவர் 'சுவாமி யான் இப்பையை மார்பிற் சேர்த்து ஒரு வீட்டின் சுவற்றில் சுவர் முகமாக அணைத்து நின்றேன்' என்றுவிடையிறுத்தார். "சரி" என்று கூறிவிட்டு வீட்டுக்குடையாரை கூவிப் பையைக் கொண்டு போய் உள்ளே வைக்கும்படி சுவாமிகள் கூறினர். அவர் கொண்டு போய் வைக்கும் போது அங்கு இதே மாதிரிப் பை யொன்றிருந்ததைக் கவனியாமல் இதையும் அத்துடன் வைத்து விட்டார். மறு நாள், போம் பொழுது முன்னமே பை வைத்திருந்தவர்கள் தவறுதலாகச் சுவாமிகள் பையை எடுத்துக்கொண்டு போய் வீடு சேர்ந்தார்கள். சுவாமிகள் புறப்படும் போது இருந்த பையைத் தம்முடையது என வெண்ணி எடுத்து வந்து விட்டார்.

ஊர் எய்திய சுவாமிகள் பிரதியை எடுக்கப் பையைத் திறந்த போது அதில் குங்குமச் சிமிழ், சீப்பு, கண்ணுடி, கவரிமான் மயிர், இரவிக்கை, சேலை முதலிய விருத்தலைக் காணுஉ, அருவருப் புற்றுச் சினந்து "பையை வைத்திருந்த ஆறுமுகம்தான் எங்கேயோ தவற விட்டிருக்கலாம். அவனைக் கொண்டு வருக" என்று நாயுடுவை யனுப்பினர். இதைக் கேள்விப்பட்ட அவர் நடுநடுங்கி வராமலிருந்து விட்டார். வராமையைக் கண்டு சந்தேகங் கொண்டு சுவாமிகள் சினமுங் கொண்டார். ஆனதால் அன்று எதுவு முண்ணுமல் தொலைந்து போன 15 பாடல்களையும் மீட்டு மெழுதத் தொடங்கினர்.

சுவாமிகள் பையைக் கொண்டு போனவர்கள் திறந்து பார்த்து "அடடா! இஃதென்னை! சுவாமிகள் வந்திருந்தாரே. அவரது பையையல்லவா எடுத்து வந்து விட்டோம் என்று பதறி உடனே அப்பையைக் குடந்தையில் சுவாமிகள் தங்கியிருந்த வீட்டுக்குடையாரிடம் ஆள் மூலம் அனுப்பிவைத்தார்கள். அதைக் கண்ட குடந்தையன்பர் இஃதென்ன தவறுதல்' என்று இரயிலேறி மறு நாட் காலையில் குயவன் பேட்டை எய்திச் சுவாமிகளை யணுகிப் பணிந்து "சுவாமி! இக்குற்றம் நான் அலட்சியமாயிருந்ததனுல் விளைந்ததே! மன்னித் தருள்க' என்று குறையிரந்து வருந்தி நின்ருர். சுவாமிகள் யாவையும் உணர்ந்து 'ஆறுமுகத்திடம் விவரம் சொல்லி அழைத்து வருக " என்றேவினர். ஆறுமுகம் வரலும் 'இரு' வெனவமர்த்தி உன்மீது குற்றமில்லை. உன்மீதுயான் கோபித்து உன்மனம் அஞ்சி நடுங்கும் படிச்செய்ய இறைவனுள்ள மிருந்தது போலும்' எனத் தேற்றி யான் மறு படியும் 'பாராதி' முதல் 'அக்கநெரி' வரை பாடல்கள் எழுதியுள்ளேனே! இந்தா! இதைநீ (வழக்கம் போல்) படித்துச் சொல். இரண்டையும் சரிபார் என்ருர். ஆறுமுகப் பத்தரும் சரிபார்த்து, "சரியாகவே யிருக்கிறது. வித்தியாசமில்லை" என்ருராம்.

"வெகுசனத் தொறுவொன்று சேரநன் மாமக
விழாவங் குடந்தை — யின்கண்
வியப்பா நடக்கவருள்
செய்தெனையு மாண்டுற
விதித்து நான் மீளு மமையந்

தகுதிசா லித்திருப் பாவெனும் புத்தகந்
தனின் முதற் செய்யு ளெனவே
சாற்று பாராதிதொட் டக்க நெறி வென்றேழு
தனிப் பாடல் வரையயும் பதும்
மிகுமெட்டு முடையவொரு பிரதியையு னன்
விலோசனங் கட்குமறைவாய் [பினர்
வேறொருவர் கைக்கொள வமைத்தியிங னேயு
மேதைக் கருத்தென் கொலோ [னது
சுகுணவார் முதல்வவென் மனதுறுவல்
சொல்லியருள் புரிய வேண்டுங் [கூறாது
துங்கபரி பூரணவகண்டதத் துவமான சுப்பி
ரமணியப் பிரமமே

என்று அத்திருப்பாவின் 'அக்கநெறி' பாடலின் அடுத்த பாடலி லேயே யருளி யிருப்பது கொண்டும் இச்சரித்திரத்தை யறியலாமே! இவ்வரலாறு என் தந்தை யார் எனக்குரைத்ததே யாகும்.

## ரு. மயூர வாகன சேவனம்

செவ்வேட் பரமனாகிய அறுமுகச் சிவன் — ஐர் முகச் சிவன் பாற் பெற்றுச் சூரபன் மனால் தேவர் கட்குற்ற இன்னல கற்றி யன்பர் கட்கவ்வவ்வமயங்களில் வேண்டினர் வேண்டியாங் கருணைப் பாலிக் கும் பொருட்டளவிலாத் தேசோமயமாய்த் தமது திருக் கரத்திற்றுங்கியிரா நின்ற படையரசாகிய (முச்சத்தியு மொன்றாய்ப் பொருந்திய) வேலாயுதத்தை — ஒரு குதிரை பூட்டிய வண்டியின் சக்கரமேறி முறிவுண்ட நமது சுவாமிகளின் கணைக் காலிற் பொருந்தும்படி கருணை செய்தவள விலே நமது சுவாமிகள் முறிவுண்ட என்பு கூடி நடை கொண்டுலாவி கந்தன் கருணையே யென மீளிர்ந்தார்.

கால் குணம் பெறும் பொருட்டுச் சென்னை பெரிய மருத்து வச்சாலையில் மன்ரோவார்டில் பதினேரா மிலக்க முடைப் படுக்கையில் தங்கியிருந்தார் நம் குரு. பதினேராம் நாளிரவில் மாகவெளி யில் முருகக் கடவுள் காட்டியருளிய காட் சியினையே நம் சுவாமிகள் பேருவகை யோடு சென்னையில் மயூரவாகன சேவன விழா வெனக் கொண்டாடி வந்தார். அவ் விழாவில் வீதியிலுலாவிவரும் விருது களில் முதன்மையுடை வச்சிராயுதத்தில் மாண்பார் மந்திர வக்கரங்க ளெழுதியுள் ளார். அதன்விவரம் அருமையதே. யாவருங் கவனித் தறிந்து கொளல் நலம் பயக்கும். ஐயமின்று.

இவ் விழா சுவாமிகள் தங்கியிருந்த சென்னை நம்புலையர் தெருவிலும் சுவாமி களமர்ந்து சூக்கும நிலையி லன்பர்கட் கருட்பாலிக்கும் திருவான்மியூர் (மயூர புரம்) எனுமிடத்திலும் நடைபெறுவதோடு "எம்முடையதொடர் புடையாரிருக்குமிடங் களிலும் இவ்விழா நடத்தலாம்" என்ற வருண் மொழி பிடித்தே விருதுகளை ஏற் படுத்தி மந்திர மெழுதிப் பல வூர்களிலும் இவ் விழா வெடுத்துயர் வுறுகின்றார்கள். செய்யு முறைமை சுவாமிகளது மூன்றாஞ் செவியறிவுறூ உவிற் காண்க.

"ஓரெழுத்தி லாறெழுத்தை யோம னூற்பெற்
றேதருண கிரிப்பெயரை
யொவ்வோர் பத்தின்
நாருடைப்பா விற்றிலிட்டந்
நாதன் சொற்கு
நாடொருவத்து வைக் குறித்த
நயச்சொற் சூக்மம்
சீரெடுப்பி லுச் சவிசை
செயுளிற் பேரைச்
செப்பிவச்ரா யுதமதி லுஞ் சிறக்கத் தீட்டி
ஊரெடுத்தே யுலவ விழா வதிலுந் தந்த
ஓங்குமர குருதாச வுரவோய் போற்றி

எனும் பாடலு மெண்ணுக.

## ச. சுவாமிகள் தம் அடியவர்கள் பால் வைத் துள பேரருள்

நமது சுவாமிகள் தங்கொள்கையைப் பின் பற்றி யொழுகித் தம்மையே நம்பி யுள்ள அடியவர்களைக் காத்தருளுமாறு தாம் வழி படுஞ் செவ்வேட் பரமனிடம் குறையிரந்து அச்சீடர்களின் நன்மைக் காக ஒருவரமும் பெற்றுள்ளார்களே! அவர் குறையிரந்த விவரமாவது:-

"எனைத் தள்ளி னாலுமெனை
நம்பினவர்த் தள்ளேல்
கனைத் தண்டை சிலம் பவரு
கழுகுமலை முருகா
தினைத்தனையு நீங்காத
திருவிலெனை வையாய்
நினைதவர நல்குகந்த
கிரிக்கருணை நிதியே"

எனக் கழுகுமலை பாதி கந்தகிரி பாதி தூக்கில் என்னைத் தள்ளினாலும்

என்னை நம்பினவரைத் தள்ளேல் என்று அருளிச் செய்தமை அடிகளுடையபேரருட் பெற்றியினைப் புலப்படுத்துவதன்றோ? ஆவதேல் நம்பார்க் குறு பயன் யாது கூறலாங் கொல்? உணர் வாருணர்க. மற்றும்,

"அருணை நீள்கிரிப் பெயரின் னரசேயமுத மடப்பிடி நாயக முருகே, கருணை நாடெணை யெந்த வெவ்வளவாய்க் கணிக் குமானுடருளரவ ரவர்க்காம், பொருளை யீதலு முன் கடன் பிறிதென் புகலு வேனடி யவர்க் கெளியாயிவ், வெருவை யூனுயிர்க் காப்பு நின்னது வென் றிங்ஙனம் பியுள் ளேனருணிதியே.

என ஸ்ரீமத் குமாரசுவாமியம் - திருவருட் செயன் ஞாபகம் ய - ஆம் தூக்கினும் வேண்டுவதுங் கணித்தற் பாலதே. இப்படிப் பட்ட வரமானது தனக்குத்தானே நிகரான தேயாம். வேறெவர்பாலுமின்று. ஐய மின்று.

சுவாமிகளின் மேலானதன்மைகளைப் பின் பற்றி நடக்கும் அன்பர்களைக் காத் தருளுமாறு பெற்றவரமாவது :-

"எனை நம்பா ரெனதுகட வுளையு நம்பார்
  எனதுகட வுளைநம்பா ரெனையு நம்பார்
எனது நூனம் பாரிருவர் தமையு நம்பார்
  எனது சொற்குப் பொருளறியா
    னெதையுந் தேருன்
எனை நம்பு வாயநீநா னெவனை நம்பி
  யிருக்கின்றே னேவவ னென் றனையே
                  [நம்பி
நினைபவனே டெனையுங்கை விடானேயித்தை
  நீயெழுதிக் கொளென்றுதந்த நிதியே
                  [போற்றி"

என்பது முதலியவைகளை அடியவர் கட் கெழுதிக் கொள்ளும்படி பணித்தருளிய வண்ணம் பாடித் தோத்திரித்தனர் என்பதாம். சுவாமிகளைக் கண்டு தரிசித்தாசி பெறவும் ஸ்ரீகந்தர் சஷ்டி மாவிரத பூசை, மயூரவாகன சேவன விழா முதலிய விழாக் கட்கும் பலவூரன் பர்கள் வந்து ஒன்று சேர் வார்கள். ஒவ்வொருவருடைய தேர்ச்சியினை மற்றவர் அறியாதிருப்பர். அறிந்து நட்புடன் பழகுமாறு சுட்டி "இன்னுனிடம் யோகத்தைப் பற்றி விசாரித் தறிந்து கொள்ளுங்கள். இன்னுனைப் பஞ்சாமிருத வண்ணத்தைப் பாடும் படி செய்து கேளுங்கள். இன்னுனைக் கொண்டு திருவலங் கற்றிரட்டுப் பண்களையும், யாழ்முறி என்பதையும் பாடும் படி செய்து கேளுங்கள் என்பன முதலிய கூறி நட்பு பூணச் செய் வாரென்பது பலரு மறிந்த விடயமே.

"உலகினி லுளபஃ றெழில் வழி யேயு
  முயரதி சயமனைத் தினுக்கும்
பலமலி குருவின் வழிவரு மமல
  பரமவித் தைபெரி தெனு வோர்
நலமுளர் குருவின் வழியதைக் கொளவே
  நவையறு வினைபல புரிவார்
தலமிசை யறியா ரெளிதென நினைவார்
  தமியனுக் கருள் சிவ குருவே

என்றருளிய கருத்தை யுள்ளூன்றி மனத்திற் பொருந்த வகலாதுவைத்து நடந்தய்ந்து இகபர சுகானுபவங்களை எய்தி யின்புறுவோமாக. சுபம்

சடநிழல் போல்வா ரிடர்தபு சீடர்

உ

சிவமயம்.

# “சோதி”



**வித்துவான். ந. சீனிவாசன்,**

பண்டிதர், டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூலகம், சென்னை-41

**சோதி! சோதி!** ஆண்டவனுடைய உருவமே சோதி. “திருவையாறகலாத செம்பொற் சோதி”; “அலகிற் சோதியன் அம்பலத் தாடுவான்”; “செகத்திற் சோதிப் பெருமாளே”; “பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பு”; “நிர்த்த ஜெக ஜோதிப் பெருமாளே”; முதலிய சொற்களால் ஆண்டவனை அழைத்தனர், துதித்தனர்’ வணங்கினர் ஞானிகள்.

சிவபெருமான் திருவுருவமே தீ. உருவம் மட்டிலுமா? இல்லை. சிரிப்பும் தீ. சிரிப்பு மட்டிலுமா? கண்ணும் தீ. கண்மட்டிலுமா? கையிலும் தீ. என்கிருர் கச்சியப்ப ஸ்வாமிகள். ‘கையும் நகையும் கதிரார் விழியும் மெய்யும் தணலாம்” (கந்த புராணம்) இந்த சோதி என்ற சொல்லுக்குத் தமிழகராதியில் ஒளி, கிரணம், தீபம், தீ, சூரியன், நட்சத்திரம், கடவுள், சிவன், அருகன், கற்பூரத்தீபம், சோதிலிங்கம், ஞானம், பூநாகம் எனப் பல பெயர்கள் உண்டு.

இறைவன் எங்கு இருப்பான்? குறிப்பிட முடியுமா? எங்கும் இருப்பான். எப்படி? அங்கிங்கெனுதபடி யெங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி இருக்கிருன் இறைவன். அவனில்லா இடமில்லை. இதைப் போலவே சோதியானது என்றும் உள்ள தாயும் அழிவற்ற தாயும், எவ்விடத்திலும் உள்ள தாயும், எப்பொருளிடத்தும், எத்தன்மையிடத்தும், இருக்கின்றது. இங்கிருக்கிறது இங்கில்லையென்று கூறமுடியுமா? அவ்வாறு கூறமுடியாததாயும்உள்ளது இந்தச்சோதி.

அண்டத்தில் மட்டிலுமா சோதியுண்டு பிண்டத்திலும் உண்டு. எது? மூலாக்கினி (ஜாடராக்கினி.) இது அணைந்து விட்டால் அவ்வளவுதான். நம் கதையும் முடிந்து போயிற்று. உள்ளே அணைந்தால் அது தங்கியிருந்த அந்த உடலுக்கே மூட்டுவார்கள். எதை? தீயை. ஞானிகள் இந்த மூலாக்கினியின் தன்மையால் தான், பூரண, ரேசக, கும்பகத்தால் பிரான வாயுவை உள்ளடக்கி இந்த மூலாக்கினியைக் கொழுந்துவிட்டு எரியச் செய்து உறங்குகின்ற குண்டலினி சக்தியைத் தட்டியெழுப்பி சுழு முனை நாடியின் வழியாக மேலே ஓடச் செய்து இறைவனைக் காண்பர் என்று யோகநூல்கள் கூறுகின்றன.

இறைவன் செய்கின்ற ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளுதல், என்ற ஐந்தொழில்களையும் இச் சோதியும் செய்கின்றது. எப்படியெனில்,

தலைவன், தலைவி இருவரின் புணர்ச்சிக் காலத்தில் இருவரின் உடல் நிலைகளிலும் தட்ப வெப்பங்கள் ஒரே சீரான நிலையிலிருக்கும் போது கரு உண்டாகிறது. இதைப் போலவே பல்லாயிரக் கணக்கான உயிரினங்கட்கும் என்று அறிஞர்கள் கூறுவார்கள். ஆகவே ஆக்கல் தொழிலுக்கு அக்கினி அவசியமாகிறது.

உயிர்கள் வாழ்வதற்கு இன்றியமையாத பொருள் உணவுச் சத்து. இச் சத்தை உணவுப் பொருள்களால் அடைகிருேம். இந்த உணவுப் பொருள்களை பச்சையாக உண்ண முடியுமா? முடியாது. ஆகையால் தீயினுல் வேகவைத்துப் பக்குவம் செய்து உண்கிருேம். அத்தோடு மட்டிலுமல்லாமல் உண்ட உணவையும் வயிற்றிலுள்ள அக்கினி

(ஜாடராக்கினி.) மீண்டும் வேகவைத்துப் பக்குவ நிலையையடைவித்து உணவுச் சத்தாக மாற்றி இரத்தமாக மாற்றுகிறது. இந்த இரத்தத்தையும் ஓட்டுவிக்க அக்கினியே (வெப்பமே) தேவையாக உள்ளது. இந்த வெப்பம் மனிதனுக்கு 98·4 டிகிரிக்குக் குறையாமல் இருந்தால் தான் நல்ல நிலையில் வாழ முடியும். உயர்ந்தாலோ அல்லது தாழ்ந்தாலோ வாழ முடியாது என்பது மருத்துவம் கண்ட உண்மை. ஆதலால் காத்தல் தொழிலை அக்கினி புரிகின்றது.

அழித்தல் தொழிலைப் பற்றிக் கூறவே தேவையில்லை எப்போது உள்ளே எரிகிற தீ(மூலாக்கினி) அணைகிறதோ அப்போது தீ குடியிருந்த உடலையே தீ மூட்டி விடுகிறார்கள். சுடுகாட்டிற்குப் போகும்போது நமக்கு முன்னே போவதும் இந்தத் தீ தான். அப்போதும் இந்தத் தீ நம்மை விடாது நம் முன்னே செல்கிறது. அதுவும் நம்முடைய பிள்ளைகளே அந்தத் தீயைச் சுமந்து நமக்குமுன் செல்கின்றனர். ஆதலால் அழித்தல் தொழிலும் நன்கு விளங்குகிறது பிண்டத்தை அழிக்கப் பையன் கையில் தீ. அண்டத்தை அழிக்க ஐயன் கையில் தீ. இதுவே ஊழித்தீயாக உள்ளது.

மறைத்தல் தொழிலில் ஆண்டவன் மாயையைக் கொண்டு மறைக்கின்றான். சோதி தன்னுடைய பேரொளியினாலேயே மறைக்கின்றது உதாரணமாக திடீரென்று பேரொளியைக் கண்டு விட்டு ஏதேனும் அருகிலுள்ள பொருள்களையோ உருவங்களையோ பார்ப்போமாகில் அது நம் கண்ணுக்கு உடன் புலப்படாது மறைந்து விடும். சூரியனையே ஐந்து நிமிடநேரம் நமது கண்களால் கண்டு விட்டு நமது செயல்களை உடனே செய்ய இயலுமா? இயலாது. கண்கள் பேரொளியைக் கண்டபின் சிறிது தாமதித்து ஒரு நிலையேற்பட்ட பின்புதான் செயல்படும். இங்கும் சோதி மறைத்தல் தொழிலைச் செய்கின்றது.

அருள் தொழிலில் சோதியின் தன்மைகளைக் கூறத்தேவையே இல்லை. சோதியின் அருள் தொழிலாலேயே நாம் உயிர் வாழ்கிறோம். அதோடும் மட்டுமா? கருணையினால் கதிரவன் தன்னுடைய தீக்கிரணங்களால் -(கதிரவனும் ஓர் தீப்பிழம்பல்லவா) கடல் நீரை -(உப்பு நீரைமாற்றி) குடி நீராகச் செய்து மழையாகப் பொழியச் செய்து, எல்லா உயிரினங்களையும் வாழச் செய்கின்றான். இதிலிருந்தும், ஆண்டவன் புரிகின்ற ஐந் தொழிலையும் இச் சோதியே செய்கின்றது என்பது தெளிவாகின்றது.

மேலும், ஆண்டவனைப் பற்றினால் அவன் நம்மைத் தன்மயமாக்கிக் கொள்வான். இதுவே அத்துவிதம். தீயும் அப்படியே தன்மயமாக்கிக் கொள்ளும் ஆற்றல் பெற்றது. இத் தீயை அள்ளிவிட்டு இது இன்னின்ன பொருள்களின் கூட்டுப் பொருள் என்று திட்டமாகக் கூறுகிறவர்கள், அறிந்தவர்கள் மிகக் குறைவு. இரசாயன சாத்திரப்படி இதனை ஆராய்ந்தால் இவ்வுலகிலிருக்கும் உஷ்ணம், வெளிச்சம், காந்தம், மின்சாரம் என்கின்ற நான்கு சூக்கும பூதியங்கள் மற்ற பொருட்களைத் தன்மயமாக்கிக் கொள்ளும் வலிமை பெற்றுள்ளதாம். இதிலிருந்து தீயின் சத்து எல்லாப் பொருள்களிலும் அடங்கியுள்ளது எனத்தெரிகிறது. இது கேலோரிக் - (CALORIC) - தாபகரத்தாதுவினாலும், தேய்த்தல், உறைத்தல், முதலிய செய்கைகளினாலும், வெளிப்பட்டு உலகப் பொருட்களை வன்மையாக்கியும், வன்மையான பொருட்களை மென்மையாக்கியும், உதவக்கூடியது என்று இரசாயன சாத்திரங் கூறும்.

இந்தச் சோதி என்பது பிரகாசமுடையது, பேரொளி. அக்கினியை எடுத்துக் கொள்வோம். அக்கினியும் ஓர் சோதி தானே. இடத்திற்குத் தக்கபடி, பெயர் மாறுகிறது. உதாரணமாக, தண்ணீர் மேலிருந்து மழையாகப் பொழியும் போது மழையென்றும், குடத்திலிருக்கும் போது நீர் என்றும், தேங்கியிருக்கும் போதுகுளம் என்றும், ஓடிக்கொண்டிருக்கும் போது நதி என்றும், அலைகளால் சூழப்பொற்று கரைகாணாமலிருக்கும் போது கடல் என்றும், பெயர் பெறுவதைப் போல்சிறிய திரியைப் பற்றிக் கொண்டிருக்கும் போது சுடர் என்றும், அடுப்பில் அதனை

பயன்படுத்தும் போது தணல்-(அக்கினி) என்றும், பாதையைக் காணவும், அலங்காரத்திற்காகவும் கையில் எடுத்துக் கொண்டு செல்லும் போது அதற்குத் தீப்பந்தம்—எனவும், ஒன்றைப் பற்றியெரியும் போது தீ எனவும், மிகுந்த பிரகாசமாயிருக்கும்போது பேரொளி எனவும், உலகையே அழிக்கும் போது ஊழித்தீ எனவும் அதற்கும் அப்பாற் பட்டது சோதி என்றும் பெயர் பெறும்.

அக்கினி எப்படி இருக்கிறது? அதற்கு உருவம் உண்டா? இல்லை. ஆதலால் அது அருவம் அருவமெனில் பார்க்க முடியாமலாயிருக்கிறது? இல்லை. நன்ருகப் பார்க்கிரேம். அதனைப் பார்ப்பதால் அது உருவமாகிறது. ஆனுல் அதனை உருவென்று கூற முடியுமா? முடியாது. ஆகையால் அக்கினி அருவுருவம். இதைப்போலவே சிவனும் அருவாகவும், உருவாகவும் இருக்கிருர். இதைக் காட்டுவதுதானே சிவலிங்கத்தின் தோற்றம்!

அக்கினி ஒன்றைப் பற்றித் தோன்றும். அதைப் போல இறைவனும் ஒன்றைப் பற்றித் தோன்றுவான். எதைப்பற்றித் தோன்றுவான்? அன்பை. இறைவன் அன்பு முறுகியவிடத்துத் தோன்றுவான். அதற்கு உதாரணம் நமது கண்ணப்ப நாயனுர்தான். தத்துவங்கடந்தத் தனிப் பரம் பொருளாகிய சிவபெருமான் ஆன்மாக்களைவிட்டு என்றுமே விலகாமல், அவ்வாத்மாக்களுடன் உறைகின்ற ஆணவம், கன்மம், மாயை என்ற மும் மலங்களின் வலிமையை அடக்கி அவைகட்கு அத்துவிதப் பேரின்பமாகிய சிவ சாயுச்சியத்தை அளித்தற்குச் சிவமாயும் சத்தியாயும், நாத விந்துக்களாகியும் சதாசிவன், மகேசுரன் உருத்திரன் முதலிய அளவிறந்த உருவங்களைக் கொண்டும் ஐந் தொழில்களை யியற்று கின்ருர். எப்படி? ஒரு விளக்கினின்று மற்ெருரு விளக்கும் அதனின்றும் பல விளக்குகளும் தோன்று வதைப் போல இவ் வுண்மையை ஒரு முகச் சுடரும் நான்முகச் சுடரும், ஐம்முகச் சுடரும் உறைகின்ற தீபங்களால் அறியலாம். அப்படி யானுல் ஒன்றிலிருந்து பலவாகப் பிரிப்பதால் மூலப் பொருளின் தன்மை குறையாதா? ஆதிசிவத்திலிருந்து பல உருவங்கள் வெளியாவ தால் அதன் தன்மை குறையாதா? குறையாது, அதிகமாக வே தெய்வத் தன்மை விளங்கும். எங்கனம்? முதலில் ஒருதீபம், பின் அதிலிருந்து மற்றொரு தீபம். அதிலிருந்து வேறொரு தீபம். இப்படியே பல தீபங்கள் தோன்றினுலும் மூலமாக வுள்ள முதல் தீபத்தின் ஒளி குறையுமா? குறையாது. பல தீபங்களின் கூட்டத்திஞல் பிரகாசம் முன்பை விட அதிகரிக்குமே தவிர குறைவு படாது. இதையே

பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணுத்
பூர்ண முதச் யதே.

பூர்ணஸ்ய பூர்ண மாதயா பூர்ண மேவாவ ஸிஷ்
யதே-பிருக தாரணிய கோப நிஷத்து.

என்று கூறுகிறது "அது நிறைந்தது. இதுவும் நிறைந்தது நிறைந்ததி லிருந்து நிறைந்தது தோன்றியது. நிறைந்தலிருந்து நிறைந்ததை யெடுத்தும் நிறைந்ததே எஞ்சி நிற்கின்றது" என்பதே இதன் பொருள்.

ஆகவே இவற்றை அறிந்த நம் முன்ேனோர்கள் தீயினுக்கு நன்றி செலுத்த எண்ணினர். உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் எதனுள்ள டங்குமோ எது இல்லாமல் எதுவுமில்லையோ அதனையே ஆண்டவனுக மதிக்கும் மக்கள் அத் தன்மையை யுடைய சோதி யையும் ஆண்டவனுகவே வழிபடத் தொடங்கினர்கள். இது அக்கினி வழிபாடு. சூரிய வழி பாடு, தீபவழி பாடு என்பதாகத் தோன்றியது. சோதியை வழி படுதல் சோதிச் சுகப் பொருளான இறைவனை வழிபடுதலேயாகும்.

நாம் காணும் சோதிகள் வெறும் ஒளியைக் கொடுக்கும் தீபச் சுடர் எனக் கருதாது இறைவன் திருவுருவமே என வழிபடு வோ மாகில் துன்ப மில்லை, துயர மில்லை. என்றும் இன்பமே பெறுவோம். ஐயமில்லை.

சுபம்

# சமயம் - ஒரு விளக்கம்

அ. முத்துச்சாமி, தமிழாசிரியர், சங்கரன் கோவில்

## 1. சமயம் - பொருள் விளக்கம்

மலர் என்ருல் எத்தனையோ மலர்களிருப்பினும் அவை யற்றைக் குறியாது தாமரையையே குறிக்கும். தேவி என்ருல் எத்தனையோ தேவர்களின் மனைவிகளிருந்து அப்பொருட்குரி யராயிடினும் உமாபிராட்டியாரையேகுறிக்கும். என்னை? ஏனையரைக் குறிக்கு மிடத்து இலக்குமி தேவி, சரசுவதி தேவி யென்றே வழங்குவரேயலாது தேவி யெனுஞ் சிறப்புப் பெயராற் குறியா ராகலானென்க. அது போல சமயம் எனின் வைதிக சுத்தாத்வைத சைவசித்தாந்த சமயத்தையே குறிக்கும். சமயம் என்ற சொல் மதம், கொள்கை, ஒழுக்கம், விரும்பி ஏற்றுக் கொள்வது, தகுதியராக்குவது எனப் பல பொருள் தரும்.

சமயம் என்பது சமை + அம் எனப் பிரியும். சமை யெனும்பகுதி சமைத்தல்; அஃதாவது, உண்பதற் கேற்ற பக்குவம் செய்தல் என்ரும். சமய நெறியி லொழுகுவானை இறைவனை எய்தும் பக்குவ முறச் செய்தல் ஆம். சமயம் என்றற்கு நெறி எனவுங் கொளலாம். நெறி - அஃதாவது சாலைகள் எங்குமே சீராக அமைந்திருக்கு மென எண்ணல் ஆகாது. சில்லிடங்களில் கல், முள், மணல், சேறு, காடு ஆகியவை மண்டிக் கிடக்கும். இவை களைக் கடப் பதற் கேற்ற பாதங்கள் மிருகங் கட்கு உண்டு. அவை நடப்பின் அந்நெறி சீருடைப் பாதையாகாது. மனிதன் நடப்பின் அந்நெறியிலுள்ள புற்கள் கருகி ஒற்றையடிப் பாதையாக மாறும்.

இதனுல் பெறப் படுவது யாது? மனிதனுக்கே பாதை—நெறி - சமயம் உரித்து. மிருகங் கட்கு - மாக்களாயுள்ள மக்களுக்கு - சமயந் தேவையன்று.

## 2. சமயாசாரியன்மார்

ஓர் ஊருக்குச் செல்பவன் பாதை யறிந்து செல்லல் வேண்டும். இன்றேல் அவன் எய்தும் இடம் ஊராக இராது; காடாகவும் இருக்கும், சுடுகாடாகவும் இருக்குமன்றே? ஆகலின் நெறியறியார் நெறியறிந்தார் வாய்க் கேட்டு அதன் படி செல்லின் ஊர்எய்தும்

பரமுத்தி என்னும் ஊர் நாடிச் செல்வார் சமயம் எனும் நெறி பற்றிச் செல்க. அந்நெறி யறிவித்தார் சமயா சாரியன்மார் நால்வரே. பின்னர் அவதரித்த பட்டினத் தடிகள், அருணகிரி நாதப் பெருமான், பாம்பன் சுவாமிகள் — முதலியோர் சமயத் தாபனம் செய்து நம்மை உய்ந்நெறி காட்டியாட் கொண்ட பெருமக்களாவார். தேவதேவனும் மகாதேவனின் மலரடி யெனும் ஊருக்கு வழி காட்டுவது எது?

"நிச்சயமான பாதை காட்டுவது
நிகரிலாச் சைவ சமயமே"

ஆகலின் இச்சைவசமயாசாரியன்மார் பெருமை கணித்துரைக்க ஏவரானியலும்; இயலாதே.

'பூழியர் கோன் வெப் பொழித்த
புகலியர் கோன் கழல் போற்றி
ஆழி மிசை கன் மிதப்பி
லணைந்த பிரானடி போற்றி
வாழி திரு நாவலூர்வன்
றெண்டர் பதம் போற்றி
ஊழிமலி திருவாத
வூரர்திருத் தாள்போற்றி"
ஞான நெறி நனறு காட்டி
நயந்தாண்ட குமர குரு நாத போற்றி

என்று வணங்கலேயன்றி யாம் செய்யத் தக்கது யாதுளது?

## 3. சாத்திர நூல்

சமய ஒழுக்க மிவை யென்று போதிப்பவை சாத்திரங்கள். சைவசமயம் மெய்கண்ட சாத்திரங்களை யுடையது. அவற்றைக் கற்று வல்லராதல் சிறந்ததே. அவை ஆகமங்களின் துணை பற்றி நடப்பன. இறையுண்மையில் நம் உளத்தெழும் ஐயந் திரிபுகளைப் போக்குவனவே.

ஈண்டு ஒன்று கருத்தில் கொள்க.
"சாத்திரங்கள் கடவுளை நிச்சயிக்க
வந்தன, காட்டவந்தன வல்ல.

என்ற ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளின் அருளுரையை நோக்குக. ஆகலின் சாத்திரங் கொண்டு வாதமிடலை யொழித்து சர்ப்பாபரணன் சரணம் பற்று நெறியைப் பற்றுக.

மெய்கண்டசாத்திரங்களுள் தலையாயது சிவஞான போதம். இதற்கோர் பேருரை (மாபாடியம்,)வகுத்தார் மாதவச் சிவஞானயோகிகள். அப்பெரியாரும் சிற்சில விடங்களில் பொருள் காண் பதில் தவறியுள்ளார். நம் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் தமதுபரிபூரணானந்த போதம், தகராலயரகசியம், திருப்பா முதலிய நூல்களில் சிவஞான முனிவர் தவறிய விடங்கட்குரிய உண்மைப் பொருளை யுணர்த்தியருளியுள்ளார். அன்பர்கள் படித்துப் பயன் பெறுவார்களாக.

வாழ்க சைவம் வளர்க பாம்பனூர் திருப்புகழ்.

உ

## வாழ்த்துரை

ஸ்ரீமத் - பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் சைவ வானில் என்றும் மங்காது நின்று நமக்கு வழிகாட்டி ஒளிரும் வடமீன். அறுமுகச்சிவனாரின் திருமுன்னர் ஒளிபரப்பும் மணி விளக்கு. அவர்கள் செய்த நூல்கள் வழிவழியாக நாம் துய்த்தின்புறக் கிட்டிய உலவாக் கிழி. பிரப்பன் வலசையில் அவர்கள் அருள் பெற்ற இடத்தில் எழுந்துள்ள முருகப் பெருமானின் திருக்கோயில் பக்தியை வளர்ப்பதுடன் சைவமும் தமிழும் தழைத் தோங்கும் பல்கலைக் கழகமாக என்றும் நிலவச் செவ்வேட் பரமனை வேண்டுகின்றேன்.

C. S. கண்ணையிரம்,
கோவை, 4—11—70.



உ

# மூவர்க்கும் முதலாய பரம்பொருள்

—'o'—

(வித்துவான். சிவ, கன்னியப்பன், அரசினர் உயர்நிலைப்பள்ளி, இராணிப் பேட்டை.)

இவ்வுலகினை நன்னிலைக்கண் நிலை நிறுத்தும் பொருட்டு அயன், அரி, உருத்திரன் முதலாயினோர் தோன்றியுள்ளனர். அவர்கள் முறையே தத்தம் அதிகாரத்திற் குரியவற்றைப்படைக்கும் காத்தும் அழித்தும் வருகின்றனர். அவரினும் முதல்வராக விளங்குபவர், பரம்பொருளாகிய சிவபெருமான் ஒருவரேயாவர். அவரை இத் தன்மையர், இவ்வண்ணத்தர், இவ்வடிவினர் என எழுதிக் காட்டல் எவராலும் எக்காலும் எவ்வளவும் இயலாது. ஓதற் கரியவனாக மிளிர்கின்றவர். அப்பரம் பொருளைப்பற்றி, திருநாவுக்கரசு சுவாமிகள், திருக்கச்சியேகம்பம் — திருத்தாண் -டகத்தில்,

> "முந்தைகாண் மூவரினும் முதலா னான்காண்
> மூவிலைவேன் மூர்த்திகாண் முருக வேட்குத்
> தந்தைகாண் தண்கடமா முகத்தி னாற்குத்
> தாதைகாண் டாழ்ந்தடியேவணங்குவார்க்குச்
> சிந்தைகாண் சிந்நாத சித்தத் தார்க்குச் [தச்
> சிவனவன்காண் செங்கண்மால்விடையொன்
> எந்தைகாணெழிலாரும் பொழிலார்கச்சி[றேறும்
> யேகம்பன் காணவனென் னெண்ணத்
> [தானே

எனப் பாடுகின்றார்.

அதாவது தொண்டை நாட்டிலுள்ள காஞ்சியம்பதியில் எழுந்தருளியுள்ள பரம்பொருளாகிய ஏகம்பப்பெருமான் எல்லார்க்கும் மூத்தவனாவன். பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் ஆகிய மூவர்க்கும் முதலாக விளங்குபவனாவான். திரிசூலத்தைப் பெற்றுள்ள மூர்த்தியாவன். முருகப் பெருமானுக்கும், விநாயகப் பெருமானுக்கும் தந்தையாவன். அவனுடைய திருவடியையே வணங்குகின்றவர்களுக்கு நற்சிந்தையாகவும் சிந்திப்பவனாகவும், சிந்திக்கப்படுபவனாகவும் விளங்குபவன். இடபத்தைவாகனமாகக் கொண்டவன்; சிந்தாதசித்தத்தார்க்கும் சிவனாக விளங்கக் கூடியவன். அத்தன்மை வாய்ந்தவன் எம் உள்ளத்தில் குடி கொண்டவனாவன் என்றார் அப்பமூர்த்திகள்.

பதி, பசு, பாசம் ஆகிய மூன்றும் அழியாதது. அம்மூன்றனுள் பாசம் ஜீவர்களைப் பற்றியது, பிரம்மா, விஷ்ணு, இருவரும் சகலராகிய பசு வர்க்கத்தைச் சார்ந்தோராவர். இந்திரன் முதலாயினோரும் பசு வர்க்கத்தைச் சார்ந்தோரேயாவர். ஜீவான்மாக்களெல்லாம் பாசமாகிய கட்டுக்களினின்றும் நீங்கிப் பதியை அடைய வேண்டும். பாசமாகிய கட்டுக்களாவன: ஆணவம், கன்மம், மாயை என்பவை. இவற்றை மும்மலம் என்பர். இம் மும்மலத்தைப் போக்குதற்குரிய வழி வகைகளைப்பற்றி, ஆய்ந்தறிவதே சீவான்மாக்களின் கடனாகும். பசுக்கள் பதியின் ஆணைவழிச் செயற்படுவன. இனி, பதி இயல்பாகவே வினையின் நீங்கியவன். இக் கருத்தினை இற்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்னரே தொல்காப்பியனார்,

> "வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
> முனைவன்."

— என்று அருளிச் செய்துள்ளார்.

இறைவனது வரலாறு யாவராலும் அறிய முடியாத தொன்றாகும் திருவாசகத்தின் முதற்பகுதியாகிய சிவபுராணத்தில் "சிவனது அநாதி முறைமையான பழமை", எனப் பொருளுரைக்கப் பட்டுள்ளது. மேலும் ஐம்புலன்களை அடக்கிய முனிவர்களாலும் அறிய முடியாதவன்; இந்திரன், சந்திரன் முதலாகிய தேவர்களாலும் அறிய முடியாதவன் இறைவன் என்பதனைப் பெருந்தேவனார்,

> "மூவா அமரரும் முனிவரும் பிறரும்
> யாவரும் அறியாத் தொன்முறை மரபின்."

என அருளினார்.

அந்தணன் என்ற சொல் பரம்பொருளாகிய சிவபெருமானைக் குறிப்பதாகும்.

அற வாழியந்தணன் எனக் கடவுளையும் அந்தணர் என்போர் அறவோர் என முற்றத்துறந்த முனிவோரையும் திருவள்ளுவர் வழங்கினுலும் சிறப்பில் சிவனையே குறிக்கும் பெயர் அது 'அந்தணர்' என்ற சொல்லுக்கு 'தட்பத்தினை உடையார், என்று பொருள் விரிப்பர் பரிமேலழகர். தட்பம் என்பது அருளாகும். திருவாசகத்தில், "அளிவந்த அந்தணன்" எனப்படுகின்றது. "யாழ் கெழு மணி மிடற்று அந்தணன்" என்று பெருந் தேவனுரும், மொழிந்துள்ளனர். இதனுல் அந்தணன் இறைவன் எனப் புலனுகின்றது.

ஸ்ரீலஸ்ரீ மீனுட்சி சுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகளால் அருளிச் செய்யப் பெற்ற "இறைஞ்ஞான போதம்"—என்னும் நூலின் முதற் சூத்திரத்திலேயும் பரம் பொருளாகிய சிவபெருமானே முதலிறைவனுவான் என மொழியப் பட்டுள்ளது. அதாவது,

பெண் ஆண் அலிமுதற் பிறங்கும் உலகம்
காரியம் ஆதலின் கருத்தன் உளனும்
அவன் உலகளித்தழித் தாக்குவன்
அதனுன் முதலிறை அரனெனும் பிரானே

என்கிருர் இறைஞானபோதம் ஆசிரியர். இதனுன் நாம் அறியக் கிடப்பதாவது பெண்ணுருவாயும் ஆணுருவாயும் பெண்ணும் ஆணும் அல்லாத அலிவுருவாயும் உடல்கள் (உயிர்க்கு) விளங்குகின்றன. இவைகளெல்லாம் காரியப் பொருள்கள். இக்காரியத் துக்குரிய கருத்தா ஒருவன் உளன். அவன்தான் சிவபெருமான். எதுபோலெனின் குடம் காரியம் அக்குடமானது தானே காரியப் பொருளாகாது, குயவனுகிய கருத்தாவால் தான் காரியப் பொருளாக விளங்கும். அது போன்றுதான். இவ்வுலகின் கண் பெண் ஆண் அலி முதலிய எல்லாம் தனித் தனியாகக் கொள்ளப்படும் பேதங்கள். அவையங்கங்களாகும். அவற்றுள் ஆண் பெண் அலி வடிவங்கள் அறிவில்லாதன. இவற்றை அசேதனம் என்பர். அவ் வடிவங்களின் நின்று அவ்வசேதனப் பொருளை இயக்குவன அறிவுடைப் பொருளாகிய சேதனமாகும். ஈண்டு அசேதனங்களே காரியமாகும்.

படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் மூன்றும் அடைதலே காரியம். குடம் படைக்கப் படும், காக்கப் படும், அழிக்கப் படும். குடத்திற்கு முத் தொழிலையும் செய்யும் கர்த்தா ஒருவன் (குயவன்) உளன். அது போல இவ்வுலகமும் ஒரு கருத்தாவை உடையது அவன் தான் மூவர்க்கும் முதலாய்ப் பரம் பொருளாகிய சிவபெருமான்.

ஒரு காலத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக் கும் பகைமை உண்டாயிற்று. வாசுகி என்னும் பாம்பைக் கயிருகக்கொண்டு அசுரர் ஒரு பக்கமும் தேவர்கள் ஒரு பக்கமுமாக இருந்து பாற்கடலைக் கடைந்தார்கள். அது போது அமுதம் வந்ததைத் தேவர்கள் உண்டார்கள்; திருமகள் (இலக்குமி) தோன்றினுள். திருமால் மணந்துகொண்டார். அக் கடலைக் கடையும் போழ்து தோன்றிய நல்லவைகளையெல்லாம் எல்லோரும் பகிர்ந்து கொண்டார்கள். நஞ்சு தோன்றியது. எல்லோரும் அஞ்சி ஒதுங்கிப் போய் விட்டனர். அந் நஞ்சை உண்டு கண்டத்திலே இருக்க வைத்துக் கொண்டு உயிர்களைக் காத்த பெருமை சிவ பெருமானுர்க்கே உரியதாகும். இக் கருத்தினையே உளங்கொண்டு கடையெழுவள்ளல் களுள் ஒருவனுகிய அதியமான் நெடுமான் அஞ்சியை வாழ்த்தும் போழ்து,

நீலமணி மிடற்று ஒருவன் போல
மன்னுக பெரும நீயே

என்கிருர் நம்ஔவை மூதாட்டியார்.

சைவத்தின்மேற் சமயம்
வேறிலை அதிற்சார் சிவமாம்
தெய்வத்தின் மேற் தெய்வம் இல்

எனச் சைவ எல்லப்ப நாவலர் கூறுகின்ருர். அதாவது சைவ மதம் தான் சிறப்புடையது. அதை விடச் சிறந்த சமயம் வேறு ஒன்றில்லை. அம் மதத்தின் தலைவராக விளங்குபவர் சிவபெருமானுவர். அச்சிவ பெருமானை விட மேலானதொரு மெய்ப் பொருள் இல்லை என்பதனுல் அவரே மூவர்க்கும் முதலாய பரம் பொருள். இதுவே சைவர் பலர்க்கும் உரிய கொள்கை யாகும்.

வாழ்க அவர் நற்ருள்.

ஓம்

# அதிமோக தயாபரன்

தே. மலிங்கம், சமயப்பரப்புநர், அம்பாசமுத்திரம்.

உலகமெல்லாம் படைத்துக்காத்தளிக்கும் பரம் பொருள் குணம் குறி நாமம் ஒன்றுமில்லாத தனிப் பொருள். அது நம் மீது கொண்ட கருணையினால் நமது கருமேனி கழிக்கவே திரு மேனி கொள்ளுகிறது. பரம் பொருளின் திருமேனி வடிவே கருணை வடிவாகும். கற்பனைகடந்தசோதி கருணையே வடிவமாகி என்பது சேக்கிழார் வாக்கு செந்தூரில் வீற்றிருக்கும் முருகப் பெருமான் கருணைக் கடல்போல் விளங்குகின்றான் என்பதைக் குறிக்க வந்த குமரகுருபர அடிகள் உப்புக்கடலின் அருகில் தூய நன்னீர் வெள்ளம் போல முருகன் திகழ்கிறான் எனப் பொருளுறும், "சீரலைவாய்த் தெள்ளு திரைக் கொழிக்கும் செந்தூரில்போய்க்கருணைவெள்ளமெனத் தவிசின் வீற்றிருந்து" என்று குறிக்கிறார்

கருணையின் காரணமாகத் திருமேனி கொள்ளும் பரம் பொருள் வான் பழித்து மண் புகுந்து மனிதர்களை ஆட் கொண்டு வள்ளலாகத் திகழுகிறது. விண்ணகத் தேவரும் நண்ணவும் மாட்டா விழுப் பொருள் பக்தர்களின் கண்ணகத்தே நின்று களி தரும் போது அதன் கருணை எல்லை இல்லாதாகி விடுகிறது. திருவிசைப்பா ஆசிரியர் கரையிலா கருணைமா கடலே என்கிறார்.

சிவம் உய்யக் கொள்ளுகின்ற புவனியிற் போய் பிறவாமையில் நாளை அவமே போக்குகின்றோம் என்று மாலும் அயனும் வேதனைப்பட ஆலயங்களில் திருவுருவத் திருமேனி தாங்கி ஆன்மாக்களை ஆட் கொள்ளுகிறான் பரமன். ஆலயத்திற்கு வந்தவர்களுக்கு மட்டும் தன் இன்னருள் பாலித்தது போதாதென்று கருதி கருணை மிக்க காரணத்தால் திரு விழாக் காலங்களில் இல்லங்கள் தோறும் எழுந்தருளி தன் செங்கமலப் பொற் பாதம் தந்தருளுகின்றான். ஓடி விளையாடும் குழந்தைக்கு உணவூட்ட தாய் அதிகக் கவனம் மேற் கொள்ள மாட்டாள். ஆனால் நொண்டிக் குழந்தையாயிருந்து நோயாலும் பாதிக்கப் பட்டிருக்குமானால் சமையலறையில் உள்ள உணவு படுக்கையறைக்குச் சென்று பரிமாறப்படும். இதுபோல உள்ளது பந்தனை விறலியும் தானும் தன் பழ அடியார் குடில் தொறும் எழுந்தருளும் பரமனின் கருணை.

இப்படி தாயினும் சாலப் பரிந்தகருணையினால் அடியார்கள் பக்தி வலையில் படும் பரமன் வலிய வந்து ஆட்கொள்ளும் நிகழ்ச்சிகள் பல. அவற்றில் எல்லாம் அவனின் கருணையே மிக்கோங்கி உள்ளது. அதில் ஒன்று தான் வள்ளியெம்பிராட்டியை ஆட்கொள்ளப் பரம்பொருள் இறங்கி வந்த நிலை.

வள்ளி வேடர் குலப் பெண் தினைப் புனம் காவல் செய்யும் தொழிலை மேற் கொண்டிருந்தவள். முருகப் பெருமான் சிவனார் மகன், தந்தைக்கு உபதேசம் செய்தகுமர குரு; பிரமனைக் குட்டிச் சிறையிருத்திய கோமான்; திருமாலின் மருகன்; தெய்வயானை; மணாளன் தேவ சேனாபதி என்ன இன்னோரன்ன ஏற்றம் கொண்டவன்; வேடர் குலப் பெண்ணை விரும்பி வந்தான். அவளைக்கைக் கொள்வதற்காக வேடுவர் வேடம் பூண்டான். வேங்கை மரமாகி நின்றான். பல ஆடல்களை ஆடிக் காட்டினான். அவற்றை யெல்லாம் கந்த புராணம் விரித்துக் கூறும் அருணகிரியார் அவற்றை சுருக்கமாகச்சொல்லுகிறார்பணியா என வள்ளி பதம் பணிந்தான் என்று அவன் அவளுக்குப் பணி விடை செய்ய வேண்டும் என்ற ஆவல் காரணமாக வேலைகள் இருந்தால் தா எனக் கேட்டானும் சும்மாகேட்க வில்லையாம்; பணிந்து கேட்டானும். வள்ளி பதம் பணியும்தணியா அதிமோக தயா பரனே

> பாளைக் குழல் வள்ளி த பணியும்
> வேளைச் சுரபூபதி

என்று குறிப்பிடுகிறார்.

தான் கொண்ட மோகம் காரணமாக இப்படி ஒரு பெண்ணின் பாதம் பணிந்து பணியாஎன (பணிகள் யாவை என), பன்

மையில் கேட்பது மோகம் தலைக்கேறிய செயலைத்தான் காட்டுகிறது. ஆகவே அதி மோகம் என்கிறார் அருணகிரியார். பணியாது என்று கேட்டிருந்தால் ஒருக்கால் தொல்லை பொறுக்காமல் ஒருவேலைக் கொடுத்தால் அது செய்து முடிந்தவுடன் அவளைப் பிரிய நேரிடுமே என்ற காரணத்தாலும். வேலையைக் காரணமாக்கி அவளுடனிருக்க வேண்டுமென்ற அவாவினாலும் பணியா எனக் கேட்டான் என்ற நயம் சிந்திக்கத் தக்கது.

அதிமோகக் காரனாகத் திகழும் அவன் செயலைத் தொடர்ந்து பார்த்தால் இம் மோகம் சுறையும் என பதற்குரிய அடையாளமே தெரியவில்லை வரவரக் கூடிக் கொண்டேயிருக்கிறது உலைப்படு மெழுகதென்ன உருகியே ஒருத்தி காதல் வலைப் பட்டிருக்கிறான் ஆகவே இம்மோகம் அதிமோகம் மட்டுமல்ல தணியா அதி மோகம் என்கிறார்.

இப்படி தணியா அதி மோகம் கொண்டிருக்கிறானே அது முருகப் பெருமானுக்கு இழுக்கா என்றால் இல்லவே இல்லை என்கிறது கந்த புராணம், கலங்கிய நீரில் வானிலுள்ள சந்திரன் மங்கலாக அலை படுவதைப் பார்த்து உண்மைச் சந்திரன் அவ்வாறுயினன் என்று கொள்ளுதல் கூடாது. பிரதி பிம்பத்தில் தோன்றுகின்ற தோற்றம் இது என்னும் பொருள்பட

உலைபடு மெழுகதென்ன உருகியே
ஒருத்தி காதல்
வலைபடுகின்றான் போல வருந்தியே
இரங்கா நின்றான்
கலைப்பட்டு மதியப்புத்தேள் கலங்கலம்
புனலிற் தோன்றி
அலைப்படு தன்மைத தன்றோ அறுமுகன்
ஆட லெல்லாம்

என்று கந்தபுராணப் பாடல் அமைந்துள்ளது.

உலைக்கனலில் பட்ட மெழுகு போல வருந்திப் பணியா எனவள்ளி பதம் பணிந்து கேட்கும் தணியா அதி மோக தயாபரனாகத் திகழ் வதற்குக்காரணம் கந்தன் கருணை என்கிறார் அருணை முனிவர். அதிமோக தயாபரன் என்னும் சொற்றொடர் இதனை விளக்குகிறது.

தயை கருணையின் உருவில் இருப்பவள் தாய் தாயினும் சாலப் பரிந்த தன்மையுடையவன் இறைவன். தாயிற் சிறந்த தயா வான தத்துவனே என்பது மணிவாசகர் வாக்கு. தயையின் காரணத்தால் வள்ளி முன்பு அவன் நடித்தான் அன்புள்ளவர் போல நடித்துச் சமயம்வரும்போது நம் பொருளைக்கைப்பற்றும் திருடனைப் போல காமநோயால் வருந்துபவன் போன்று வள்ளியிடம் பணியா எனக்கேட்டானும். திருடனுக்குப் பொருளில் நாட்டம் போல் முருகனுக்கு வள்ளியிடம் நாட்டம் எனவே அவன் வள்ளி பதம் பணிந்தான். இதனை இன்னும் விளக்கலாம். சின்ன குழந்தையை தோள் மீது தூக்கி வைத்து விளையாட்டுக் காட்டுகிறார் தந்தை. தந்தை தோள் மீது இருந்து குழந்தை மகிழ்கிறது. விளையாட்டு காட்ட ஏவுகிற குழந்தைமீது கொண்ட கருணையால் அன்பால் குழந்தையைத் தூக்கி வைத்து அதன் சொல்லுக்குக்கட்டுபட்டுவிளையாட்டு காட்டுகின்ற தந்தைபோன்றுவள்ளிமீது கொண்ட கருணையினால் முருகன் வள்ளியிடம் பணிகிறான். இப்படிப் பணிவது அவனுடையக் கருணையைத் தயையை காட்டுகிறது.

பக்குவம் இல்லாத உயிர் களிடத்தச் சிறிது அன்பு இருக்குமானால் அதனையே கனல் பொறியாக வளர்த் துத்தான் சென்று ஆட்கொள்ளும் கடவுள் பண்பு முருகனிடத்து மிக்குள்ளது என்பதையே தயா பரன் என்ற சொற்றொடர் மிகநன்றாக விளக்குகிறது.

தன்னுடைய இயல்பான நிலையை மறந்து வேடரிடம் இருந்த வள்ளியை ஆட் கொள்ள எண்ணி பல பல வேடம் தாங்கிப் பணிந்து அவளிடம் பேசி பரவி ஆட் கொண்டான் முருகன். அவன் கருணைத் தெய்வம். அவனுடைய தோற்றமே கருணையின் வெளிப் பாடு தானே. போரில் முருகனைச் சந்தித்த சூரபதுமன் கூட "என்பால் நண்ணினன் அமருக்கென்கை அருள் என நாட்டலாமே" என முருகனின் அருளை - கருணையை - வியக்கிறான். கருணைத் தெய்வமான முருகனை சந்தத் தமிழ் பாடும் அருணகிரியார் தணியா அதிமோக தயாபரன் என்று குறிப்பிடுகிறார், தனது மந்திர நூலாகிய கந்தரநுபூதியில். நாமும் அதன் பொருளுணர்ந்து ஓதி முருகனை வழிபடுவோம்.

உ

# மஞ்ஞை விடு தூது.



(அருள்திரு பாம்பன் சுவாமிகள்)

பாரலர் முளரி காற்றம்
பரமெனு மோரைங் திற்கும்
ஆரண னரிய ரன்ரு
னருண்மகே சுரன்ச தா வன்
கீரனை சிவனென் ருளி
கிளக்குமே யோக தத்வஞ்
சீரனை யிவர்க்கு மேலாஞ்
சிவனையின் றழையாய் மஞ்ஞாய்.

திருப்பா - முத்தணி கொங்கையெனும் பத்து)

**மயிலே!**

பிரமனுக்குரியது நிலமென்றும் திருமாலுக்குரியது நீர் என்றும் உருத்திரற்குரியது தீயென்றும் அருள் நிறைந்த மகேசுரற்குரியது காற்று எனவும் சதாசிவற்குரியது விண் என்றும் யோகதத்துவோப நிடதம் கூறும். சிறப்புப் பொருந்திய இவர்கட்கெல்லாம் மேம்பாடுடைய இறைவனும் அறுமுகச்சிவனை இன்று அழைப்பாயாக. (யசுர் வேத யோகதத்துவோபநிடதம் "த்யாயம்ச் சதுர்முகாகாரம் சதுர்வக்த்ரம் ஹ்ரண்மயம் தாரயேத் பஞ்சகடிகாப்ருதி வீஜயமாப்நுயாத்!" எனலால் பிரமனை வழிபட்டுப் பிருதிவியை வெல்லலும், "ஸ்மரந் நாராயணம் தேவம் சதுர்பாஹும் கிரீடிநம்! தாரயேத் பஞ்சகடிகாஸ் ஸர்வபாவை: ப்ரமுச்யதே! ததோஜலாத் பயம்நாஸ்தி ஜலேம்ருதுர் நவித்யதே!" எனலால் நாராயணனை வழிபட்டு நீரை வெல்லலும் "த்ர்யக்ஷந்து வரதம் ருத்ரம் தருணாதித்ய ஸந்நிபம்! தாரயேத் பஞ்சகடிகாவஹ்நிநாஸௌ நதஹ்யதே!" எனலால் உருத்திரனை வழிபட்டுத் தீயை வெல்லலும் 'தாரயேத் தத்ரஸர்வஜ்ஞமீச்வரம் விச்வதோமுகம்! தாரயேத்பஞ்சகடிகா வாயுவத்வ்யோம கோபவேத் மரணம் நதுவாயோஸ்து பயம் பவதி யோகிந:" எனலால் மகேசுரனை வழிபட்டுக் காற்றை வெல்லலும் "ஆகாசே வாயுமாரோப்ய ஹகாரோபரிசங்கரம்! பிந்துரூபம் மஹாதேவம் வ்யோமாகாரம் சதாசிவம்! சுத்தஸ்படிகஸங்காசம் த்நத பாலேந்து சேகரம்! உமார்த்ததேஹம் வரதம் ஸர்வ காரணகாரணம் யத்ரகுத்ர ஸ்திதோ வாபி ஸுகமத்யந்தமச்நுதே!" எனலால் சர்வ காரணங்களுக்குங் காரணனாயிருக்கும் சதாசிவமூர்த்தியை வழிபட்டு விண்ணில் ஒரு கேடுமிலாதுய்யலும் பெறப்படல் காண்க.

முருகனைச் சிவன் எனலும் மேலே வந்துள ஐந்து மூர்த்திகட்குங் கடவுள் எனலும் திருப்பா - கடவுள் வணக்கம் - மூன்றும் பாடலுரையாலறிக).





## மஞ்ஞை விடு தூது / மயில்

பாரலர் முளரி காற்றம் பரமெனு மோரைந்திற்கும்
ஆரண னரிய ரன்ரு ணருண்மகே சுரன்சதாவென்
கீரணை சிவனென்ருளி கிளுக்குமே யோக தத்வஞ்
சீரணை யிவர்க்கு மேலாஞ் சிவனையின் றழையாய் மஞ்ஞாய்

# பிரப்பைப் பெருந்தவம்

(நக்கீரன்வழியடிமை. வித்துவான். பி. மா. சோமசுந்தர முதலியார்)

(குறிப்பு :- இஃது ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் புராணத்துள் வரூஉம் குமரகுரு உபதேசப்படலத்தின் ஒரு பகுதி)

1· நாகமயி லிற்பிளந்து நாகருல கைப்புரந்து
நாகமயி லைப்புணர்ந்து நாகரிக மிக்குடைய
நாகமயி லுக்கிரங்கி நாகமழைத் துத்தழுவு
நாகமரு ணற்சிகண்டி நாதனிணை யைத்தொழுவாம்

(வேறு)

மயானத்துத் தவ முயலல்

2. வயங்கொழி பிரப்பன் வலசையாம் பதியை
வந்தடைந் தனரவ னுற்றோர்
தளம்பிடு மீமத் தொருகுடிற் சமைத்துத்
தவக்குழி சதுரமாய்க் கல்லி
விளங்கிடு முள்ளான் வேலிநாற் புறமும்
வேய்ந்தனர் வீடுரு வன்பா
லுளந்தழை சீட ருவந்துபாங் கிருப்ப
வுடுபதி யெனவொளி ருரவோர்

3. தாழ்வொழி குமரன் ருளிணை நெஞ்சந்
தாழ்மினென் றினியவர்க் கருளிக்
கீழ்மையைக் கடிந்த கேடிலா நெஞ்சக்
கிழவருங் கிழக்கினு ளிழிந்தே
சூழ்படு திசையா முத்தர நோக்கி
உரைமறை முறைப்படி யமர்ந்து
சூழ்மயி லிவருஞ் சுப்பிர மணியன்
தூய்ம்மல ரடியிணை சூழ்ந்தார்.

4. குறையுரை யடியர்க் குறுகிடு குமர
குருவெனு நாமமு மோதி
மறைவழி சிரமேல் மணிக்கரங் கூப்பி
மனக்குரங் கதையொரு முகஞ்செய்
துறைநிறைத் யான யோகமேற் கொண்டு
துற்றூணு வளவினி லேற்று
முறையுறு தவத்தை முனிவரு நாளு
முயன்றன ரிறையருட் டுணையால்

நீளரவின் வருகை

5. ஆங்கது காலை யதட்டமேற் கொண்டொ
ரணிப்பொறி பணம்விரித் தொளிர்ந்து
பாங்கரி னூரும் பாந்தளு மிவர்தம்
படிவங்கண் ணுற்றெம திறைவன்
வீங்கெழின் மேனி விளங்குநன் னீற்றுன்
விளங்கிடு விபுதரென் றஞ்சி
யோங்குறு பணமு மொளித்தவ ணின்று
மோடியே வொளித்ததுங் கண்டார்

பேய்களின் ஆரவாரம்

6. புரிதவ நிலைக்குப் புன்கணைப் புரிவான்
புரிந்தல கைபல கூடித்
திரிவன சிலவாய் தெழிப்பன சிலவாய்
தெருண்டமர் செய்வன சிலவாய்
பெரியதொர் பூசல் பேமுறப் புரிந்தும்
பெருந்தவர் பெயர்ந்தில ராகப்
பரிபவங் கொண்டு பணியினி னீள்வெம்
பாசமெ லாமொழிந் தனவால்

7. ஆயது காலை யலகைகட் கரசு
மான்றவர் தமைநணி மற்றப்
பேயினி னினையேல் பித்தனே யென்னைப்
பெருந்திற லென்னொடு வருதி
நீயென நிகழ்த்தி நீணில நின்று
நெடுந்தவர் தமைக்கவர்ந் தேக
லாயதச் செயலை யடிகளு மறிந்தா
ரடித்தனர் யோகதண் டதனால்

8. தண்டுமப் பேயைத் தாக்கிடா துநிலந்
தாக்கிடல் போலடி விழலுங்
கண்டவப் பேயுங் கடுகியே தம்மைக்
கவர்தலுங் கருதுநங் குரவர்
மண்டிறும் பழித்த மலைமகண் மைந்தன்
மாண்புறு மனுவினை யோத
அண்டிய முனியு மஞ்சியே யொளித்த
தடிகளுந் தவநிலை சார்ந்தார்

9. ஆறுநா ளளவு மடிகளு மாசி லருந்தவ மாற்றலு முதலொ
டறிலானருளா லித்தவ மமையு மெழுகென வொருமொழி எழலுங்
கூறுநான் மறையுங் குறித்துரைக் கொண்ணுக் குமரவே ணின்மலர்ச் சரணே
தேறுமோர் சரணுத் தேருமிச் சிறியேன்திருமுனர் மொழிகுறை கேட்டி.

10. கடலுடை கவினுங் காசினிதன்னிற் கலாம்வினை மலங்களாற் கலக்குண்
டிடருடைப் பவஞ்சேர்ந்து மூல்சிறுமனுச ரிடும்பைகூர் வினைக்குவை எற்றிப்
படர்சிவ ஞானப் பரவையை வழங்கும் பாழிய ரெனமதி யிசையேன்
சுடர் சிவஞானச் சோதியே நீயே சொலவுள தேலருள் கென்றார்.

குமரகுரு உபதேசம் வழங்கல்

11. அவ்வுரை யுளங்கொண் டருமுறை புகழு மறுமுக னருந்தமிழ் வளர்த்த
செவ்வியல் முனியுஞ் சேவடிப் புகழைச் செறிவணப் பாவினி லிசைத்த
அவ்வியல் முனியு மெமை புடைசூழ் கென்றுணைதந் தம்பிகை மகிழுங்
கோவ்வை நல்லதரக் குறமகட் கொழு நன் கோமளத் திருவடிவுற்றான்.

வேறு

12. மான்மகளிர் தமைநீங்கி மாசுணக்கோ னுட்கவரு
நீன்மயிலுங் கொடிப்புள்ளு நீங்கியெமை யாளுடையான்
வான்பணியும் வடுக்காலும் வாரிசங்க டாம்வருந்த
பான்முலையுண் படிவத்துப் பாலனெனப் பார்வந்தான்.

13. எண்ணுமெழிற் கலைபரலா யிலங்கிடுமஞ் சிலம்பார்ப்ப
அண்ணலுரை யாகமங்க ளணிகழலி னெழில்காலப்

பண்ணவிரு மறையரையில் பகர்கோவ ணத்தொளிரக்
கண்ணனுடற் றொடிமேனி கவின்திருநீ ருய்ப்பொலிய

14. கஞ்ச மலர்க் கடவுட் கங் கண்மணி யாய்க் கவின்செய்ய
விஞ்சுகதி ரயிலத்தம் விறல்தண்டா யணிகொள்ள
நஞ்சமிட றணிபூண்ட நம்பனொடு மலையீந்த
வஞ்சியுள மகிழ்பூப்ப வள்ளலுஞ் சேய் வடிவுற்றான்

வேறு

15. மற்றை நாளிரவின் மாண்புறு நீற்றன் மணமுறு மேனியு முடித்த
கற்றைவார் சடையுங் கண்மணிக் கலனுங் கவினிரு மாதவர் தொடரக்
கொற்றவேற் குமரன் குமரனு மாண்டுக் குறுகிவே றொருதிசை நோக்கி
நிற்கவே லவற்சேர் நீர்சபை முனிவர் நிகழ்த்துவ ரடிகளை நோக்கி

16. ஞாலமி சையிணை நவிறர வாற்றே நம்பரன் சிவபிரா னருளு
நூலறி புலவ ரேக்கினும் விணக ணூறிடு மெய்பெரு மாட்டிப்
பாலமுதாடும் பரசிவ ஞானப் படிவனு மிளையவ னிவனின்
பாலருணிணைவான் படர்ந்தன னிவணின் பாக்கியத் தாலெனப் பகர்ந்தார்.

17. அக்கணத் தவனு மடிகளை நோக்கி யருண்மறை மொழியொன்றை யருளிச்
சிக்கெனக் குடபாற் சென்றன னவன்பின் சென்றன் ரந்தமா தவரத்
திக்கினை நோக்கித் திருவடி தொழுதார் திருவளர் குரவரு மிம்பர்
மிக்கதொ ரின்பமேவலின் புறமே மேவிடே னெனவவ ணிருந்தார்.

தவம் நீங்கிச் சீடர்கட் கருளல்

18 அவ்வுழை யடிகளைந்துற மேழ்நா ளருந்தவ மாற்றின ரந்நாள்
வெவ்விய நிசியில் வெடிபட வண்டம் வியனில மதிருமொர் தொனியே
கவ்விய தெங்குங் ககனமே லக்கால் கனகநற் கதிரவண் காலல்
செவ்விய றவத்துச் சீரியர் கண்டார் சிந்தையில் விம்மிதங் கொண்டார்.

19. அடிகளை நீநின் னருந்தவ நீங்கி யகலுதி யிந்நிலங் கடந்து
கடிதென வாணி கழறிடல் கேட்டிக் கானக லேனென விருந்த
படியுணர்ந் ததட்டும் பேரொலி யோடும் படிவநீ யகலுதி விரைந்திப்
படிதனை நீங்கி யென்றது கேட்டும் பண்ணவர் கேட்டிலர் போலுற்றார்

20. உரைபெறு பதினோ ருருத்திர ரிந்த வுருத்திரநிலத்தெழுந் தருள்வ
ருரைபுவி வாழ்ந ருறைதலீண் டொண்ணு தொருவிடிந் நிலமென வும்பர்
உரையெழல் கேட்டா ருன்னையா னறியே னுடம்பிடி வேந்தனு மாணை
உரைசெயி னன்றி யொருவிடே னென்றா ருமைசுத னென்பணி யென்றான்

21. அப்பணி செவியுற் றயனொடு மாலு மளந்தறி யாதவன் தன்பாற்
செப்பிய வாணை சிரமிசை சேர்த்தார் சேவடி சிந்தையில் வழிபட்
டிப்புவி நீங்கற் கிச்சையின் றெனினு மெம்பிரான் பணிகட வேனென்
றப்புவி வலம்வந் ததனையும் பணிந்தா ரவ்வன நீங்கியூர் சேர்ந்தார்.

22. அருந்தவ முற்றி யடிகளு மீண்ட தறிந்துநற் றொண்டருஞ் சூழ்ந்தே
பொருந்தினர் பாதப் போதினில் மாந்தர் புண்ணியர் தமைத்தரி சித்தே
திருந்தெழி னீற்றைத் தேசிகர் வழங்கத் திருவரு டணிவியந் தேத்திக்
கரும்பவக் கடலைக் கடந்தன மென்னுக் களிமகிழ் வெய்தின ராலோ

23. அடியவர் பால்மெய் யருளினை வழங்கு மறுமுகன் றுளிணை மலர்க்கே
படியுநன் மனமும் பாலன நீற்றின் பாங்குறு மேனியும் பவத்தைக்
கடிசடக் கரமே கமழ்திரு வாயுங் கவினுறு குரவருங் கோழிக்
கொடியுடை யரசைக் குறித்திட லல்லாற் குறிப்பயல் ஒன்றிலா தமர்ந்தார்.

உ

திருச்சிற்றம்பலம்

# முருகனும் தமிழும்



**டாக்டர். அ. மு. பரமசிவானந்தம், M. A.**

தமிழ்த்துறைத் தலைவர், சென்னை பச்சையப்பன் கல்லூரி

'முருகு' என்ற சொல்லே தமிழ்ச் சொல் அழகு என்றும் செம்மை என்றும் அதற்குப் பொருள் காண்பர். அழகனாகிய செவ்வேளை இந்த அடிப்படையில் 'முருகன்' என்றே அழைத்தனர். வரலாற்றுககாலத்துக்கு முன் பிருந்தே முருகன் தமிழ்த் தெய்வமாகப் போற்றப் பெறுகின்ருன். 'தமிழ் வேறு முருகன் வேறு' என்ற உணர்வு தமிழ் மக்களிடம் என்றும் அரும்பியதில்லை. 'தமிழே முருகன்', முருகனே தமிழ் என்ற உணாவே அவர் தம் உள்ளுணர்வாகும். தமிழும் முருகனும் காலங் கடந்து நிற்கும் செம்மைத் தெய்வங்கள் எனலாம்.

தொல்காப்பியம் தமிழர் பழம்பெரும் இலக்கணம். அதன்வழி அதற்கு முன்னமே எத்தனையோ இலக்கிய இலக்கணங்கள் தமிழில் சிறந்திருந்தன என உணர்கின்ருேம். ஆயினும் அவற்றுள் ஒன்றும் நமக்குக் கிடைககவில்லை கிடைப்பது தொல்காப்பியம் ஒனறேயாம். அத்தொல்காப்பியத்திலேயே முருகனும் வள்ளியும் போற்றப் பெறுகின்றனர். 'சேயோன் மேய்மைவரை உலகம்' எனத் தொல்காப்பியம் முருகனை மலைவாழ் தெய்வமாகக் குறிக்கின்றது. அந்த நிலை இன்றளவும் நிலவுவதைக் காண்கின்ருேமல்லவோ! குன்று தோருடும் குமரனுக முருகன் காட்சியளிக்கும் திறன் உலகறிந்த ஒன்றல்லவா! திருபபதி, பழமுதிர் சோலை போன்ற இரண்டொன்றினை மாமனுருக்கு வழங்கிவிட்ட போதிலும் கூட பெரும்பாலான மலைகளில் தொல் காப்பியர் காட்டியபடியே முருகன் தமிழ்த் தெய்வமாகத்தானே வீற்றிருக்கின்ருன், அது மட்டு மன்றி அதே சேயோனுக செம்மை வடிவம் பெற்றவனுக செம்மை சான்ற உளக் கோயிலில் வாழ்பவனுக சிறப்பெனும் செம்மைப் பொருளாக அன்ருே அவன் வாழ்கின்ருன்.

'தொல் காப்பியத்தில்' வள்ளி என்ற சொல்லும் வருகின்றது,

> 'சொடிநிலை கந்தழி வள்ளி என்ற
> வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
> கடவுள் வாழ்த் தொடு கண்ணிய
> வருமே' என்பது,

தொல் காப்பியம், 'வள்ளி' என்ற வடுவறு சிறப்பினை உடைய முதலாக எண்ணப்படும் ஒன்றினை—ஒரு தெய்வத்தைக் கடவுள் வாழ்த்தொடு சார்த்துவதாக அமைகின்றது. வள்ளி என்ற சொல்லுக்குக் கதிர் வீசும் சந்திரன் எனப் பொருள் கொள்ளுகின்றனர். இச் சூததிரத்துக்கே வேறு வகைகளில் பொருள கொள்ளுவாருமுளர் எனினும் நேரே சொல் கண்டு பொருள் நோககின் 'வள்ளி' எனச் சிறப்பிககப் பெறும் ஒன்று, தெய்வ நிலை பெற்றதாகத் தானே கொள்ளல் வேண்டும். எனவே முருகனும வள்ளியும் தமிழ் நாட்டில் வரலாற்றுசகு முன்னிருந்து வழிபட்டு வரும் தெய்வங்களாகும். இன்றும் தமிழா இவாகளை வழிபட்டுப் பயன் பெறுகின்ருர்கள் என்பது கண் கூடு.

அழகினை—இயற்கையோடு பொருந்திய நல்லழகினைப் போற்றும் திறன் பண்டை நாள் தொட்டே தமிழருக்கு உண்டு, எங்கெங்கே அழகு உண்டோ அங்கெல்லாம் ஆண்டவனைக் கண்டவர் தமிழர். இதைத் தான் இந்த நூற்ருண்டில் வாழ்ந்த பாரதி நன்கு விளக்கி கலை மகள் வாழ்த்தில் காட்டியுள்ளார். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு

முன் வாழ்ந்த நக்கீரரும் இம் முருகன் தோற்றத்தை நினைக்கும் போதே,

'உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற் கண்டாங்கு' என்ற

உவமையால் நினைந்து தம் திருமுருகாற்றுப் படையைத் தொடங்குகின்றார். ஆம் இறைவன் முருகன் உலகம் உவக்கும் வகையில் அருள் செய்கின்றவன், வெற்றிச் சின்னம் எக்காளமிட அன்பரை அணைத்து ஆள்பவன். அதனால் உலகில் வாழும் பலரும் அவன் புகழ் பாடிப் போற்றுதல் மரபும் இயற்கையுமாம். இத்தனைச் சிறப்புக்களை யும் உள்ளடக்கியே நக்கீரர் இந்த உவமையைக் கையாண்டுள்ளார்.

இவ்வாறு தமிழ் நலஞ் சான்ற முருகனே பின் தொல்காப்பியத்துக்கும் சங்ககாலத்துக் கும் இடையில் கந்தனாகவும் சுப்பிரமணியனாகவும் பிறவகையிலும் போற்றப் பெற்றான். அந்தந்த நிலைகளுக்கேற்ப நாட்டிலே பல கதைகளும் புராண மரபுகளும் இடம் பெறலாயின. அவை அனைத்தும் இம் முருகன் பெருமையைப் பலவாறு புகழ்கின்றன. அன்று தொட்டு இன்றுவரை தோன்றிய— தோன்றும் இலக்கியங்கள் அனைத்தும் அழகனாம் முருகனைப் பாடியே பரவுகின்றன. நாமும் ஒருசில காண்போம்.

சங்க இலக்கியக் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் காலத்தால் பிந்திய வாயினும், அவற்றுள் குறுந்தொகைக் கடவுள்வாழ்த்து அழகுபட முருகனைக் காட்டுகின்றது.

'தாமரை புரையும் காமர் சேவடி
பவழத்து அன்னமேனி, திகழ் ஒளி
குன்றி ஏய்க்கும் உடுக்கை குன்றின்
நெஞ்சுபக எறிந்த அம் சுடர் நெடு வேல்
சேவலம் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றால் உலகே'

என்றவாழ்த்தில் பாரதம் பாடிய பெருந்தேவனார்முருகன் எங்கணும் சாலும் செம்மைநலத்தையும் ஒளியையும் எத்துணைச் சிறப்பாக விளக்கிக் காட்டுகின்றார். இன்னும் பல் வேறு சங்க இலக்கியங்களும் இம் முருகனையும் அவன் தந்தையாகிய சிவனை யும் பலபடப் பாராட்டுகின்றன.

'ஆலமர் செல்வன் அணிசால் மகன் விழா
கால்கோள்'

(கலி—83—15 — 17) என்று சிவன் ஆலமரத்தின் கீழ் அமர்ந்து அறமுரைத்த சிறப்பையும் அவன் மகனாகிய முருகனின் விழா நாளின் தொடக்கத்தையும் கலித் தொகை அழகுறக் காட்டுகின்றது. அதே கலித்தொகை முருகன் அவுணரொடு போரிட்டு வென்று கடல் நடுவுள் நின்ற சூரனாகிய மாமரத்தைக் கொன்ற சிறப்பினை

"ஒன்னுதார்க் கடந்தடு உ
உரவுநீர் மாகொன்ற
வென் வேலான் குன்று'
(கலி - 27 - 15 - 16)

என்ற அடி அழகுறக் காட்டுகின்றது.

மற்றொரு சங்க இலக்கிய மாகிய அகநானூறும் இம்முருகனின் சிறப்பை,

'நெடுவேள் மார்பில் ஆரம் போல'
(அகநா 120-1)

என்றும்,

'சூர்மருங் கறுத்த சடரிலை நெடுவேல்
இன் படு முருகன் தண்பரங் குன்றத்து'

என்றும் பாராட்டுகின்றது மேலும் மதுரைக்கு மேற்கே உள்ள பரங்குன்றத்தில் அவனுடைய மயில் கொடி ஆட விழாக் கொண்டாடும் சிறப்பினை அதே அகநானூறு,

'கொடி நுடங்கு மருகின் கூடற் குடாஅது
பல் பொறி மஞ்ஞை வெல் கொடி உயரிய
ஒடியா விழவு' (அக 149 - 15to17)

எனக் காட்டுகின்றது. இதே கொடியினையும் யானை ஊர்தியினையும் புறநானூறு,

'மணி மயில் உயரிய மாறு வென்றி
பிணிமுகஊர்தி வொண் செய்யோன்'
(புற - 55 - 7 . 8)

எனப்பாராட்டுவதோடு. அவன் தங்கும் கடலலைக்கும் செந்திலம் பதியின் சிறப்பினை,

'வெண்தலைப் புணரி அலைக்கும் செந்தில்
நெடு வேள் நிலைஇயகாமர் வியன் துறை'
(புற 55 — 18-19.)

என்று பாராட்டுகின்றது. இவற்றுள் முருகன் தமிழ் நாட்டுப்பழம் பெருந்தெய்வம் என் பதும் செந்திலும் பரங்குன்றும் அன்று

தொட்டே அவன் உறையும் இடங்களாகப் போற்றப்பெற்றன என்பதும் அவன் சேவலங் கொடியோடு மயிற் கொடியையும் மயில் வாகனத்தோடு ஆனைவாகனத்தையும் கொண்டவன் என்பதும் அவன் ஆலமர் அண்ணலின் மகன் என்பதும், நெடுவேள் என்பதும் மாற்றுரையும் மாற்றும் ஆற்றலன் என்பதும் இயற்கையொடு இயைந்த மலையினும் கடற்கரையிலும் தங்குபவன் என்பதும் தெளிவாகின்றனவன்றோ. இத்தகைய பெருந்தெய்வமாம் முருகனை இந்த இலக்கியங்கள் சுட்டிக்காட்டுவன என்பது மட்டுமன்றி அவனையே முன்னிறுத்தி முழுகக முழுக்கப்பாடிய சங்க இலககியங்களும் உள்ளன என்பதையாரே அறியாதார்.

பத்துப் பாட்டில் முதற்பாட்டாகிய திருமுருகாற்றுப்படை இன்றும் சைவர் அனைவர் தம் பாராயண நூலாக உள்ளதன்றோ! பரிபாடல் என்னும் சங்கநூலிலே இம் முருகனை முன் நிறுத்திப் பாட்டிசைசகும் இசைப் பாடல்களும் உள்ளனவே. இவற்றின் அடிப்படையிலே அன்று தொட்டு இன்று வரை ஆயிர மாயிரம் வண்ணப் பாடல்களும் சந்தப்பாடல்களும் காவடிச் சிந்தும கசிந்துருகும் விருத்தமும் கலந்து இன்னும் எத்தனை எத்தனையோ வகைகளில் அவன் புகழ் பாடப் பெறுகின்றதன்றோ, நேற்று வாழ்ந்து நம்மிடமெல்லாம் நல்லொளி பரப்பிய பாம்பன் சுவாமிகள் போன்றார் பாடிய பாடல்களும் நம் உள்ளத்தை உருக்கி நம்மை முருகன் முன் அழைத்துச் சென்று வாழ வைப்பன அல்லவோ

இவ்வாறு பண்டு தொட்டு இன்றுவரையில் முருகன் புகழ்பாடும் தமிழ் இலக்கியங்களைப்பற்றி ஆராயத் தொடங்கின் நம் வாழ்நாள் போதாது. எத்தனைப்பிறவி எடுப்பினும் இயலாது. அவன் அருள் நலத்தை வியந்து பாராட்டிய அருணகிரியார் முருகனுக்குத் தமிழின்பால் உள்ள அன்பினை வியப்பொடு போற்றி, தமிழால் வாழ்த்தினால் மட்டு மன்றி வைதாலும் அவன் வாழவைப்பான் என்ற சிறப்பினை,

'மொய்தார் அணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால் வைதாரையும் இங்கு வாழவைப்பான்' எனப் பாராட்டுகிறார். தமிழ் இலக்கியங்கள் முருகன் தமிழ் மரபை ஒட்டி மணநத தமிழ் மணத்தைக் கோவையாகவும் சிந்தாகவும் பலவகையில் பாராட்டுகின்றன. வள்ளியும் முருகனும் தமிழ் மரபு தோன்றிய நாளிலிருந்து துலங்கிய உள்ளங்களில இடங்கொணட ஒபபுயாவற்ற தெய்வங்கள் என்பது உலகறிந்ததாகும்.

காலமெனும் எல்லையற்று ஞாலமெலாம் கடந்து அணுவுக் கணுவாய் அப்பாலுக் கப்பாலாய் ஒபபுயர்வறற ஒளிவடிவாகவும் ஒலிவாடிவாகவும் விளங்கும் முருகனை எணணி உருகாதார் இல்லை; அழகுக்கு அடிபணியாதார் உண்டோ! அந்த அழகார் முருகன் இன்றேல் தமிழ் இலலை—தமிழ் இனறேல் முருகன் இல்லை. தமிழ், முருகன் என்பன ஒரு பொருள் விளக்கும் சொற்கள் என்பது மரபு. எனவே தமிழைப் போற்றினார் முருகனைப் போற்றினார்—முருகனை வாழ்த்தினார் தமிழை வாழ்த்தினர். இந்த இரு பெருந்தெய்வங்களும்-தமிழ்மொழியும் குன்றுதோறுடுங் குமரனும்- உலகம் உள்ளளவும் வாழ்வர். அத்தகைய தெய்வவாழ்வே தமிழை உலகறி மொழியாக்கி ஓம்பவல்லது. இதை உணர்ந்து அன்றைய தமிழர்கள் வாழ்ந்தார்கள். இன்றைய தமிழர் வாழ்கிறார்கள்—இனியும வாழ்வார்கள். எனவே என்றும் முருகும் வாழும். தமிழும் வாழும். அவ் வாழ்வின் வலத்தால் வையம் வளம் பெற்றுச் சிறப்பதாக!



உ

திருச்சிற்றம்பலம்

# ஸ்ரீமத் சுவாமிகளும் வேதங்களும்



(சோ. லலிதாம்பிகை, இராணிப்பேட்டை.)

**1. முன்னுரை :—**

இறைவன் திருவுள முய்த்த வண்ணம், உயிர்கள் மலபபிணிப் பொழிப்பான் தூல வுடல் கொண்டிந் நிலத்தே தோற்ற முறு கின்றன. அவைதாம் புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப—பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்—கலலாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்—வல்லசுரராகி முனிவராய் தேவராய்ப் பிறந்து ழல் வனவாம். அவ்வுயிர்கள் கன்மபூமியுழைப்பிறந்திறத்தலின் கழிந்து, 'இந்தப் பூமி சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கிச் செந்தமிழ் நாடடகத்துத் தோனறுவ. அவ்வுயிரீட்டங்களுள், மககளாய்த் தோன்றினுருள் எளியருமெளிதுணர்ந்துலக நடை கற்றுப் பயன் துய்ப்பான் அறம், பொருள், இன்பமெனு முப்பொருளையுந் தீந்தமிழ் நூல்கள் தெரிப்பனவாக வென்று வரையறை செய்தனர் சான்றோர். அற்றுகலினன்றே, தொல்காப்பியனுரும்,

" அங்கிலை மருங்கி னறமுத லாகிய
மும்முதற் பொருட்கு முரிய வென்ப'
(செய்யுளியல் 106)

என நூற்பாவியற்றினுர்.

இனி, அங்ஙனெழுகிப் பக்குவ நிலையுற்ருா, மண். பெண், பொன் எனு மூன்றன கண்ணு முவர்ப்புத் தோற்றலுற்று, பிறவியெடுததன் பயனை வினுவத் தொடங்குவர். அத்தன்மையர் வெம்பு பவசாகரம் வெம்ப, வீட்டு நெறியுணர்வான் அவாவுவர். அவர்ககறிவுறுத்த வனச் சொல்லாடும் பெற்றியுரு வடமொழிக்கண் வீட்டு நெறியினை வித்தகச் சான்ருோர் விளம்பினா. அஃதுந் தமிழிலேயே அமைகவெனின, அஙனறிதாம், முற்றுமதியினா கைப்படடுக் கள்ளுண்டான் கரத்துளள காசெனச்சிதறியும், ஞமலிகைப்பட்ட தெங்கங்காய் போலப் பயனின்றியும் அறிவிலிகைப்பட்ட அழகுடைப்பதுமையென வணிகுலைந்தும், தந் நலத்தவா கைப்பட்டுப் பிழை பொதுளும்படி உருக்குலைந்தும் நிற்குமாலென்க.

அறம் பொருளின்பம் மூன்றும் அறையுஞ் செந்தமிழைத் 'தென்றமிழ்' எனவும் வீட்டு நெறியுணர்த்தும வடமொழியை 'வடதமிழ்' எனவும் வழஙகப்படலு மிக்கருத்தே பற்றியென்க. தெய்வப் புலமைத் திருவள்ளுவனுரும் தாம் அருளிய திருக்குறளை நாற்பாலாகவையாது முப்பாலாக ஓதியதும் வீட்டுப்பொருளிலொரு சிறிதே அறத்துப்பாலிற் காட்டியமையும் இக்கருத்தே பற்றியென்க.

**2. அருளாளர்கூற்றும் அல்லார்கூற்றும்.**

இது நோக்கியே, திருஞான சம்பந்த மூர்த்திகளும்

"மந்தபோற்றிரிந் தாரியத் தாடு
செந்தமிழ்ப்பய னறிகிலா வந்தகா"

என்று வடமொழியுணராரையும் தென்மொழிதோராரையுங் குறித்தனா என்க. திருநாவுக்கரசுகளும்,

"வட மொழியுந் தென்றமிழு மறைகளுன்கும் ஆன ன் காண்"

என்றருளியதூஉங் காண்க.

வடமொழி தென்மொழி வேற்றுமை பாராட்டிய குயக்கொண்டான், தான குயவனுயிருந்தும், ஆரியம் நனறு தமிழ் தீதெனவுரைத்தான். நற்கீரனுா, தாம் இற்றைஞான்றுள்ள போலி யாராய்ச்சியாளர் கருதுமாறு, ஆரிய மொழிக்குரிய பார்ப்பனராயிருந்தும், ஆரிய நன்றென்றுரைத்த அகங்காரியாகிய குயக்கொண்டானை ஆனந்தஞ் சேர்க சுவாஹா எனப்பாடி மரிக்கச் செய்தும், பின்னர் பலரும் வேண்ட செந்தமிழே மீளக்கொண்டுவா என அவனை உயிர் பெறச் செய்தும் அருளினர். இஃ

தொன்றே இருமொழியுந் தமிழர்மொழியே; ஆரியர் மொழி யென்பது அவலம் எனல் காட்டும். நிற்க, தமிழ்ச் சங்கத்துத் தலைமைப்புலவராய் அந் நறகீரனுர் கோபப் பிரசாதம் என்றெரு பிரபந்தம் செய்தனர். அதன் கண் வடமொழிச் சரிதங்கள் பலவும் வந்துள. அன்றியும் கோபப் பிரசாதமென்னு ம்தன பெயரே வடமொழியிலுந் தமிழர்க்குரிமையுண்டெனலை யுணர்த்தும (சைவசமயத்துச்சாற்றப்படும் தததுவங்கள் பலவும் வடமொழிப் பெயருடையனவே)

இவ்வுண்மைகளை யெல்லாம் ஓராதோ வன்றியோர்ந்தும் ஊழ்வினையுந்தலினலோ, எல்லா அணிகளு மேய்ந்திலகும் இன்ற மிழைக் குறையுடைத்தாய்த் தாமே கற்பித்துக் கொண்டு அதனுன்மான மிக்குடையராய் அக்குறையை நிறைவு செயவான் புக்குதம் மனமீர்த்த பாங்கரெலாம் திரிவு மதியினே சில கற்பிதங்களைப் படைக்கலாயினர். இவர்தம் செய்கை மூக்கு மயிர் பறித்து ஆட்பாரங்குறைக்க வெண்ணுவான் செய்கையினையே பொருவும். என்னை? அவர்தங் கற்பிதங்கள் அறிஞர் சேர் அவைக்கண் அவம்படலானென்க

இத்தன்மையர் தங்களது மதியின்மென்மையினுற் றங்களைக் கெடுத்த தோடமையாமற்றம் நூல்கற்பாரையுங கெடுவண்ண மாற்றுபவரேயாம்.

பண்டாய நான் மறைகள பைந்தமிழிலிருந்தன வென்றும் அவை கடற்கோளாலழிவுற்றன வெனறு நிறுவப்பெரிது முயற்சிப்பாரின்ஞேரில் ஒரு சாரார். அவர் கூற்றுவாய்மையேல்,

1. அப்பண்டாய நான் மறைகள் கடற்கோள் பகுதிக் கண் மட்டு மிகுந்தனவா ?
2. ஏனைய பகுதிகளி லிலவாயினவா ? இலவாயின இப்பகுதிகளி லிருந்த தமிழர் அதனை நான்மறையென வொப்பின ரன்றென்றன்ருே முடிவுறும் ?
3. கடற்கோள் பகுதியேயன்றி ஏனைய நிலத்துத் தமிழர்கள் வதிந்திலரெனின், கடற்கோளில் நூல்கள் அழிவுற மக்கள் மட்டும் தப்பி ஏனைய பகுதிகளில் புக்கன ரென்ரும். இது சாலாது. என்னை? அவர்களில் நூல் விருப்புடை எவனுமிலன் எனவே நூல்களை அழிய விட்டன ரென்ருமாகலின்.
4. கடற்கோள் பகுதிக் கண்ணும் அந் நான்மறைகள் ஏட்டு வடிவின் மட்டும் வாழ்ந்திருத்தல் வேண்டுமே ஆமெனில அவைவல்ல அறிஞரிலராயினரா? அவற்றில் ஒருமறையும் வல்லவரேயில ராயினரா? ஆயின் அந்நான் மறை வழக்கற்றுப் பெருமை கெட்டதாதல் வேணடுமே. என்னை ? களவியலுணாத்து மாறு, இலக்கணத்தும், எழுதததிகாரம. சொல்லதிகாரம், பொருளதிகாரம் உணர்ந்தாரிருந்திருப்ப உயிாக்குறுதி பயக்கும் நானமறை வலலார் இன்றெனல் அமையுமோ வென்க. அமையுமெனின், இறைவனருளிய நான்மறையினைத் தமிழரே இசையாது கல்லாது புறம்போககின ரெனரும்.
5. இறைவன் அருளிய நான்மறைகள் இறந்தன; தொல்காப்பியர் இயற்றிய இலககணம் இன்றும் வாழ்கிறது என்று கூறல் தொல் காப்பியாககு இறைவனிலும் பெருமை தருவதாம். அவன்லும் ஆறறல் மிககவா் என்பதாம இஃது ஓவவுமா?
6. தொல் காப்பியர்க்கு முன்னேயே உள்ள வடமொழி மறையுள் இறைவன் அருளிய நான்மறை இறநதன வெனல் இறைவனிலும் வலியர் வடமொழியாளர் எனபபட்டு அவமுறுமென்க.

இத்துணை மயலுரைகளை இந்நாள் ஆய்வினாவரைகின்றனர். அவற்றைக் கற்பவரும் அம்மயலிற் படுகின்றனர். அதனை நீககுவான் எழுந்ததே இக்கட்டுரை யெனக.

### 3 நான் மறை கட்குரியார் :—

நான் மறை கட்குரியார் (அவை தம்மைக் கல்லாதேயும்) தாமே என இககாலை ஒரு வகுப்பினர் உரைப்பர். அதனை ஏனறு

கொண்ட தமிழரில் ஏனையரும் அஃது ஆரியரின் வேதம் எனத் தீட்டினரே. இஃதோ ஆய்வு? அன்று. அன்று.

ஈண்டு, பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் கூறுவதாவது:—

"பிராமணத் தன்மைக்குரியது ஜீவனன்று உடம்பன்று, சாதியன்று, கல்வியறிவன்று, கருமமன்று, தருமமன்றெனத் திருஷ்டாந்த வாயிலாக விளக்கி, அங்கட் சுவாநுபவப் பிரமஞான முடையவனே பிராமணனென்று வஜ்ரசூசியுப நிடதம் முடிவு கூறுதல் போலப் பல வுபநிடத சம்மத முண்டெனபது முணர்க இதுவே யநுபவத்திற்கு மொத் தது. இப்பெற்றி யறியாதுரைப்பார் உரை களே யெல்லாம் அநீதமெனக்களைக."

"இருக்கு வேதத்தைச் சேர்ந்த ஐதரே யப் பிராஹ்மணம் 2-வது பஞ்சகத்திலுள்ள படி தாசபுத்திரனாகிய கவசஜலுசனெனும் பெயருடையான இருக்கு வேத சங்கிதை யினை யுண்டு பண்ணிய கிரந்தகர்த்தனாகக் காணப்படுதலினாலும் அங்க தேசத்தரச னுடைய அடிமைப் பெண்ணின் மகனாயகச் சீவது எனபான் ஆசியவேத முண்டுசெய்த கர்த்தர்களாகிய இருடிகளி லொருவனாக விருத்தலினாலும், புலோமனை புத்திரிசசு- காமை புத்திரி சிரத்தை—அகஸ்தியர் பத் தினி உலோபா முத்திரை—சத்தி புத்திரி கோரவி—அப்பிரீனு புத்திரிவாசகு என்னு மிப்பெண்கள் இருக்கு வேதத்திற் சில பாகங்களுக்குக் கிரந்த கார்த்தர்களாக விளங்குதலினாலுஞ் சூத்திரரும் பெண்களும் வேதமோதலா மெனவு மேறபடுகின்றது. அவ்வாறு உத்தர தேயத்துள்ள சதுர்வரு ணத்தாரும் வேதமோதுதலை யிக்காலத்துங் காணலாம்.

4 அந்தணர்—முநிவர்.

அந்தணர் என்ற சொற்பொருளே முநி என்பதற்கு மாம். அந்தணர் என்பார் ஒரு வகுப்பினரன்றே! ஆயின் முநி என்பதும் அவர் தம்மையே சாருமெனின், அற்றன்று இவ்விரு சொற்களும் யாவருக்கும் பொது வேயாம். என்னை?

"அந்தணரென்போ ரறவோர் மற்றெவ்வுயிர்க்கு செந்தண்மை பூண்டொழுக லான்" [ஞ்

எனத் திருக்குறள் தெறித்தல் காண்டி பென்பது. இது குறித்துச் சுவாமிகள் கூறி யருளுவது :—

"பாணிநீயம் 4-வது அத்தியாயம் 23-வது சூத்திரத்துள்ள வாறு மநே : + உச்ச= மநேருச்ச என்று சேரும். மந = தாது. 'மநேருச்ச' என்னும் விதியால் அந்த மகரத்தின் மீது உகரம் ஆதேசமாக வந்து கூடலும் முந—என்ருகும். ஆகவே இகரப் பிரத்யயஞ்சேர்ந்து 'முநி' எனவாம். மந = ஞானமாதலின், முநி என்பது ஞானமுடை யான், ஞானத்திருப்பவன் எனப்பொரு ளாம். மௌந முற்றிருப்போனும் முநியாவன் இஞ்ஞானமும் மௌநமும் நல்லூழுள்ள பல் வருணத்தார்க்கும் பொருந்துதலின் அவர்க் கெல்லாம் அம் 'முநி' மொழியாகு மென்க அதனாலன்றே தில்லை வாழந்தணரு ளொரு வராய கொற்றவன் குடி உமாபதி சிவா சாரியார் தாமருளிச் செய்த சேக்கிழார் புராணத்துழை வேளாள குலத்தினராய சேக்கிழார் எனக்கூறியருளினர். இத்திற மேற்கோள் பலவுள. இம்முநித்தன்மை பார்ப்பார் குலத்தவர்க்கிலா விடின் அவரும் அத்தன்மை யுளார்க்குக் கீழோராவர்."

5. ஞானம் பொது:

வேதம் ஓதுதலின் ஒருவன் ஞானத்தை யடைகின்ருன். இதனல் வேதமும் ஞான மும் யாவர்க்கும் பொதுவேயாம். இக் கருத்தைச் சுவாமிகள்,

"நான்காம் வருணத்தாராகிய விதுரனுர் பரமஞான முடையவராய் மிளிர்ந்தன ரெனப் பாரதாதி நூல்களிற் பகரப்படு கையானும், திருத்துறையூரில் ஆதிசைவ வேதியகுலத் துதித்த அருணந்தி சிவாசாரியார் திரு வெண்ணெய் நல்லூர்க்கணிருந்தருளிய வேளாள குலத்தினராய மெய்கண்ட தேவ ரிடம் ஞானுபதேசம் பெற்றமையானும் மோக்ஷகருமம் சண்டாளனிடத் திருப்பினும் அவற்றை யன்புள்ளவன் கிரகிக்கக்கட வன எனும் பொருளேயுட் கொண்ட திவ்ய சுலோகம் மநுஸ்மிருதி 2-ஆவது அத்தி

யாயத்தில் இருக்கின்றமையாலும் —— எல்லாவருணத தார்க்கும் யோகஞான மோக்ஷங்களுண்டா மென்றல் சரதம்——— முத்தி பெற்றவராகத் திருத்தொண்டர் புரா ணத்திடை வெளியாம் அறுபத்து மூவரும் பல் குலத்தா ரெனவு முணர்க.''

''நான்காம் வருணத்திற் சந்நியாசி யில்லை யெனச் சிலர் விளம்புப. சிந்திய விசுவ சாதாக்கியத்தில் பிராமணர் முதற் பத்துச் சாதியார்க்கும், பிரமசரியம், கிரு கத்தம், வானப்பிரத்தம், சந்நியாச மெனு நான்காச்சிரமு முண்டென்று விதித்தல் பெறப்படுதலானும் பிரமாண்ட புராணத்திற் கிருதயுகத்திற் பிராமண சந்நியாசி முக்கி யன் துவாபரயுகத்தில் வைசிய சந்நியாசி முக்கியனெனு நியதி பெறப்படுதலானும் அவர் விளம்பல் அணுத்துணையும் பொருந் தாதெனை மறுக்க.''

என்றருளியுள்ளமை நோக்குக என்பது.

6. முடிப்புரை.

வேதங்கள் தமக்கே உரித்தெனை விளம் பிக்கொண்டு தம்மை உயர்த்திக் கொள் ளும் நோக்குடைச் சிலரும், அச்சிலர் சொல்லைச் சிவன் சொல்லே யெனக் கொண்டு அவர் தமக்கே வேதங்களை உரி மையாக்கிவிட்டு, குதிரைக்குக் கொம்புள தெனத் தேடப்புறப்பட்ட அறிஞரைப போலத் தமிழிலே நான்மறையுள தெனக்கற் பித்தெழுதும் ஆய்வாளரும் தமிழராவா ரைத் தெய்வ நெறியினின்றும் புறம்பு நெறிகட்காளாக் குவராயினர்.

இந்நிலையில் நமது ஸ்ரீமத் சுவாமிகள், அவதரித்து 'வேதத்தைக் குறித்தவியாசம்' எனும் பெயரான 81 பக்கங்களுடை அரிய பெரிய நூலொன்றை யருளிச் செய்துள்ளார். இது ஓதுவார்க்கு மய லறுத்து உண்மை விளக்குந்தகைத்து இது சிறந்த அருள் வாக்குகள் செறிந்ததாகும் என்பது மிகையன்று.



உ

ஸ்ரீ குமரகுருதாச குருப்யோ நம:

# பிரப்பன் வலசை

*

பூமக ளியங்குலகி னல்லதமிழ் நாவலர் புலப்பு கவிதைத்
தாமமணி நங்கடவு ளென்னுமுரு கையரடி தன்னை யெணியே
நாமுன மிருந்தவள மேகிளர் நயப்புள பிரப்பன் வலசை
ஆமிதனை நண்ணுபவ ரன்புடைய ராவர்பழி யஞ்சு மனதே. (1)

தொண்டரக நின்றுநிமிர் கின்றவரு ளின்பரிவு சொந்த முறவென்
றண்டரலர் கொண்டுபுசி தம்புரியு மாதிருமு கைய ரருணுங்
கொண்டுசில வைகல்வதி தந்தவிட மென்றுயர்வு கூறு மடர்பூ
வண்டறை பிரப்பன்வல சைப்பதி யிதாகு மெனுண் மல்கு மனதே. (2)

மெய்யடிக ணெஞ்சக மிருந்து விளை யாடியருண் மெய்ய ரெனுநம்
ஐயடிக ளாமுருக வேளடி நினைந்துதனி யாகி யளிநீர்
பெய்யிருகண் மூடியுளி ருந்துணர்வு கொண்டவொர்பிரப்பன் வலசைச்
செய்யபதி யீதறிதி மெய்யறிவை நாடிடு திறத்த மனதே. (3)

சீதமதி யைச்சடையில் வைத்துமலர் வாளியுட றிய விழிசெய்
ஆதியிறை யாயகுரு சாமியெனு நம்பரனை யன்று கருதி
ஓதுமொழி விட்டக மொடுங்குநிலை கண்டவிட மென்று குயிலுங்
கோதறு பிரப்பன்வல சைப்பதி யிதாமுறுதி கொண்டமனதே. (4)

தஞ்சமென நிற்பவர்க ளஞ்சன்மி னெனச் சொலுரை தந்த ருள்புரி
நஞ்சிவ பிரானெனு மயூரமுரு கையரடி நண்ணி யுழலும்
நெஞ்சினை யொடுக்கியிர வும்பகலு நின்றவன முள்ள வளமே
விஞ்சிய பிரப்பன்வல சைப்பதி யிதாமடமை விட்ட மனதே (5)

அங்குலிக மம்பவள மென்பன வணங்கதர முங்க ருமைசால்
கங்குலினும் விஞ்சுகுழ லுந்திகழ்தெய் வானைபொரு கான வர்சுதை
தங்களொரு கொண்கனெனு நங்கடவு ணன்னினைவு தந்த தகைமை
இங்கென விளம்பிடு பிரப்பன்வல சைக்களரி யீதென் மனதே. (6)

உள்ளபடி யுன்னுபவ ருள்ளபடி யுய்ய வென வுன்னு பெரிய
வள்ளன்முரு கையர்நடு நிற்குநிலை யைச் சொலி மறைந்த விடமும்
வெள்ளைகிளர் புட்டுயி லெழுப்புகடல் வெள்ளலைகள் வீசு வளமும்
உள்ளவொர் பிரப்பன்வல சைப்பதி யிதேயுலகை யுந்து மனதே (7)

மித்தைபடு வாழ்வினை விடுத்து நிஜ வாழ்வினில் விளங்கநமையே
சுத்தமுறு கோவண முடன்றிரிய விட்டவொர் சுரேச ரடிசேர்
பத்தருயர் பூசனை புரிந்துவதி பண்புறு பிரப்பன் வலசை
இத்தலம தாமறிதி வைத்தநிலை நிற்குமென தேசின் மனதே. (8)



திருப்பிரப்பையில் **ஸ்ரீமத் சுவாமிகள்** தவமிருந்த காட்சி

தேனினு மின்புறு மினிமை சிறந்திடவென்
பானிகழ் கின்றபல் பணிகள் பறந்தற நின்
கோனுனுள் வந்தன னெனுரை குயின்றருள் செய்
ஞானந டம்புரி குகவெ னலம்பரமே
(என்று பரமனை இறைஞ்சிய குருநாதரை)

கடல் மடை திறந்த ஞானக் கவிதனை இசைத்த சீலா
திடமொடு தெளிந்த மோனத் திறத்தினை யடைந்த பாம்பன்
குடமிடை பிரப்பன் வலசைக் குகைதனி லமர்ந்த கோவே
இடம்படு வீடுநல்கி யென்றனை யேன்று கொள்ளே
(என்று நாம் வழுத்துவோமாக)

துன்றுமறு பொன் மவுலி யெண்டிசையு மின்னவதி சுந்த ரமலி
பொன்ரெடையல் கிம்புரி வயங்குமெழின் மொய்ப்புடைய பூரணரருள்
ஒன்றைநனி யுன்னியுளொ ரிங்குணர்வு கண்டவொர் பிரப்பன் வலசை
சென்றவ ரிருந்தவரு மன்புடைய ராவரறி தெய்வ மனதே. (9)

நாடரிய தெய்வமென வேமறைசொ லாறுமுக னஞ்சி வனெனுப்
பாடல்பல பாடியவொர் சோணகிரி கண்டவிரு பத்ம வடியைக்
கூடவென நாமினிது கொண்ட நடை கட்குதவி செய்த சுகுர்தர்
பீடணவி வாழிது பிரப்பன்வல சைப்பதி பிடித்த மனதே. (10)

எத்தனை யோதலஞ் சுற்றிவந் தேன்மன மெட்டுணையு
மத்தன் குமாரன் முருகனை நாட வடங்கவில்லை
பத்தர்கள் வாழ்பிரப் பன்வல சைச்செம் பதிதனிலே
சத்திய மாகக்கை கூடின தாலினித் தாழ்விலையே.

[கட்டளைக்கலித்துறை]

மாடாடுகள் பல்குந்திரு வளமேவுபி ரப்பைக்
காடாரிட மதினுனடி கருதுப்பொழு தெதுவும்
ஊடாடலி லாமேயொரு மொழியோதிம றைந்த
வாடாமுக முனியேயெனை மறவேலெனை மறவேல்.

[பெருவேண்டுகோள்]

நிலவ ளந்தரும் பிரப்பை யீமமா நிலனிருந்து நானினைநி னைந்துபோ
தலகை யைந்துநா ளெனைவ ளைந்துபே மதுவி ளைத்தகா லவைதுரத்தினுய்
வலய வாவிபோ லணுகி யென்னை மேல் வருதி யென்றெழல் புரிவியந்தரம்
விலக வேசெய்தை யிஙன நீயெனை விடுவ தென்கொல்சூ ரடுமடங்கலே

அறுதி னத்திலே மனம டங்கிமே லணுகி நாளிரு முனிவ ரோடிகல்
அறுகணோதமில் வடிவ ஞகிவந் துரைத்த வுன் பறைபிடித்த வென்றனை
இறுதி வைகன் முப்பதுட னைந்திலே பெழவ யர்ந்த வொர்களைக ணிங்கெனைத்
தறுக ணாளர்போற் கழிப்பதென் புகழ்த்தமிழ னீசனே யவிர்கு கேசனே.

[இடையறுது நிற்க விழைதல்]



சற்குணக் கவிமணி, செ. தங்கவேல்சாமி அவர்கள் இயற்றியது.

## விநாயகர் துதி

சீராரும் பிரப்பை நகர் மேவி யன்பர்
சிந்தையிருள் அகற்றுகின்ற மயூர நாதன்
பேராரும் திருத்தணியில் விளங்குகின்ற
பெருமானை, ஞானத்தின் வடிவம் தன்னை
ஏரார்ந்த இளங் களிற்றை, இன்பம் நல்கி
எவ்வுயிரும் வாழ வகை யருளும் தேவை
ஆராத காதலினுல் தொழுவார் உள்ளத்து
அமர்கோவின் பொன்னடியைச் சிந்தை செய்வாம்.

### மயூர நாதர் துதி

சிறப்புறு பிரப்பை மேவும்
சிவத்திரு மகனை மூளும்
பிறப்பொடே இறப்பும் நீக்கும்
பெரியனைக் கந்த வேளை,
குறக் குலக் கொடியை வேட்ட
குமரனை, உலகு போற்றும்
மறை புகழ் முதல்வன் தாளை
மகிழ்வுடன் சிந்தை செய்வாம்.

### அருணகிரி நாதர் துதி

கந்தனே கதியாம் என்று
கந்தனின் பதமே யெண்ணிக்
கந்தனின் புகழே பாடிக்
கசிந்துளம் உருகி அன்பர்
கந்தனைத் துதித்துப் போற்றக்
கணக்கிலாப் பாடல் செய்த
எந்தையாம் அருணை நாதர்
எழிலடி சிந்தை செய்வாம்.

### அகத்தியர் துதி

சந்தனம் மணக்கும் தெய்வத்
தன்மை சார் பொதிகை மேவிச்
செந்தமிழ் வளர்த்த ஞானத்
திருவுடை முனியே! முன்னே
அந்தமில் பரப்பு மிக்க
அலைகடல் தனையே உண்ட
வெந்திறல் அகத்தி யா! வுன்
விளரடி சிந்தை செய்வாம்.

### பாம்பன் சுவாமிகள் துதி

கந்தனை யன்றி மற்றோர்
கடவுளை மனத்தி னாலும்
சிந்தனை செய்யே னென்ற
செம்மையாம் நெறியில் நின்று
கந்தனைக் காணப் பெற்றோய்!
கவினுறும் பாம்பன் தோன்றும்
செந்தமிழ் முனியே! உன்றன்
சீரடி சிந்தை செய்வாம்.



உ

## ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள்

# அஷ்டோத்தர போற்றித் திருவகவல்



(சங்கீதபூஷணம் ஆ. க. முத்துக்குமாரசாமி பக்தர்)

செங்கம லம்தரும் செல்வமே போற்றி
அங்குக வாண்டவர்க் கடியவ போற்றி
மாசாத் தப்பரின் மைந்தரே போற்றி
தேசோ மண்டலத் திலகமே போற்றி
சேதுவிற் றேன்றிய தேவே போற்றி
நாத முதல்வனை நாடினேய் போற்றி
பாம்பனில் வளர்ந்தளி பழமே போற்றி
தீம்பயிர்க் கதிரெனத் திகழ்வோய் போற்றி
செந்தமிழ் விளக்கிச் சிறந்தோய் போற்றி
எந்தவப் பயனும் இறையே போற்றி
அருளோ டறிவும் அடைந்தோய் போற்றி
பொருளே யறியப் புகட்டினேய் போற்றி
ஐயந் தவிர்த்திடும் ஆற்றலோய் போற்றி
உய்யுந் திறன்தரும் உரவோய் போற்றி
சண்முக கவசம் தந்தோய் போற்றி
ஒண்முக வேலவர்க் குரியோய் போற்றி
ஐயமு தப்பயன் அளித்தோய் போற்றி
செய்வன திருந்தச் செய்தோய் போற்றி
திருவலங் கல்நூல் திரட்டினேய் போற்றி
பொருள் விளக்கிடுமா புனிதா போற்றி
பூரண னந்த போதா போற்றி
ஆரண மாகம மளந்தோய் போற்றி
திருப்பா வளித்த செம்மையோய்போற்றி
விருப்புறத் திட்பம் விளக்கினேய் போற்றி
ஞான வாக்கியம் நல்கினேய் போற்றி
மோன மீதென மொழிந்தோய் போற்றி
தகரநுண் வித்தை சாற்றினேய் போற்றி
மிகநுண் பொருளை விரித்தோய் போற்றி
வேத வியாசம் விளம்பினேய் போற்றி
கீத முடிவதன் கேண்மையோய் போற்றி
சேந்தன் செந்தமிழ் செய்தோய் போற்றி
ஆந்தமிழ் தேவனுக் காக்கினேய் போற்றி

பண்ணுறும் பாடல்கள் பகர்ந்தோய் போற்றி
திண்மை முருகுரை தெளிந்தோய் போற்றி
சித்திரக் கவிநனி செய்தோய் போற்றி
முத்திகொள் முடிவதை மொழிந்தோய்போற்றி
அந்தாதி பத்துபத் தருளினோய் போற்றி
எந்தைதா யெனவுவந் திருப்போய் போற்றி
சூத்தாத் துவைதம் துலக்கினோய் போற்றி
சித்தமே நிலைதரும் செயலுளோய் போற்றி
ஒலியலந் தாதி ஓதினோய் போற்றி
நிலையுணர்ந் துரைசெயும் நேர்மையோய்போற்றி
சிவஞான தீபம் செப்பினோய் போற்றி
அவஞானம் நீக்கிய ஆரிய போற்றி
குமார சுவாமியம் குயிற்றினோய் போற்றி
குமாரன் கூட்டுகால் குறியோய் போற்றி
விருப்பும் வெறுப்பும் விட்டோய் போற்றி
நெருப்பென முதல்வினை நினைந்தோய் போற்றி
நடுநிலை யேத்தும் நளினமே போற்றி
திடநிலை மொழியினைத் தெரித்தோய் போற்றி
நிலைத்த புகழின் நேர்மையோய்போற்றி
அலைத்தநூற் காணிநூல் ஆக்கினோய் போற்றி
புத்தி திருத்துநூற் புலவோய் போற்றி
அத்தன் அறுமுகற் கன்பா போற்றி
கடலே யெனுந்திறக் கலைஞ போற்றி
மடைமை யொழித்திடும் மதியோய் போற்றி
மாதிறத் தோர்தொழும் வனப்போய் போற்றி
தீதறச் செய்தவச் செழிப்போய் போற்றி
கருத்தன் கருத்துள கரும்பே போற்றி
திருத்தி வடித்தநற் றேனே போற்றி
கந்தனை நனவிலுங் கண்டோய் போற்றி
பிந்தியும் கனவினிற் பேசினோய் போற்றி
முகிலே எனக்கவி மொழிவோய் போற்றி
பகலா யொளிர்திருப் பாவோய் போற்றி
அற்புதம் ஆர்வர லாற்றவ போற்றி
பற்பல நூல்களும் பயின்றோய் போற்றி
குலங்கரு தாதருட் கொடுத்தோய் போற்றி
நலங்கருத் தோர்ந்தவர் நட்பே போற்றி
அயன்மன மடக்கியோர்க்கமுதே போற்றி
நயந்தரு குகேசனை நம்பினோய் போற்றி
வெண்ணணீ றணிந்து விளங்குவோய்போற்றி
மண்ணவர் நடைகொளா மாண்போய் போற்றி

களங்கந் தருமுரை களைந்தோய் போற்றி
விளங்குங் குமரனை விரும்பினோய் போற்றி
முனியை முருகனெனு முதல்வா போற்றி
கனிய உரைசெயுங் கருத்தோய் போற்றி
பொய்யினைக் கடிந்த புனிதா போற்றி
மெய்யதை யடைந்த மேலோய் போற்றி
உப்பு புளியொழித் துண்டோய் போற்றி
செப்பரு மறைமுதல் தேர்ந்தோய் போற்றி 80
இயற்கை ஆயும் இயல்போய் போற்றி
மயிற்றே வனைப்புகழ் வாயோய் போற்றி
பிரப்பன் வலசைப் பெருந்தவ போற்றி
உரப்பெருங் கல்வி யுடையோய் போற்றி
முற்றுந் துறந்த முனியே போற்றி
பற்றுசெவ் வேளெனப் பாடினோய் போற்றி
ஆருயிர்க் கன்புசெய் அழகோய் போற்றி
ஒருயிர்க் கடமையை உணர்த்தினோய்போற்றி
கந்தசட் டியின் பயன் கண்டோய் போற்றி
புந்திகொள் சிவனிராப் பூசையோய் போற்றி 90
சைவம் வளர்த்த தகைமையோய்போற்றி
மெய்ம்மை இலங்கிட விழைந்தோய் போற்றி
மயில்நடங் கண்டு வணங்கினோய் போற்றி
அயில்தொடர் அடியுடை ஆட்சியோய் போற்றி
சங்கரன் சேய்பதந் தடவினோய் போற்றி
மங்குத லற்றசொன் மகிமையோய் போற்றி
செக்கர்வேள் செம்மாப்பு செப்பினோய் போற்றி
பக்க மிறுமாப்பு பகர்ந்தனை போற்றி
செவ்வேட் பரமனின் சிந்தையோய் போற்றி
அவ்வேள் திருவடி யடைந்தனை போற்றி 100
ஒருவான் மயூரனுக் குகந்தோய் போற்றி
திருவான்மி யூர்தனைச் சேர்ந்தோய் போற்றி
அருணையின் முனியெனு மான்றோய் போற்றி
கருணையோ டவன்பெயர் காப்போய் போற்றி
அமரரும் புகழ்திரு வானோய் போற்றி
குமரகுருதாச குருவே போற்றி
போற்றி போற்றிநின் பொற்கழல் போற்றி
போற்றி போற்றி போற்றி போற்றியே. 108

ஸ்ரீ குமரகுருதாசப் பெருமான் திருவடிகள் வாழ்க

உ

முருகா

# பிரப்பன் வலசை முருகன் துதிப்பா



சைவநன்மணி, தெய்வக்கவிமணி, வித்துவான், க சேது இராமலிங்கம்,
தமிழாசிரியர், அரசினர் உயர்நிலைப்பள்ளி, இராமேச்சுரம்

1. செந்தமிழ்ச் சேது நாட்டில்
திகழ்ந்திடும் பிரப்பை மேவும்
கந்தனே முருகா! வேலா!
கடம்பணி தடந்தோள் வீரா!
சுந்தரா! சுடர்வேல் எந்தாய்!
சொக்கனே உமையாள் தந்த
மைந்தனே! போற்றி! போற்றி!
மலரடி போற்றி! போற்றி!

2. நல்ல பிரப்பை நகர்மேவும் வேல்முருகா!
வெல்லத் தமிழை விரும்பிடுவோய்!—கல்லால்
அடியுறுவோன் தந்த அறுமுகனே! உன்றன்
அடியேனனக்காம் அரண்.

3. பாம்பன் அடிகளுக்குப் பாதமலர் காட்டியருள்
காம்பனதோட் டாய்வள்ளி காந்தனே!—பாம்பணியும்
தேசுடையான் சேயே! திகழ்பிரப்பை நற்றேவே
பாசிலைவே லாய்! கடைக்கண் பார்.

4. தங்கவேல் சாது தணியாத் திருத்தொண்டைத்
துங்கமுடன் ஏற்றுமகிழ் தூயவனே—சங்கத்
தமிழ்வளர்த்த வாதியே தண்பிரப்பை வாழ்வே
அமிழ்தேயுன் பொற்றாள் அரண்.

5. பிரப்பன் வலசையெனும் பேரூரில் மேவிப்
பிறப்பழித்து வீடளிக்கும் பெம்மான்—சிறப்புடனே
சிந்திப்பார் தங்கள் சிறுமை தவிர்த்தருளும்
கந்தனே உன்றாள் கதி.



## பிரப்பன் வலசை

# ஸ்ரீ மயூரப்பெருமான் திருக்கோவில் தோத்திரப் பாக்கள்

திரு. சாது. அருள்ஜோதி, அமைப்பாளர், ஸ்ரீ விஜய விநாயகர் ஆலயம் மஞ்சக்கொல்லை.

சேது பதிநாட்டைச் சேர்ந்த பிரப்பன்வலசை
சாது குமரகுரு தாசர்தவத் திற்கருள்வான்
மாது உமையாள் மகன்மயூ ரப்பெருமான்
மாதவருக் கெட்டா மலர்ப்பாதம் தோய்ந்த தலம்.

பிறப்பெடுத்த பயனெய்தப் பிரப்பன்வல சையென்னும்
சிறப்புமிக்க பதியினிலே செகவாழ்வைப் புறக்கணித்த
அருந்தவசி யார்பாம்ப னடிகளுக்கன் றருள்புரிந்த
முருகவேள் துணைநமக்கு முண்டெனநாம் முன்னுவமே.

திருவளர் பிரப்பன் வலசை நின்றருளும்
சிவனார் மூத்த சேய்தாள் போற்றி
தெருளுறு மவருக் கிளையோன் மயூர
தேசிகனார்திரு வடிகள் போற்றி
பருவதன் மகளுமை பாலனை யேதொழும்
பாம்பனடிகள் பதமலர் போற்றி
அருள்குற முனியோ டறுமுகர்க் கினிய
அருணகிரியா ரடிகளே போற்றி.



With Best Compliments

உ

திருமுருகா

பாமபன் ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகள்

# அருட் பத்து



நக்கீரன் வழியடிமை வித்துவான் பி. மா. சோமசுந்தர முதலியார்

1. பண்ணமர் பாடல் பயில்தருஞ் சுவையே
   பரவுமென் பாக்கியப் பயனே
   கண்ணமர் கதிரே கருத்தமர் மதியே
   கவலைகள் காதரு மருந்தே
   உண்ணட மியற்று மொருகுக னுவந்தன்
   றொருமொழி யருள்தவச் சீலா
   எண்குமர ரகுரு தாசவென் னரசே
   எளியனை யேன்றரு ளாயே.

2. மனமடங் குறுமோர் மாண்பமை பிரப்பன்
   வலசையில் வாழ்தரு மணியே
   தினமடங் காப்போர் செய்வயிற் றிரையே
   தேடிநா னெய்த்தனன் வினையின்
   இனமடங் கில்லா தேழையேன் புலம்பி
   எந்தைநின் திருவடி யடைந்தேன்
   கனமடங் கில்லாக் காரிருள் துமித்தே
   கடையனை யேன்றரு ளாயே.

3. கங்கையைச் சடையிற் பரித்தெனு மொழிதான்
   கந்தனி னருள்தனி லுற்ற
   புங்கவ புகலா யணைந்தவர் வினைகள்
   பொடிபட நோக்கருள் பார்வைத்
   துங்கவ விங்கோர் துணையிலா தலைவேன்
   துரிசுகள் பொறுத்தருள் நலமார்
   செங்கம லத்தாள் சிரமிசைச் சூட்டிச்
   சிறியனை யேன்றரு ளாயே.

4. எழில்திகழ் நீற்றே டிணங்குகண் மணியும்
ஏர்தர வொளிர்தரு மெய்யாய்
பொழில்திகழ் பாம்பன் புகழ்பெற வுதித்த
புண்ணியா நினைப்புக லாய்க்கொள்
தொழில்திகழ் வார்தொல் வினையற ஞானத்
துறைதனிற் பயிற்றிவேற் பரமன்
கழல்திகழ் செல்வத் துய்த்தருள் கண்ணே
கடையனை யேன்றரு ளாயே.

5. விண்ணவ சிறுநூல் கிரட்டினை யருள்செய்
வித்தக வேலவற் கினியாய்
மண்ணவர் துதிநின் மலரடி தொழுவேன்
மனத்தடர் மாசினை மாய்த்தே
பண்ணவர் பகரும் பாம்பனற் பகியாய்
பணியெனை யருளியாண் டிலையேல்
கண்ணகல் ஞாலம் கரிசுசொல் லாதே
கடையனை யேன்றரு ளாயே

6. தாயினுந் தயவே தாளணை வார்பால்
தண்ணருள் நிறைந்தசற் குருவே
பேயினு மிழிந்தான் பிழைகளே மலிந்தான்
பேதையே யிவனென எண்ணி
நீயினு மிரங்கா யாயினிந் நிலத்தர்
நெடுமொழி யால்நகை யாரோ
சேயினு பயத்தாள் சிந்தைசேர் செல்வா
சிறியனை யேன்றரு ளாயே.

7. பாரியல் துன்பம் பாறிடக் கவசம்
பகர்ந்தநின் கருணையை எண்ணிச்
சூரியல் பவத்தே சுழலுவேன் அன்பர்
சூழ்ந்துநின் கிளையென வீடு
சேரிய லுணர்ந்தே சேவடி யடைந்தேன்
செழுந்தக ராலய மறைசொல்
ஆரிய அருளா ரண்ணலே அறிவே
அடியனை யேன்றரு ளாயே.

8 பொருளினில் விருப்பும் பூவையர் மயக்கும்
பொருந்தியென் புந்தியுந் திரிந்து
மருளுறு வேனோ மயிலம ரீசன்
மலரடி வழுத்தருள் இருப்பா

பொருளினில் சிந்தை புகட்டி மெய்ஞ்ஞானம்
பொலிசிவ நெறியினில் நிற்கும்
அருளுறு வேனே அறிகிலே னெந்தாய்
அடியனை யேன்றரு ளாயே.

9. அருட்பரி பூர ணனந்த போதம்
அருளிய வானவ அவனி
தெருட்சைவ சமய சரபம தருளுந்
தேசிக நூல்வல் புலவோர்
மருட்குல மிரியச் செவியறி வுறூஉச்சொல்
மாண்பவென் சிந்தையிற் குடி காள்
இருட்குல மிரிய விணையடி யருளி
எளியனை யேன்றரு ளாயே.

10. பந்தம தறுத்தாள் பன்னிரு கரத்துப்
பரமனுக் கலங்கனற் றிரட்டைச்
சந்தமொ டிசைத்த தவநிதி யேயென்
சழக்கற வருளுவ தென்றோ
சந்தநன் முனிவன் தன்னிணை யென்னத்
தரணியில் திகழுமெம் பெருமான்
கந்தனல் லிணையே கதியென நாடுங்
கடையனை யேன்றரு ளாயே.

11. அணைந்திடல் பழநிக் கழைத்தடுங் காறும்
ஆணையென் றுரைத்தசெவ் வேளுக்
கணிந்திட பஞ்சா மிருதவன் ணத்தை
அருளிய பெரியவ நின்தரள்
அணிந்திட வார்வத் தொடுதொடுத் திடுமிவ்
வணியருட் பத்தினை யோதிப்
பணிந்திடு மன்பர் பவப்பிணி யழித்துப்
பண்ணவ யேன்றரு ளாயே

திருச்சிற்றம்பலம்





திருமுருகா

# பாம்பன் சுவாமிகள் புகழ்மாலை

காவாந்தண்டலம். திருவாட்டி. இராஜாம்பாள் அம்மையார் அவர்கள்

1. வென்றமர் வேலை யேந்தும் விமலனை மனத்தி லுன்னிச்
சென்றமர் பிரப்பை தன்னிற் சிறுகுகை செய்த மர்ந்து
பொன்றிட வினைக ளோடுமன் பொருளினை யுரைத்த சேயாங்
குன்றமர் குகனைக் கண்ட குருவினை நினைகு வோமே.

2. காரிருள் துமிக்க வந்த கதிரவன் ஒளியைப் போல
நாரியைப் பாகம் வைத்தோன் நயந்திட குடிலை யோதும்
பேரருள் சேயோன் தன்னைப் பெருந்தவந் தன்னாற் பெற்றி
கூரறி வுடைய பாம்பன் குருவினை நினைகு வோமே.

3. கண்மணி போன்ற கந்தன் கழல்துதி பாடல் தன்னை
பொன்மணி யெனவும் போற்றி புவியினர் இன்பத் துய்யச்
சொன்மணி தன்னை யீந்து சுயம்புவாய் நின்ற மூர்த்தி
விண்மணி யான பாம்பன் குருவினை நினைகு வோமே.

4. அலைகடல் துரும்பைப் போலும் அனலிடு மெழுகைப் போலும்
சிலைபடு வேடன் கையிற் சிக்கிய மானைப் போலும்
மலைதனை யொத்த தோளார் மறலிதன் வினையா தம்மால்
குலைகுலைந் துலையா முன்னங் குருவினை நினைகு வோமே.

5. எண்ணறு தவங்கள் ஆற்றி எழில்திகழ் செவ்வேள் பாதம்
கணணினில் மனத்தில் நேர்ந்த கனவினிற் கண்டு வந்து
பண்ணுறு பாடல் சொன்ன பாமபன்சேர் தாசர் பாதம்
உண்ணிகழ் ஒளியாய் நிற்க வுயர்குரு நினைகு வோமே.

6. மலையென வுயர்ந்த பாவ மயலற வொழிய வெண்ணில்
கலையது பயின்றெந் நாளுங் கதிதரு ஞான மேவி
சிலை நுதல் மடந்தை மைந்தன் சிவசுதன் தன்னைக் கண்ட
தலைவனைக் காண்பாய் நெஞ்சே தகைமைசால் பிரப்பை தன்னில்

7. மொழிந்ததிஃதுறுதி யென்றே மொழிந்திடும் ஆற்ற லோனை
அழிந்துழும் மலங்கள் சாம்ப வருள்தவக் கோனை யின்பம்
செழிக்குமெய்ஞ் ஞான வாயி லெனச்சிறந்திட்ட நூல்கள்
வழுத்து கோனைப்பிரப்பன் வலசையிற் காண்பாய் நெஞ்சே

8. அண்டர்மா முனிவ ரேத்து மறுமுகன் தானைச் சார்ந்து
பண்டரும் வினைகள் பாறும் பரிசினை விழைவீர் வம்மின்
தொண்டர்தம் மேலாய் நின்று துகளறு பாம்பன் தன்னில்
எண்டிசை புகழும் ஞான குருவினை நினைகு வோமே.

9. தன்னலங் கருதா வெந்தாய் தலைவனின் பேறு பெற்றய்
உன்னிலும் மிக்கார் தம்மை யுலகினில் காண கில்லேன்
நன்னலம் அளிப்பா யென்று நாடினேன் நின்ருட்போது
பொன்னுல கோடு மற்றப் புவனமும் புகழும் வேந்தே.

10. கடல்மடை திறந்த ஞானக் கவிதனை யிசைத்த சீரா
திடமொடு தெளிந்த மோனத் திறத்தினை யடைந்த பாம்பன்
குடமிடை பிரப்பை தன்னிற் குகைதனி லமர்ந்த கோவே
இடம்படு வீடு நல்கி யென்றனை யேன்று கொள்ளே

வேறு

11. நாடவேண்டு ஞான மதை நவின்ற பரமன் நாமமதைப்
பாட வேண்டும் பரவசமாய்ப் பண்ணோ டிசைத்துப் பரவியேநாம்
தேடவேண்டும் திருவடியைத் திருவான் மிநகர் தேவென்றே
கூட வேண்டும் குறை நீக்கும் குமர குருதாசன் பெயரே

12. நாடு கின்றிலை நன்னெறியை நமனர் தமரே நண்ணிடு முன்
பாடு கின்றிலை பாம்பன்வளர் பதியின் புகழை விணமலரைத்
தேடு கின்றிலை திருவருளார் தேவே யென்று தினைத்துநின்று
கூடு கின்றிலை குமரகுரு தாச ரருள்கூ டுவதென்றே.

வேறு

13. அருள்பழுத்த தனிக்குருவே ஆரமுதே அடியவன்றன்
இருள் படலம் நீக்கியென்னை யிதுதருண மென்றருளாய்
தெருள் பழுத்த திருவான்மி நகரிறையே தேவநின்றன்
பொருட்படிவம் போற்றுகின்றேன் புண்ணியனே ஆண்டுகொள்ளே

வேறு

14. ஒற்றுமை சேர்வது முன்றனையேஉறுதுணை யாகவு கந்தனையே
கற்றவர் நாடலுன் கருத்தினையே காண அவிர்வதுன் திறத்தினையே
பற்றவர் பகர்வது பாம்பனையே பாவகி பெறுந்தாய்ப் பண்பினையே
நற்றமிழ் பாடல் நயந்தனையே ஞான குருவா யமர்ந்தனையே.

வேறு

15. அருணைமுனி நற்கீரன் அருளிசைத்த கண்மணிபைக்
கருணைபொழி வலசைதனில் கண்குளிரக் கண்டனையே
வருணமுற்ப னமெனவே வான்முகிலை நீ பொழிப
தருணமிது காண்நையுந் தமியேனைத் தாங்கருளல்.

வேறு

16. ஊன்படு சன்மந் தன்னை உய்விக்க வந்தோன் வாழ்க
கான்தனி லமர்ந்து முன்னுள் கடுந்தவம் செய்தோன் வாழ்க
சேண்படு ஞான மார்க்கம் செய்தருள் செல்வன் வாழ்க
தேன்மொழி குருவே வாழ்க திகழ்ந்தடி யார்கள் வாழ்க.





சிவமயம்

# வாழ்த்து

திரு. வை. கோபாலகிருஷ்ணன், தலைவர், ஸ்ரீ பகழிக்கூத்தர் மன்றம், சதுர்வேதமங்கலம்.

திருவளர் பாம்பன் அடிபுகழ் பரவக்
குருவருள் புரிவது குஞ்சரக் கன்றே.

1. திருவருள் திரண்டொரு தெய்வத் தோற்றமாய்
மறுவகல் மாதவம் முயன்ற வாய்மையை
இருபுறங் கணைகடல் இறைத்த நித்திலம்.
பரவிய பாம்பனில் படைத்திட் டானரோ.

2. கரத்த லின்றியே கற்பக மாமென
வரத்தை நல்கிடும் பிரப்பன் வலசையில்
பரத்து வம்பெற பாம்ப னடிகள்செய்
சிரத்தை மெய்த்தவம் புவி சிறக்கவே.

3. அரனடி யவர்திரு மறைகள் முழங்கவும்
அறவினை புரிபவர் ஆரணம் ஓதவும்
அருணகிரி முனிவன் சொலுமழகிய புகழ் அதிகவி னியகுர லொடுபலர் பாடவும்
சுரபதி நகரினை சுபகர மாக்கிய துகிர்விளை கடலலை வாய்முரு கன்றனை
சரவண தடமதில் தவழ்தரு குழவியை சதுர்மறை மங்கல மதில்வரு மறையவன்
வரகவி பதி பகழிக்கூத்தன் தொழு மழுவிடை வருகென புலவர்கள் போற்றவும்
குருமுனி முதலிய குறவர்க ளேத்திய குமரபி ரணவமும் துறவிகளோர்ந்திட
அரஹர சிவசிவ சரவண பவகுக அரிமரு கமுருக வருகென ஆர்த்திட
உருகிய மனதவர் பரவச நிலைகொள உம்பர்கள் வாழ்த்திட துந்துபிமுழங்கவே.

4. கோகனக மொத்த கோலமயி லோற்கு
மாகமுக டொட்டும் மாதளி யெழுப்ப
பூகமர மொய்க்கும் பூமுகவை வேந்தர்
வாகையுடன் தக்க மாளிகை யமைத்தார்.

5. திருவளர் தமிழ்மறை முரசொலியெனவரு திரைகடலிருபுற மெறிவளை தவழ்நகர்
பாம்பனி லொருதவக் குலத்திற் றேன்றியே
குருபர னருளிய பிரணவ குகைதனில் குமரகுருவினடி யவனென வுயரிய
தேம்படு கனிகமழ் பிரப்பன் வலசையில்
முருகனை வழிபடு மடியவர் குழுவினில் முனிதவிருறவுடன் பழகிய தவநிலை
கூம்பிய மனதொடு புவிக்குட் சார்ந்துமே
அருணையி லருள்பெறு வரகவி யருளிய அசபையி லறிவுறு மதிசய வுணர்வினில்
வாம்பரி சிகிதனில் பரத்தைக் கண்டவன்.
குமரகுருதாச னடியார்கள் நேசம் மறவேனே.

6. தாதார் குமரகுரு தாசன் அடிவாழி
நீதமார் தெய்வ நெறிவாழி — தீதகல
கோவிற் பணிக்குக் கொடுப்போர் நிதிவாழி
மாமழையும் வாழி வாழி

உ

குஹமயம்

# வாழ்த்துரை



**திரு. M. S. R. கணபதி, தலைவர், ஸ்ரீ பாம்பன் சுவாமிகள் மடாலயத் திருப்பணிக் கமிட்டி.**

தொண்டு புரிவார் வசிக்குமிடந் தோறும் தினம் போய் விளையாடும் ஸ்ரீ மயூரநாதப் பெருமான் ஒருவனையே வழி படு தெய்வமாகக் கொண்டு, அப்பெரு மான் மீது சாத்திர தோத்திர நூல்களாக 6666 பாடல்கள் அருளியவர், தென் தமிழ்க் கடலும் வடநூற்கடலும் மிக எளிதாகக் கடந்து வீறு பெற்றுயர்ந்த செந் தமிழ்ச் சித்தாந்தச் சிறப்புருவம் பாம்பன் ஸ்ரீ குமரகுருதாச சுவாமிகள் ஆவார்.

மயானபூமியில் தவமிருந்து 7 ஆம் நாள் கருணைக் குருநாதனும் ஸ்ரீ செந்திலாண்ட வன் தோன்றி ஸ்ரீ பாம்பன சுவாமிகளுக்கு உபதேசித்த தலமாம் பிரப்பன் வலசை யில், தவமியற்றி எழுபத்து ஆறு ஆண்டு களுக்குப் பின் ஸ்ரீ மயூரநாதப் பெருமானு க்கும் தொன்மைத் தமிழ் நெறியாம் சித் தாந்தச் செந்நெறியைப் பரப்பிய ஸ்ரீ பாம் பனடி கட்கும் திருக்கோவில் எழுப்பும் முயற்சியை முதன் முதல் மேற் கொண்ட பெருந்தகையாளர் பாம்பனடிகளின் சிஷ் யர் சென்னை திருவாளர் N. ஜெயராமன் ஆவார்கள்.

எங்கள் கிராமமாகிய தெய்வச்சிலை நல் லூரில் சாது தங்கவேல் சாமி அவர்களின் பொருட்டு ஸ்ரீ பாம்பன் சுவாமிகள் பெய ரில் மடம் ஒன்று கட்ட 20 செண்டு நிலம் ஸ்ரீ பாம்பன் சுவாமிகள் பெயருக்கு வாங் கினேம் என்ற செய்தி கேட்டவுடன் திரு வாளர் N. ஜெயராமன் அவர்கள் மூலம் ரூபாய் 150 விலையுள்ள பாம்பனடிகளின் பெரிய முழு உருவக்கலர் படம் ஒன்று பிரேம் போட்டு சென்னையிலிருந்து மடத் திற்கு அனுப்பி வைத்ததுடன் அவரும் அவர் மனைவி திருமதி V. அரங்கநாயகி அம்மாளும் எங்கள் கிராமத்தைத் தேடி இரண்டாண்டுகளுக்குமுன் ஒரு ஆவணி மாதத்தில் நாங்கள் எதிர்பாரா வண்ணம் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் குமரப் பெருமான்மீது கொண்ட பேரன்பும், பாம் பனடிகள்மீது கொண்டுள்ள குருபக்தியும் கண்டு நாங்கள் வியப்படைந்தோம்.

மடம் கட்டும் இடத்தையும், கிராமத் தையும் பார்த்து விட்டு மடத்திற்காக முதன் முதல் ரூபாய் 101 நன்கொடை அளித்துஊக்குவித்த அன்பே உருவான அவர்களை எங்கள் கிராம மக்கள் என்றும் மறக்க மாட்டார்கள்.

ஓராண்டுக்குமுன் ஆரம்பித்த பிரப்பன் வலசைத் திருக் கோவில் பூர்த்தியாகி கும்பாபிஷேகம் நடக்கும் இப்புனித நாளில் திருவாளர் N. ஜெயராமன் அவர் களையும், திருமதி அரங்கநாயகி அம்மை யாரையும், பல இடையூறுகளுக்கிடையே திருப்பணி வேலையைக் கண்ணுங்கருத்து மாய் விடாமுயற்சியுடன் சிலரின் எதிர்ப்பு களையும் சமாளித்துக் கோவிலைப் பூர்த்தி செய்த ஸ்ரீமயூரப் பெருமான் திருக்கோயில் திருப்பணிக் கமிட்டி செயலாளர் பிரப்பன் வலசை கர்ணம் திருமிகு T. கணேசன் பிள்ளை அவர்களையும் தெய்வச்சிலை நல் லூர் ஸ்ரீ பாம்பன் சுவாமிகள் மடாலயத் திருப்பணிக் கமிட்டி சார்பாக, நீவீர் நற் றெண்டுகள் பல இயற்ற நோயற்ற வாழ் வும் குறைவற்ற செல்வமும் எய்தி வாழ்க, வாழ்க, பல்லாண்டு வாழ்க என வாழ்த்து கிறேன். சகல செல்வ யோகமிக்க பெரு வாழ்வாம் அருள் வாழ்வைத் தங்கட்கு வழங்குமாறு குணத்தில் சிறந்த மகராசி குறத்திக் கிசைந்த குமரவேள் இருபாதத் தாமரைப் போதுகளை இறைஞ்சுகிறேன்

ஓம்: குமரகுருதாச குருப்யோ நம:

# பிறப்பை யொழிக்கும் பிரப்பை

என்னைத் தடுத்தாட் கொண்ட பரம தண்ணளி யாளராம் சற்குருநாதர் பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் அருளிச் செய்த சாத்திரங்களையும், சரித்திரத்தையும் படித்த பொழுது ஸ்ரீமத் சுவாமிகள் அருந்தவ மியற்றி ஸ்ரீ முருகப் பெருமானை ஞான குருவாகப் பெற்ற திருப் பிரப்பையில் அவர்களுக்கு ஏற்பட்ட அருளனுபவத்தை அடியில் கண்டவாறு குறிப்பிட்டுள்ளதைக் கண்ணுற்றேன்.

"சிரசின் முண்டிதமும், அரையில் ஒள்ளிய கௌபீனமும் பிரகாசிக்க என் முன்னே வந்து சொன்ன ஒரு முடிவைச் செவ்வையாக யான் உய்த்துணர்ந்த வளவிலே குற்றமற்ற மௌன முத்திரையெனப் பட்டதும், கல்லால் விருக்கத்தினடிப் புடை வைகிய இறைவன் கை காட்டாக வுள்ளதுமாகிய தகராலயப் பேரிரகசிய சுக மார்க்கமாக அதனைத் தெரிந்து கொண்டேன்."

அன்று சனகாதி நால்வருக்கு தக்ஷிணா மூர்த்தி சொரூபமாக நின்றளித்த ஞான தீக்கையை இந்நாளில் நமது ஸ்ரீமத்சுவாமிகளுக்கு அளிக்க அறுமுகப் பரமன் பாதம் தோய வந்த இத்திவ்விய தலத்தைத் தரிசிக்கப் பேரவா எழுந்தது. இப்பேறு 1967ல் தான் கிட்டியது. தவ பூமியைப் பார்த்தவுடனே ஸ்ரீ குமார பரமேஸ்வரன் எம் குருநாதரை ஆட்கொள்ளவென மனித உருக் கொண்டெழுந்தருளிய திவ்விய பூமியில் ஒரு அடையாளச் சின்னம்கூட இல்லையே என மனம் வருத்தமுற்றது. இங்கு ஒரு திருக்கோயில் அமைய வேண்டும் என எண்ணினேன்.

என் எண்ணம் திண்ணிதாக முடிவடைய அன்பர்கள் அரும்பாடு பட்டனர். அவர்கள் எடுத்துக்கொண்ட பத்திமை கொண்ட சிரத்தையைப் பாராட்டாமல் விட்டால் பேரிழுக்கு நேரிடும்.

முதன் முதலாக இப்பணிக்குப் புரவலராக அமைந்த கனம் சேதுபதி யவர்கட்கு எவ்வளவு நன்றி சொன்னாலும் தகும். எவ்வித உலகியல்களிலும் கலவாமல் இறைவழி பாட்டில் மட்டிலுமே நாட்டங் கொண்டுள்ள அரசர் பெருமானை இப்பணிக்குப் புரவலராக இருந்து நடத்தித் தரும்படி கேட்டவுடனே ஏன்று கொண்டு, ஏராளமாகப் பொருளுதவி புரிந்து திருப்பணி அழகுற அமைய ஊக்குவித்தப் பெருந்தகைக்கு மனமுவந்த நன்றி உரித்தாகுக.

தலைவர் அருள்திரு தங்கவேல் சுவாமிகள் அரும் பாடுபட்டு கண்ணும் கருத்தும் ஒன்றி ஆரம்பமுதலே இப்புனிதத் திருப்பணிக்குத் தங்களையே அர்ப்பணித்துக் கொண்டு, இத்திருக்கோயில் எழில் மிளிரச் செய்துள்ளார்கள். அவர்கள் திருவடிகளை என் சென்னியில் தாங்கி எனது நன்றியை சமர்ப்பித்துக் கொள்ளுகிறேன்.

இதற்குச் செயலாளராக அமைந்த T. கணேசம் பிள்ளையவர்கள் "படைக்கு ஒருவர்" (ஒப்பற்றவர்) எனத் திகழ்ந்து தம்முடைய சுகதுக்கங்களை மறந்து, தம்முடைய சொந்தப் பணத்தினையும் செலவு செய்து இத் திருப்பணியை முற்றுப் பெறச் செய்துள்ளார். இன்று இத் திருக் கோயில் இவ்வளவு அழகாக விளங்குதற்குக் காரணமானவர் திரு. பிள்ளையவர்களே என்பது எல்லோரும் அறிந்த உண்மை. அவருக்கும் எனது மனமுவந்த நன்றி உரித்தாகுக.

இத்திருப்பணியில் அயராது உழைத்து அழகான திருக்கோயிலை சமைத்த ஸ்தபதி திருவாளர் கோபாலகிருஷ்ண பிள்ளை அவர்களுக்கும் அவரது மருகர் திரு வே. பொன்னையாப் பிள்ளை அவர்களுக்கும் விக்கிரகங்கள் அழகாக அமைத்துக் கொடுத்த திரு. குப்புசுவாமி ஸ்தபதி அவர்களுக்கும் திருவேல் வழங்கிய

ஆலந்தூர் திரு A. பழனி அவர்களுக்கும் நன்றி உரித்தாகுக.

ஸ்ரீ மயூரப்பெருமான் திருக்கோயில் கமிட்டியில் மற்ற அங்கத்தினர்கள் எல்லோரும், முக்கியமாக திரு. அழகஅவர்களும், திரு V. திருவரங்கராஜன் அவர்களும், திரு. N. சந்தானகிருஷ்ணன் அவர்களும் இயன்ற அளவு உதவி செய்தார்கள். எல்லோருக்கும் நன்றி.

இத்திருப்பணி இனிது நடைபெறவும், ஸ்ரீமத் சுவாமிகளின் பெருமைகளை இப்பகுதியினர் தெரிந்து கொள்ளவும், அருந்தொண்டுசெய்த தமிழ்ப்பேரறிஞர் அருள்மொழி அரசு திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகளுக்கும் மன்னர் இளவல் உயர்திரு காசிநாததுரை அவர்களுக்கும் உயர்திரு சே. ரா. இராமலிங்கம் பிள்ளை அவர்களுக்கும், திருவாட்டி. K. B சுந்தராம்பாள் அம்மையாருக்கும் இம்மலர் பரிமளிக்க, அன்புடன் கட்டுரைகளும் விளம்பரங்களும் வழங்கிய பேரன்பர்களுக்கும், மற்றும் பல்லாற்றானும் இத்திருப்பணிக்கு உதவிய பேரன்பர்களுக்கும் எனது உளங்கனிந்த நன்றி உரித்தாகுக,

ஸ்ரீமத்சுவாமிகள் ஒரு குலத்தாருக்கோ, ஒரு நாட்டினருக்கோ ஒருமொழி பேசுவோருக்கோ சொந்தமானவரல்லர். செந்நெறியாம் சைவ நெறியினைச் செம்மையாக உலகுக்கு விளக்க ஸ்ரீகுமார பரமேஸ்வரானால் அனுப்பப் ட்ட வள்ளல் பெருந்தகை ஆவர். அவர்கள் இப்பூவுலகில் உள்ளோர் அனைவருக்கும் பொதுவான சொத்து. அச் சொத்தினை நாம் உரிய முறையில் கையாளுவோமாக.

இப்பிரப்பைத் திருப்பதி, ஞானிகள் புடைசூழ, ஸ்ரீ முருகப் பெருமான் மண்மீது நின்று ஞானோபதேசம் செய்த விட மாதலின் இப் பதியில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ குமார பரமேஸ்வர மூர்த்தத்தைத் திரிகரண சுத்தியுடன் வந்திப்போமானால், பிறப் பொழியும் என்பது திண்ணம் இஃதே போன்று சென்னை — திருவான்மியூரில் எழுந்தருளியுள்ள ஸ்ரீமத் சுவாமிகளின் சமாதிக் கோயிலும் மிகப் பெருமை வாய்ந்த தாகும்.

இன்று மகா கும்பாபிஷேக வைபவத்தை இனிது தங்கள் திரு முன்பு நடாத்தித் தந்த மதுரை ஸ்ரீமத் ஞான சம்பந்த சுவாமிகள் திருமடாலய ஆதீன கர்த்தர் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகளுக்கும் ஆச்சாரிய குருக்கள் சர்வசாதகம் நடராஜ குருக்கள் அவர்களுக்கும் இம்மலரினை அழகிய முறையில் ஆர்வமோடு அச்சிட்டளித்தவரும் எப்போதும் ஸ்ரீமத் சுவாமிகள்பால் மிக்க அன்பு பூண்டவருமான ஜோதி பிரிண்டர்ஸ் உரிமையாளர் திரு R. S. இராஜாபாதர் அவர்களுக்கும் மற்றும் விழாவில் கலந்து கொண்ட அறிஞர் பெரு மக்களுக்கும் மனமுவந்த நன்றி உரித்தாகுக.

அடியார்க்கு அடியேன்

அன்னையின் மேம்படு கருணையி னுற்குக
னடிகளைப் புகழ்தாசன்
தன்னைமெய் யடியவ னுக்கவென் றகம்புறஞ்
சார்ந்துவந் தேற்றமதி
சொன்னவ னுயனு பூதிசொன் னவற்குறு
சூரறுத் தெவராலும்
பன்னவொ ணுநல நல்கிய குகனுக்குப்
பல்லாண்டு கூறுதுமே

பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் திருவடிகள் வாழ்க.

உ

முருகா

திண்டுக்கல்
13-10-1970

பேரன்புடையீர்!

வணக்கம், நலம்.

பிரப்பன் வலசை சென்று ஸ்ரீமத் பாம்பன் முனீந்திரருடைய கோயிலைத் தெரிசித்தேன் மிக அழகாக அமைந்துள்ளது. எனக்கு பரம திருப்தி இப்படி அழகாக அமையும் என நான் எதிர்பார்க்கவேயில்லை. கணேசம் பிள்ளையின் ஊக்கமும், உழைப்பும் பாராட்டுதற்கு உரியவை என் மனம் பரிபூரண மகிழ்ச்சியடைந்தது.

இதற்கு மூலகாரணம் தாங்கள் தானே, தங்கட்கு குருவருள் மிகவுந் துணை புரியும். தங்கள் அன்பு இமயம் போன்றது.

அன்பன்
கிருபானந்தவாரி

திரு. N. ஜெயராமன்,
குமரகுரு இல்லம்
சென்னை-33.



வாழ்த்தும் பெரியாரும், வாழ்த்தப் படுபவரும்.

## நன்றி

இப் பிரப்பன் வலசைச் செம்பதியிலே ஸ்ரீ முருகப் பெருமான் - பாம்பன் த் குமரகுரு தாச சுவாமிகள் திருக்கோயில் எழுப்பும் பணிக்கும், இக் ாபிஷேக வைபவத்துக்கும் நிதியாலும், செயலாலும், சொல்லாலும், மற்றேனைய யாலும் உதவி செய்தவர்களுக்கும், பங்கு கொண்டவர்களுக்கும், கலந்து ண்டவர்களுக்கும் ஸ்ரீ குமார பரமேஸ்வரன் தண்ணளியும், பாம்பன் ஸ்ரீமத் குருதாச முனீந்தரர் குருவருளும் பூரணமாக சித்திக்குமாறு இறைஞ்சுகின் ம். எல்லோருக்கும் எங்கள் அன்பு கலந்த நன்றி உரித்தாகுக.

ஸ்ரீ மயூரப் பெருமான் திருக்கோயில் திருப்பணிக் கமிட்டி
பிரப்பன் வலசை